# வேர்க்குரு என்பது வெறும் அரிப்பல்ல.
# அது ஒரு சருமக்கோளாறு.



## விரைவில் நிவாரணம் பெற நைஸில்.

வெயில் காலத்தில் வியர்த்துக்கொட்டி, பிசுபிசுவென்று உடல் இருக்கையில் உங்கள் சருமத்தின் வியர்வை சுரப்பிகள் அடைத்துக்கொள்ளும். அதனால் அரிப்பு ஏற்படும், கடுமையாக சொரியத் தூண்டும்.

அப்போது சருமத்தில் தொற்று ஏற்பட வாய்ப்புண்டு.

நைஸிலில் மட்டுமே உள்ளது கிருமிகளைக் கொல்லும் க்ளோர்ஃபெனஸின். இந்த முக்கிய உட்பொருள் வேர்க்குருவுக்கு எதிராக கடுமையான செயல்புரியும். அதனால் வேர்க்குருவிலிருந்து விரைவான நிவாரணம் தருவது மட்டுமல்லாது, அதைச்செய்கையில் இதமும், சுகமும் கூடுதலாய் தரும்.




**நைஸில்**

வேர்க்குரு பவுடர்

கிருமிகளைக் கொல்லும் க்ளோர்ஃபெனஸின் அடங்கியது.

ஊர்மிளா பேட்டி

# “என் கவர்ச்சி நிலைக்காது!”

அவர் அறிமுகமானபோது அத்தனை பரபரப்பு ஏற்பட வில்லை. ஸ்ரீதேவியா, மாதுரியா என்று பாலிவுட்காரர்கள் பட்டிமன்றம் நடத்திக் கொண்டிருந்த வேளையில் ஊர்மிளாவின் வரவு பெரிய புரட்சி எதையும் செய்து விடவில்லை. ஆனால் அவர்

கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkiweekly.com ஈ மெயில்: kalki@md2.vsnl.net.in

ராம்கோபால் வர்மாவின் கண்ணில் பட்டதும் ரங்கீலா உதித்ததும்தான் தாமதம். தேசம் முழுக்கத் தீ வைத்தாற்போல அந்தப் படம் பிய்த்துக் கொண்டு ஓட, பல இளைஞர்களின் ராத் தூக்கத்தைக் கெடுத்து, மனசெல்லாம் 'தன்ஹா, தன்ஹா' என்று அடித்துக் கொள்ளச் செய்த இளமைப் புயல் இந்த ஊர்மிளா. இருபதிலிருந்து முப்பந்தைந்திற்குள் அவரவர் ஒரு வயதைச் சொன்னாலும் ஊர்மிளாவின் முகத்தில் இன்னும் ஆவின்தான் வடிகிறது.

மும்பையில் அவரைச் சந்தித்து கல்கிக்காக பேட்டி கேட்டபோது ஆர்வமுடன் சம்மதித்துப் பேசினார். பேட்டியிலிருந்து:

''இந்தியன் படம் அபார வெற்றிதான். இருந்தும் அதற்குப் பின் நீங்கள் தமிழ்ப்படம் எதிலும் நடிக்கவில்லையே?''

''நல்ல கதை, பிரச்னை தராத தயாரிப்பாளர், சிறந்த இயக்குநர் - இது மூன்றும் சரியாக அமைந்தால் மட்டுமே நான் படங்களை ஒப்புக் கொள்கிறேன். மொழி ஒரு பிரச்னையல்ல. 'இந்தியன்' எடுத்த ஏ.எம். ரத்னம் போல் ஒரு தயாரிப்பாளரோ, ஷங்கர் போன்ற ஒரு இயக்குநரோ இதுவரை தமிழிலிருந்து என்னை அணுகவில்லை. வெறும் கவர்ச்சி வேடங்களுக்குக் கூப்பிடுகிறார்கள். எனக்கு அதில் விருப்பமில்லை. ரங்கீலாவில் கவர்ச்சியாகத்தான் நடித்தேன். ஆனால் கதை என்னைச் சுற்றித்தானே பின்னப்பட்டிருந்தது? அப்படிப்பட்ட பாத்திரங்கள் கிடைத்தால் நடிப்பதில் ஆட்சேபணை இல்லை. இப்போது ஜீன்ஸ் படத் தயாரிப்பாளர் அசோக் அமிர்தராஜ் தமது அடுத்த தமிழ்ப்படத்துக்கு என்னைக் கூப்பிட்டிருக்கிறார்; நடிக்கிறேன். காரணம், படத்தின் இயக்குநர் சேரன். சேரனின் 'பொற்காலம்' பார்த்தேன். நன்றாக இருந்தது. அதன் இந்திப் பதிப்பில், மீனா நடித்த ரோலில் நான் நடிக்கிறேன்.''

**''கவர்ச்சி ஹீரோயின் என்கிற முத்திரை, நீங்கள் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் உங்கள் மேல் விழுந்து விட்ட நிலையில், ரொம்ப ஃபார்மலாக 'கேரக்டர்' பற்றியெல்லாம் பேசுகிறீர்களே?''**

''வெளிப்படையாகப் பேசுவோம். யார் கவர்ச்சியாக நடிக்கவில்லை? இந்த நாளில், இழுத்துப் போர்த்திக் கொண்டு நடித்தால், ஒரே படத்துடன் வீட்டுக்குப் போக வேண்டியதுதான். 'கதைக்கு கிளாமர் தேவையாக இருக்கு' என்பார்கள். அது பொய் என்று எனக்குத்



மனிதனை வைத்து மனிதன் இழுக்கும் ரிக்ஷாக்கள் ஒழிக்கப்படும் இந்தக் காலத்தில் பல்லக்குச் சுமப்பவர்கள் தன்னைச் சுமக்க வேண்டுமென்ற ஆசையை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறார் இந்த எம்.பி.!

விசாகப்பட்டினம் தொகுதி காங்கிரஸ் எம்.பி. சுப்பராமி ரெட்டிதான் அவர். தொகுதி மக்களின் குறைகளைக் கேட்க பவனி வந்தபோது அவருடைய இந்த ஆசை நிறைவேறியது!

ஆதாரம்: இந்தியன் எக்ஸ்பிரஸ்,

தகவல்:
**என். பங்கஜம்**

தெரியும்; இயக்குநருக்கும் தெரியும்! வற்புறுத்திக் கேட்டுப் பாருங்கள். 'கதாநாயகன் கனவிலே வரும் காட்சி' என்று சொல்லி சமாளிப்பார்கள். எல்லாம் வேஷத்துக்குள் வேஷம்தான்! என்ன செய்வது? ஒருவரை ஒருவர் பயன் படுத்திக் கொள்வதும், இளமை இருக்கும்போதே சம்பாதிப்பதும்தான் சினிமா!"

**"சித்தாந்தமெல்லாம் சரிதான். தமிழில் நடிக்க மட்டும் 'கவர்ச்சி கூடாது; கேரக்டர் வேண்டும்' என்கிறீர்களே?"**

"இந்திப் படங்களில் இரண்டு மூன்று காட்சிகளில் கவர்ச்சியாக நடித்தால் போதும். தமிழில் என்னை அழைப்பவர்கள், படம் முழுக்க கிளாமர் என்கிறார்கள். ஏற்கனவே, பாலிவுட் நடிகைகள் என்றாலே கவர்ச்சிக்குத் தான் லாயக்கு என்றொரு அபிப்பிராயம் உங்கள் ஊரில் உண்டு. மொழி விட்டு மொழிக்கு வரும்போது கொஞ்ச மாவது நம் திறமையை நிரூபித்தால்தானே அங்கும் நிலைக்க முடியும்?"

**"எல்லா நடிகைகளும் நடிக்க வந்ததை ஓர் ஆக்ஸிடண்ட் என்பார்கள். வராவிட்டால் டாக்டராகவோ, கலெக்டராகவோ ஆகியிருப்பேன் என்பார்கள். நீங்கள் எப்படி?"**

"நோ, நோ! பள்ளிக்கூட நாட்களிலேயே எனக்கு நடிப்பு ஆசை வந்து விட்டது. அப்போதெல்லாம் மீனாகுமாரி, ஹேமமாலினி, ஷர்மிளா தாகூர் இவர்களின் தீவிர ரசிகை நான்! இந்த மீடியாவின் சக்தி, பிரும் மாண்டம், இதில் கிடைக்கிற பாப்புலாரிடி இதெல்லாம் அப்போதே என்னை வசீகரிக்கத் தொடங்கி விட்டது. திட்டமிட்டு உழைத்து, நிறைய அடிபட்டுத்தான் நடிகையானேன். இன்றைய உயர்ந்த நிலையையும் அதனால்தான் பெற முடிந்தது."

**"கவர்ச்சி மூலம் இன்னும் எத்தனை நாள் ஓட்ட முடியும் என்று கருதுகிறீர்கள்?"**

"என் கவர்ச்சி நிலைக்காது என்று புரிகிறது. நடிப்பு மட்டும்தான் நிரந்தரம் என்று உணர்ந்து இருக்கிறேன். ஆனால் வாய்ப்புத் தந்தால்தானே? கூடியவரை வெறும் கவர்ச்சி வேடங்களை விலக்கியே வருகிறேன். இனி குணசித்திர வேடங்களில் மட்டும் நடிப்பது பற்றித் தீவிரமாக யோசித்து வருகிறேன்."

**"சரி. நீங்கள் அரசியலுக்கு வரப் போவதாக ஒரு செய்தி சமீபகாலமாக உலவுகிறதே? எந்தக் கட்சி என்று முடிவு செய்து விட்டீர்களா?"**

"அதெல்லாம் வெறும் வதந்தி. மார்க்கெட் இல்லாத போது அரசியல் பற்றி யோசிக்கலாம். இப்போது எனக்கு என்ன குறைச்சல்? நல்ல மார்க்கெட், கைவசம் நிறையப் படங்கள், நாடெங்கும் ரசிகர்கள்... எனக்கெதற்கு இப்போது அரசியல்?"

பேட்டி: **நந்தினி**



**"தமிழ்நாட்டு நிலை மையே சரி இல்லை!"**

**"என்ன விஷயம்?"**

**"அஞ்சாம் வகுப்புல படிக்கற என் பையனோட பரீட்சைல 'ஆட்சி கலைப்பு – சிறு குறிப்பு வரைக'ன்னு கேள்வி கேட்டிருக்காங்க!"**

**— அம்பை தேவா**




"ஜெயில் கைதிகளெல் லாம் எதுக்கு உண்ணா விரதம் இருக்காங்க?"

"மற்ற திருடர்களை யெல்லாம் கைது பண்ண ணும், இல்லாட்டி தங்களை யும் விடுதலை பண் ணணும்னு சொல்றாங் களாம்!"

*— சீர்காழி ரேவதி*



• டோனா






சராசரி மாணவிதான். என்றாலும் பள்ளிப் பருவத்திலேயே ஹாக்கி, கூடைப்பந்து போன்ற விளையாட்டுக்களில் சிறந்து விளங்கினார். ஓவியத்தில் அபார ஈடுபாடு. அக்கம் பக்கத்தில் யாரும் நண்பர்கள் கிடையாது - அவளை விட சற்றே மூத்தவனான அந்த மாணவனைத் தவிர.

அவன் குறும்புக்காரன். அவ்வப்போது (தற்செயலாகவோ அல்லது வேண்டுமென்றோ) அவனது கிரிக்கெட் பந்து அவள் வீட்டு காம்பவுண்டுக்குள் வந்து விழும். அவன் எட்டாவது படிக்கும்போது அந்த மாணவன் அவளை முதல் முறையாகத் தொலைபேசியில் தொடர்பு கொண்டான். சாதாரணப் பேச்சுதான். ஆனால் அடுத்த நாள் நடந்த பூகோளத் தேர்வு நேரம் முழுவதும் அந்தச் சிறுமி புன்னகைத்துக் கொண்டே இருந்தாள். அவனது தொலைபேசிப் பேச்சுதான் அவள் நினைவில் ஒலித்துக் கொண்டிருந்தது. "ரொம்பவும் தெரிந்த கேள்விகள் போல. அதுதான் இந்தப் பெண்

இவ்வளவு சந்தோஷமாக இருக்கிறாள்'' என்று டீச்சர் நினைத்துக் கொண்டிருக்க, உண்மையில் அந்தச் சிறுமி சராசரியான அளவுக்குக் கூட பதில்களை எழுதியிருக்க வில்லை.

சில ஆண்டுகள் கழிந்தன. இருவரின் குடும்பங்களுமே வியாபாரம் தொடர்பாக இணைந்தவர்கள்தாம். எனவே இவர்கள் சந்தித்துக் கொள்வதில் தடை எதுவும் ஏற்படவில்லை. அவனுக்குக் காலை ஒன்பதரை மணிக்குத்தான் பள்ளிக்கூடம் என்றாலும் 7:45க்கே இவளுக்கு ஸ்கூல் என்பதால் சீக்கிரமே கிளம்பி தன் காரில் அவளை ட்ராப் செய்தான். அடிக்கடி தொலைபேசியில் பேசிக் கொண்டார்கள். சண்டையும் போட்டுக் கொண்டார்கள். பெரும்பாலும் முதலில் சமாதான முயற்சிகளை எடுப்பது அவனாகத்தான் இருக்கும். அன்பு, காதலாகக் கனிந்தது.

# “அவருக்கு கிரிக்கெட்; எனக்கு நடனம்...”



சோதனை தொடங்கியது. வியாபாரத்தில் ஏற்பட்ட கருத்து வேறுபாடு காரணமாக இரு குடும்பத்தினரிடையே விரிசல்; மனத்தாங்கல்.

அந்த இளஞ்ஜோடிகளுக்குத் தெளிவாகத் தெரிந்து விட்டது - தாங்கள் மணந்து கொள்வோம் என்பதும், அந்தத் திருமணம் இரு குடும்பத்தின் எதிர்ப்புக்கிடையேதான் நடக்கப் போகிறது என்பதும். இதனால் அந்த இளைஞன் தன்னை நிலைநிறுத்திக் கொள்வதில் ஆர்வம் காட்டத் தொடங்கினான். டாட்டா இரும்புத் தொழிற்சாலையில் வேலைக்குச் சேர்ந்தான். தன் சம்பளத்தில் ஒரு சின்ன ஃப்ளாட் வாங்கினான். அப்படி வாங்கிய ஒரு வருடம் கழித்து, அவளைப் பதிவுத் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானித்தான்.

''உன் பெற்றோர் சம்மதமில்லாமல் என்னை மணக்க உனக்குச் சம்மதமா?'' என்று கேட்டான்.



''அந்த டாக்டர்கிட்ட ஆபரேஷன் பண்ணிக்கற தாக இருந்த நீங்க ஏன் கடைசி நேரத்துல வேணாம் னுட்டீங்க?''

''கம்பவுண்டர் பேரைக் கேட்டேன். சித்திரகுப்தன் னாரு...''



''நம்ம டைரக்டர் படத் தோட கதையை எந்த பத்திரி கையும் வாயைத் திறக்க மாட் டேங்கிறாரே, அவ் வளவு சீக்ரெட்டான, புதுமை யான கதையா?''

''இல்லை, கதையை ஆரம்பத்திலேயே சொல் லிட்டா அது எந்தப் படத் தோட காப்பி கதைன்னு எழுதி மானத்தை வாங்கி அப்செட் பண்ணிடுவாங் களாம்!''

– பா. ஜெயக்குமார்

அவள் ஒப்புக் கொண்டாள். திருமணம் அவனது மாமி வீட்டில் நடந்தது. மிக எளிமையாக நடந்த அத் திருமணத்தன்று புகைப்படம் கூட எடுக்கவில்லை. ரகசிய மாக, பதிவுசெய்யப்பட்ட திருமணத்தின் பதிவுச் சான்றி தழின் நகல், எப்படியோ ஒரு பத்திரிகைக்குச் சென்று விட ரகசியம், பகிரங்கமாகி விட்டது. பெற்றோர் பூமிக்கும் வானுக்குமாகக் குதித்து, ஒருவழியாக அடங்க, ஒரு வருடம் கழித்து இருதரப்புப் பெற்றோரின் விருப்பப்படி அவர்கள் மத வழக்கப்படி திருமணம் நடந்தது. முதல்வர் ஜோதிபாசு முதல், தேசிய விருது பெற்ற நடிகை தேபஸ்ரீராய் வரை திரளாக வந்து திருமணத்தை கௌரவித்தனர்.

ஹீரோ-கங்கூலி!

சௌரவ் கங்குலியின் மனைவி என்று பலரால் அறியப்பட்டாலும் டோனாவுக்குத் தனிப்பட்ட திறமைகள் பல உண்டு. பதின்மூன்று வருடங்கள் பரதமும், எட்டு ஆண்டுகள் கதக்கும் கற்றுக் கொண்டவர். சிறந்த நடனமணி என்ற மாநில விருதைப் பெற்றவர்.

"தொடக்க காலத்தில் எனது பல நடன நிகழ்ச்சி களைப் பார்க்க சௌரவ் ஆஜராகி விடுவார். ஒருமுறை என் குருவின் மகனான ரதிகாந்த்துடன் இணைந்து நான் நடனமாடியபோது சௌரவுக்குப் பொறாமை ஏற் பட்டது உண்மை. ரதிகாந்த் என் சகோதரரைப் போன் றவர் என்பதையும், ஏற்கெனவே மணமானவர் என் பதையும் விளக்க வேண்டி வந்தது'' என்கிறார் டோனா.

ஆனால் திருமணத்திற்குப் பிறகு சௌரவ் மனைவியின் உணர்வுகளை மிக மதிக்கத் தொடங்கி விட்டார்.

"பெரிதும் உழைத்து கிரிக்கெட்டில் இந்த நிலைக்கு நான் உயர்ந்ததைப் போலவே, கடினமாக உழைப்புக்குப் பிறகு நடனத்தில் இந்த உயர்ந்த நிலையை நீ அடைந் திருக்கிறாய். எனவே 'இனி நீ நடனமெல்லாம் ஆட வேண்டாம்' என்று நான் கூற மாட்டேன். தவிர கிரிக் கெட் காரணமாகப் பல நாட்கள் நான் வெளிநாடு களுக்குச் செல்ல வேண்டியிருக்கும். அப்போது உனக் குச் சரியான வடிகாலாக நடனம் அமையும்'' என்று கூறியிருக்கிறார்.

இப்போது பல கிரிக்கெட் வீரர்களின் மனைவிகள் டோனாவுக்கு நெருங்கிய தோழிகள் - தனு (மோங்கியா), அஞ்சலி (சச்சின்), ராஷ்மி (சபா கரீம்), சங்கீதா (அசாருதீன்), சுஜாதா (ராபின் சிங்) இப்படி.

''சௌரவின் அழகும், கிரிக்கெட்டில் உள்ள திறமையும்தான் என்னை அவர்பால் ஈர்த்தது. இன்று என் கனவுகள் எல்லாம் நனவாகி விட்டன. காதல் கணவன், தொடர்ந்து நடனம், அமைதியான குடும்பம். வேறென்ன வேண்டும்?'' என்று மெய்சிலிர்க்கிறார் டோனா கங்குலி. ●

— அருண்சரண்யா



# ஒரு யூஜிஎஸ் 2000 அல்லது யூஜிஎஸ் 5000 திட்டத்தின் யூனிட்தாரராக நீங்கள் இருந்தால், இப்போது யூஜிஎஸ் 10000 திட்டத்தின் யூனிட்தாரராக முடியும்.

**யூடிஐ வழங்கும் எம்என்சி செக்டார் ஃபண்ட்.**

**தனிச் சிறப்பாக யூஜிஎஸ் 2000 மற்றும் யூஜிஎஸ் 5000 யூனிட்தாரர்களுக்கு மட்டுமே.**

வழங்குகிறோம் யூனிட் குரோத் ஸ்கீம் 10000. இந்த திட்டம் யூஜிஎஸ் 2000 மற்றும் யூஜிஎஸ் 5000 யூனிட்தாரர்களுக்கென தனிச் சிறப்பாக உருவாக்கப்பட்டுள்ளது. அதிகபட்சம் பன்னாட்டு நிறுவனங்களின் பங்குகளில் முதலீடு செய்து மூலதன வளர்ச்சி மற்றும் பணப்புழக்கத்தை செயல்படுத்தும் நோக்கங்களைக் கொண்டுள்ளதே யூஜிஎஸ் 10000.

**திட்டத்தின் சிறப்பம்சங்கள் மற்றும் விவரங்கள்**

முக்கியமான பன்னாட்டு நிறுவனங்களின் மற்றும் மற்ற எளிதில் ரொக்கமாக்கப்படும் பங்குகளில் முதலீடு செய்து வளர்ச்சியை நிறைவேற்றும் ஃபண்டே இது. மாதாந்திர அடிப்படையில் பங்குகளில் நடத்தப்பட்ட வர்த்தக விவரங்கள் வெளியிடப்படும்.

25 மார்ச் 1998 அன்று யூனிட் டிரஸ்டின் புத்தகங்களில் பட்டியலிடப்பட்ட யூஜிஎஸ் 2000 மற்றும் யூஜிஎஸ் 5000 யூனிட்தாரர்களுக்கு இந்த வழங்கீடு உரித்தாகும்.

ஆரம்ப வழங்கீடு யூனிட்டிற்கு ரூ.10/- என்றவாறு சம விலைக்கு வழங்கப்படும். குறைந்தபட்ச முதலீடு 500 யூனிட்கள் மற்றும் அதற்கு மேலாக 100-ன் மடங்குகளில் முதலீடு செய்ய வேண்டும். முதலீட்டிற்கான உச்ச வரம்பு 1000 யூனிட்கள்.




**வழங்கீடு 15 ஏப்ரல் முதல் 29 மே 1998 வரை நடப்பிலிருக்கும்.**

இது ஒரு ''இன்டெர்வெல்'' ஃபண்டாக இருப்பதால், ஆரம்ப வழங்கீட்டிற்கு 6 மாதங்களுக்குப் பின் ஒவ்வொரு மாதம் 7 நாட்களுக்கு மட்டுமே, என்ஏவி விலையில் மறுகொள்முதல் செய்ய முடியும்.

இந்த ஆரம்ப வழங்கீட்டிற்குப்பின், டிரஸ்ட் நிர்ணயிக்கும் முறையான இடைவெளியில், என்ஏவி விலையில் 3% அதிகமாக விலையிடப்பட்டு விற்பனை செய்யப்படும். வருமான வரிச் சட்டம் 1961 பிரிவுகள் 48 மற்றும் 112-ன் கீழ் வரிச் சலுகைகள்.

வருமான வரிச்சட்டம் 1961 பிரிவுகள் 54 EA மற்றும் 54 EB-ன் கீழ் மூலதன ஆதாய வரி விலக்குகள்.

யூஜிஎஸ் 2000 மற்றும் யூஜிஎஸ் 5000 யூனிட்தாரர்களுக்கு ஒருங்கிணைந்த விண்ணப்பப் படிவங்கள் (சிஏஃப்) அனுப்பப்பட்டுள்ளன. 20 ஏப்ரல் 1998 வரை உங்களுக்கு விண்ணப்பப்படிவம் வந்து சேராவிட்டால், நீங்கள் ஒரு நகலுக்காக விண்ணப்பம் செய்யலாம். இத்தகைய வேண்டுகோள்கள் இத்திட்டத்தின் ரெஜிஸ்ட்ரார்களான M/s. டிசிஎல் நிறுவனத்தின் மும்பை, கல்கத்தா, சென்னை மற்றும் புதுதில்லி அலுவலகங்களில் ஏப்ரல் 28, 1998க்கு முன் வந்து சேர வேண்டும்.

மேற்கொண்டு விவரங்களுக்கு ஏதாவதொரு யூடிஐ கிளை அலுவலகத்தை, முக்கிய பிரதிநிதியை அல்லது முகவரை அணுகவும்.




**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

*உங்கள் மேலான எதிர்காலத்திற்கு*

பாதிப்பு நிலைமைகள் : பரஸ்பர ஃபண்டுகளில் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யப்படும் அனைத்து முதலீடுகள் மார்க்கெட் ஏற்றத் தாழ்விற்கு உட்பட்டவை. திட்டத்தின் என்ஏவி செக்யூரிட்டி மார்க்கெட்டுகளை பாதிக்கும் காரணிகளால் ஏறவும் இறங்கவும் செய்யலாம். கடந்தகால செயல்பாடு எதிர்கால விளைவுகளை குறிப்பதாக கருதலாகாது. யூஜிஎஸ் 10000 என்பது திட்டத்தின் பெயரே தவிர, திட்டத்தின் தரத்தை, அதன் எதிர்கால ஆதாயங்களை ஒருவகையிலும் குறிப்பிடுவதாகக் கருதலாகாது. முதலீடு செய்யும் முன் வழங்கு பத்திரத்தை தயவு செய்து படித்திடவும்.

*மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, **சென்னை** 600 001. போன் : 517101.*

*கிளை அலுவலகங்கள் : • **கோயம்புத்தூர்** போன் : 214973 • **சென்னை** போன் : 517101, 517190 • **மதுரை** போன் : 38186 • **திருச்சி** போன் : 760060*

019/98 M. TAM B

**வா**கினி ஸ்டுடியோவில் இருளோவென்று இருந்தது அந்த செட். அதன் ஒரு பக்கத்தை மட்டும் வெளிச்ச மண்டலமாக்கி, ட்ரை ஐஸ் போட்டு, புகை பரவ விட்டு, நடுவில் ஸ்லோமோஷனில் நடந்து வந்து கொண்டிருந்தார் விஜயகாந்த்.

நமக்கு மண்டை குடைய ஆரம்பித்து, அவர் அருகே சென்று, "என்ன சார், எல்லாப் படமும் இதே மாதிரி ஜிகினாத்தனமாகவே தர்றீங்களே? உங்களுக்கே போரடிக்கலையா?" என்று கேட்டு விட்டோம்.

"சினிமான்னாலே சில விஷயங்கள் ரிபீட் ஆவதைத் தவிர்க்க முடியாது. அதுவும் ஆக்ஷன் படம்னா கேக்கவே வேணாம்! மக்கள் எதிர்பார்க்கறதைத்தான் நாங்க செய்ய ஆசைப்படறோம். என்னாலானது, ஒரே மாதிரி கேரக்டர்கள்ள நடிக்கறதைக் குறைச்சிட்டேன். இன்ஸ்பெக்டரா நான் நடிச்சி மூணு வருஷம் ஆவுது."

"ஆனா, ஃபார்முலாவை மாத்த மாட்டேங்கறீங்களே?"

"நான் ஆக்ஷன் படங்கள்தான் அதிகம் செய்யறேன். இந்த மாதிரிப் படங்கள்ல, அடிதடி, காதல், பழிக்குப் பழி, சென்டிமென்ட் எல்லாம் சேர்றது இயற்கை. ஆங்கிலப் படங்களில் பார்த்தீங்கன்னாக் கூட இந்த ஃபார்முலாதான். ஸில்வஸ்டார் ஸ்டாலோன், ஜாக்கி சான் படங்கள் எல்லாம் இந்த ஃபார்முலாதானே? ஆனா ஹிட் ஆகுதா, இல்லையா?"

"புலன் விசாரணை, சின்ன கவுண்டர், வைதேகி காத்திருந்தாள், அம்மன் கோவில் கிழக்காலே - இந்த மாதிரி நாலஞ்சு படங்கள்தான் உங்களதுலே சூப்பர் ஹிட்னு சொல்லிக்கறா மாதிரியான படங்கள். ஆனா நூறு படங்களுக்கு மேல நடிச்சிட்டீங்க. பெரும்பாலான படங்கள் ஏன் தோல்வி ஆகுது?"

"நல்ல கதை கிடைக்க மாட்டேங்குது. சமீபத்துல கூட அம்பது கதை கேட்டேன். எதுவுமே சரியில்லை. அப்புறம் எப்படி ரசிகர்கள் மனசைத் தொடறது? வேற வழியில்லாம மறுபடி மறுபடி ஆக்ஷன் படத்துக்கே போக வேண்டியதாயிடுது!"

"அதுலயே கொஞ்சம் வித்தியாசமா முயற்சிக்கலாமே?"



# ..அவார்டு என்பது

''சமீபத்துல 'உளவுத் துறை' படத்துல இங்கிலீஷ் பட ரேஞ்சுக்கு காட்சிகள் வெச்சிருந்தோம். ஆனா இங்கிலீஷ் படங்கள்ல லாஜிக் பார்க்காத ஜனங்க தமிழ்ப் படங்களில் மட்டும் லாஜிக் எதிர் பார்க்கறாங்க. நம்ம முதல்வர் கூட அந்தப் படத்தைப் பார்த்துட்டு, 'ஏன்

# ஜெய்ப்பு!''



வெள்ளைக்காரன் செய்ய வேண்டிய காரியத்தை நீங்க செஞ்சிங்க?'ன்னு கேட்டாரு.''

''குடும்பக் கதைகள் எடுக்கலாமே? அதுல ஃபெய்லியர் பர்சன்டேஜ் குறைவு இல்லையா?''

''என் ஆசை மச்சான் எடுத்தோம். என்ன ஆச்சு? பெரிய பெரிய இயக்குநர்களுக்கே எது ஜெயிக்கும் என்ற விஷயம் இன்னும் குழப்பம்தான்.''

''நிறைய தோல்விப் படங்கள் - உங்க தயாரிப்புல வரும்போது உங்க ரியாக்ஷன் எப்படி இருக்கும்?''

''தோல்வி பார்த்துக் கலங்கறது கிடையாது. சின்ன வயசுலேருந்தே நிறைய அடி பட்டிருக்கேன். ஒவ்வொரு தோல்வியும் ஒரு பாடம்தான்.''

''உங்க மனைவி ரியாக்ட் பண்ணுவாங்களா?''

''படத்தைப் பத்தி விமர்சிப்பாங்க. பட், பொருளாதார ஏற்றம் - சரிவு பற்றியெல்லாம் பேச மாட்டாங்க.''

''மே-டேன்னு ஒரு இங்கிலீஷ் படம் ஆரம்பிச்சீங்களே, என்ன ஆச்சு?''

''கொஞ்சம் புரட்சிகரமான கதை அது. கேட்டவங்க எல்லாருமே தயங்கறாங்க. எது பத்தியும் கவலைப்படாம எடுத்துடலாம். பட், சென்சார்ல மாட்டிக்கிச்சின்னா கோடிக்கணக்கான செலவும் வேஸ்ட் ஆயிடும் இல்லியா? அதான், யோசிச்சிட்டிருக்கேன்.''

''அவார்டு வாங்கறாப்பல ஒரு தரமான படம் எப்ப தரப் போறீங்க?''

''அவார்டுகளே வெறும் ஹம்பக்! அதெல்லாம் ஆள் வெச்சி, சிபாரிசு மூலமா நடக்கற விஷயங்கள். ஒரு தடவை சில முக்கியமான ஆளுங்க பேசிக்கறதைக் கேட்டேன். 'போன வருஷம் அவங்களுக்கு விட்டுக் குடுத்தமே, இந்த வருஷம் நாம எடுத்துக்கலாம்'னு என்னவோ கத்தரிக்காய் வாங்கறாப்பல பேசிக்கிட்டாங்க. அந்த நிமிஷமே எனக்கு அவார்டுகள் மேல வெறுப்பே வந்துடுச்சி. மக்கள் என் படங்களை ரசிச்சா போதும். அவார்டு ஆசையே இல்லை!'' ●

பேட்டி : **சைந்தவி குணா**
படங்கள் : **பிரவீண்குமார்**

# சிக்கலில் சின்ஹா!

வாஜ்பாய் பிரதமராகப் பொறுப்பேற்றுக் கொண்டு அமைச்சர்களுக்கு இலாகாக்கள் ஒதுக்காத நிலையில், நிருபர்கள் பிரதமரை, "நிதியமைச்சர் யார்?" என்று குடைந்தெடுத்தனர்.

உடனே வாஜ்பாய், "அந்த இலாகா என்னிடமே இருக்கும்" என்று அறிவித்தார்.

ஆனால் அடுத்த நாளே அமைச்சர்களுக்கு இலாகாக்கள் ஒதுக்கும் போது யஷ்வந்த் சின்ஹா நிதியமைச்சராக நியமிக்கப்பட்டார். பெரும்பாலோருக்கு ஆச்சர்யம்! ஏனென்றால், பொதுத் தேர்தலில் தோற்றிருந்தாலும், ஜஸ்வந்த் சிங்கிற்குத்தான் நிதியமைச்சர் பொறுப்பு கொடுக்க வேண்டும் என்று ஆர்.எஸ்.எஸ். இயக்கம் வற்புறுத்தியது. சோஷலிஸ்ட் பின்னணியில் பா.ஜ.க.வுக்கு வந்த சின்ஹா மீது அதற்கு அவ்வளவு பிடிப்பு இல்லை.

ஆனால் வாஜ்பாய், எந்தவிதமான அழுத்தத்துக்கும் வளைந்து கொடுக்காமல் சந்திரசேகரின் அமைச்சரவையில் சின்ஹா நிதி அமைச்சராய்ப் பொறுப்பு வகித்த முன் அனுபவத்தைக் கணக்கில் கொண்டு சின்ஹாவுக்கு நிதியை ஒதுக்கி விட்டார். இப்போது பா.ஜ.க. வட்டாரங்களில் "சுதேசி பொருளாதாரக் கொள்கையை அடிப்படையாகக் கொண்டு சின்ஹா செயல்படுவாரா?" என்று பட்டி மன்றம் நடந்து கொண்டிருக்கிறது.

ஆனால் சின்ஹாவோ, "சுதேசி என்பது மனது, உணர்வோடு தொடர்பு கொண்ட விஷயம். பொருளாதார விஷயத்தில் உலகத்தோடு ஒட்ட ஒழுகவில்லையென்றால் இந்தியா தண்டவாளத்தை விட்டு இறங்கி விடும்!" என்று தைரியமாகச் சொல்லியிருக்கிறார்.

ஐம்பத்தெட்டு வயதான சின்ஹா ஒரு முன்னாள் ஐ.ஏ.எஸ் அதிகாரி. பீகார் மாநிலத்தைச் சேர்ந்தவர். பாட்னா பல்கலைக் கழகத்தில் அரசியல் விஞ்ஞானம் போதிக்கும் விரிவுரையாளராக வாழ்க்கையைத் துவங்கியவர். பின்னர் 1960ல் ஐ.ஏ.எஸ் பணியில் நுழைந்தார். 1977ல் பீகார் முதலமைச்சராக இருந்த கர்ப்பூரி தாக்கூருக்கு முதன்மைச் செயலாளராக இருந்தபோது மாநிலமெங்கும் இட ஒதுக்கீடு எதிர்ப்புப் போராட்டம் தீவிரமாக நடந்தது. அந்தப் போராட்டத்தை புத்திசாலித்தனமாக முதல்வர் சமாளிக்க உதவினார் சின்ஹா.

ஜெயப்பிரகாஷ் நாராயணிடம், சின்ஹாவுக்கு இருந்த ஈடுபாடு அளப்பரியது! அவரும் சின்ஹாவை செல்லப் பிள்ளையாகவே வைத்திருந்தார்.

ஒருமுறை பீகார் வருவாய்த் துறை அமைச்சராக இருந்த சந்திரசேகர் சிங் என்பவர் கட்சிக்காரர்களின் எதிரில் சின்ஹாவை எடக்கு மடக்காகப் பேசிவிட்டார். வந்ததே கோபம் சின்ஹாவுக்கு!

"நான் நினைத்தால் அமைச்சராகலாம், ஆனால் உங்களால் என்னைப் போன்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி ஆக முடியாது" என்று எதிரடி அடித்தார்! அரண்டு விட்டார் அமைச்சர்.

சின்ஹாவின் இந்தச் செயல் பீகாரில் நெடுநாட்கள் பேசப்பட்டு அவரை

அரசியலுக்கு வர உந்தி விட்டது என்று கூடச் சொல்லலாம்! ஆனால் ஜெ.பி., சின்ஹாவின் அரசியல் ஆர்வத்தைக் கொஞ்சம் தள்ளிப் போட்டார்.

"உன் வாழ்க்கைக்கு அரசியலை நம்பியிராமல் என்றைக்கு சுய சம்பாதியத்தில் நிற்கிறாயோ அப்போதுதான் அரசியலுக்குள் நீ நுழைய வேண்டும்" என்று சத்தியம் வாங்கிக் கொண்டார் ஜெ.பி. அந்த நிலை 1980களில் வர, பதவியை ராஜினாமா செய்துவிட்டு ஜனதா



கட்சியில் சேர்ந்தார். சந்திரசேகரின் சிஷ்யப் பிள்ளையானார். அவர் பாத யாத்திரையாக பாரத் தர்ஷன் சென்றபோது உடன் சென்றார் சின்ஹா.

**1991**ல் சந்திரசேகர் கவிழ்ந்த பிறகு சின்ஹாவின் பார்வை பா.ஜ.க. பக்கம் திரும்பியது. காங்கிரஸுக்கு ஒரே மாற்று பா.ஜ.க. தான் என்ற கருத்து உருவானது. ஜனதா, ஜனதாதள நெல்லிக்காய் மூட்டையில் இருப்பது வீண்" என்ற அபிப்பிராயம் வலுத்தது. அந்த சமயத்தில் ஓய்வு பெற்ற மூத்த அதிகாரிகள் பலர், பா.ஜ.கவில் சேர்ந்து கொண்டிருந்தார்கள். சின்ஹாவும் அதில் இணைந்தார். தலைமை நிலையத்தில் செய்தித் தொடர்பாளராகச் செயல்பட்டார். பத்திரிகையாளர்களை பகைத்துக் கொள்ளாமல் அதே சமயம் பக்குவமாகத் தம் கருத்துக்களை இன்ஜெக்ட் செய்வதில் சமர்த்தர் சின்ஹா. அவரது அரசியல் பின்னணிக்கும் பா.ஜ.கவின் கொள்கைப் பிரகடனங்களுக்கும் கொஞ்சம் முரண்பாடுகள் இருந்தாலும் தம் முகத்தை காப்பாற்றிக் கொள்வதோடு, கட்சியையும் விட்டுக் கொடுக்கமாட்டார்.

இப்போது நிதித்துறை ஜூனியர் அமைச்சரான குமார் சில விஷயங்களில் தமது ஆர்வத்தை அதிகமாகக் காண்பிக்கும்போது நாசூக்காக நறுக்கி விடுகிறார் சின்ஹா.

**ச**ந்திரசேகர் ஆட்சியின்போது நமது நாட்டுத் தங்கத்தை அந்நிய வங்கிகளில் அடமானம் வைத்தது குறித்து சர்ச்சையில் மாட்டிக் கொண்டார் சின்ஹா. அதே போல ஜெயின் ஹவாலா விவகாரத்திலும் சிக்கிக் கொண்டார். நல்ல வேளையாக விடுவிக்கப்பட்டார். இப்போது மனிதர் ரொம்ப பிஸி! மே மாத இறுதியில் முழுபட்ஜெட் தாக்கல் செய்ய வேண்டும். கட்சியையும் திருப்தி செய்ய வேண்டும். அதே சமயம் தாராளமயமாக்கலையும் தொடர வேண்டும். பணவீக்கம் கட்டுப்படுத்தப்பட வேண்டும். ஏழைகள் பாதிக்கப்படக் கூடாது. மந்திரத்தில் மாங்காய் காய்க்க வேண்டும். என்ன செய்வார் சின்ஹா? சிக்கல்தான்!

சுதந்தர இந்தியாவில் பட்ஜெட்டைத் தாக்கல் செய்யாத ஒரே நிதி அமைச்சர் சின்ஹாதான் என்று கிண்டலாகச் சொல்லப்பட்டு வந்தது. காரணம் சந்திரசேகர் அமைச்சரவையில் அவர் பட்ஜெட் தாக்கல் செய்யும் முன்னர் அரசு கவிழ்ந்து விட்டது. நிதியமைச்சராகப் பொறுப்பேற்றவுடன் சிதம்பரத்தைச் சென்று பார்த்து வந்தது மட்டுமல்லாமல், மூத்த நிதி அமைச்சக அதிகாரிகளைத் தொடர்ந்து தம் பக்கம் தக்க வைத்துக் கொண்டிருக்கிறார் சின்ஹா! ●

— கௌசி

காதல் டைரிக் குறிப்பு:

**அந்த செங்கற்கள் வரம் வாங்கி வந்திருக்க வேண்டும்.**

**இல்லையென்றால் உன் வீட்டு சுவர்களில் இடம் பெற்றிருக்க முடியுமா?**

# நான் உன்னை சுவாசிக்கிறேன்

# —18

அரவிந்த் தமது பிரிண்ட்டிங் பிரஸ் கட்டடத்திற்குள் நுழைந்தபோது ஒருபுறம் ஆஃப்செட் இயந்திரத்தை 'டெஸ்ட் ரன்' செய்து இயக்கிப் பார்த்துக் கொண்டிருக்க, இன்னொரு புறம் அலுவலகப் பகுதியில் தச்சுப் பணி நடந்து கொண்டிருந்தது. பெயிண்ட் அடிக்கும் வேலையும் மும்முரமாக இருக்க... எல்லோருக்கும் அவனது உத்தரவுக் குறிப்புகள் தேவைப்பட்டது.

இரவு ஒன்பது மணி வரைக்கும் அவர்களோடு கூட நின்று கொண்டிருந்தான். ஆஃப்செட் இயந்திரத்தில் இருந்த ஒரு சில குறைபாடுகளை இவனே முன்னின்று சரி செய்தான்.

எல்லோரையும் அனுப்பிவிட்டு வாட்ச்மேனாக நியமித்திருந்த ஒரு தாத்தாவை பக்கத்து ஹோட்டலிலிருந்து தோசை வாங்கி வரச் சொல்லி சாப்பிட்டுவிட்டு மறுபகுதியில் கழிப்பறை இணைப்புடன் இருந்த தனியறையில் புதிதாக வாங்கிப் போட்டிருந்த மடக்குக் கட்டிலை விரித்துப் போட்டான். ஸ்டூல் மேல் வைக்கப்பட்டிருந்த மின் விசிறியைத் தன் திசையில் அமைத்துப் போட்டுக் கொண்டு முதுகுக்குத் தலையணை கொடுத்துச் சாய்ந்தான்.

காந்தி மண்டபத்தில் பிருந்தாவோடு அன்றைய தினம் பேசியவற்றை வரிசையாக மனத்தில் ஓட விட்டான்.

அவள் ஆத்திரப்படாமல் நிதானமாகப் பேசிய பக்குவம் பிடித்திருந்தாலும், அதை மீறி மனத்தில் ஒரு ஏமாற்றம் வியாபித்திருந்தது.

''உங்களைச்



சந்தித்ததிலிருந்து நானும் எப்போதும் உங்களையேதான் நினைத்துக் கொண்டிருந்தேன், நானும் உங்களை மனதார நேசிக்கிறேன்' என்று அவள் சொல்லியிருந்தால்... எவ்வளவு சந்தோஷமாக இருந்திருக்கும்!

பேசப் பழகப் பிடித்திருக்கிறது என்கிறாள். மதிப்பும், மரியாதையும் வைத்திருப்பதாகச் சொல்கிறாள். பெற்றோர் பார்த்து அமைக்கும் திருமணத்தில் அபாயம் இருப்பதாகச் சொல்கிறாள். காதல் என்கிற அற்புதமான விஷயத்தை மதிக்கத் தயாராக இருக்கிறாள். ஆனால்... என் மேல் இதுவரை காதல் வரவில்லை என்கிறாள்.

அதே சமயம் 'இந்த எண்ணமே உங்கள் மனத்தில் இருக்கக் கூடாது!' என்று கண்டிப்புக் காட்டவில்லை. தொடர்ந்து பழகுவோம் என்கிறாள். முழுமையாகப் புரிந்து கொண்ட பிறகு திருமணம் பற்றித் தீர்மானிக்கிறேன் என்கிறாள்.

இவள் என்ன வகையான பெண்?

நிச்சயமாக சராசரிப் பெண்ணில்லை. நிறைய சிந்திக்கிறவள். எதையும் தள்ளி நின்று பாரபட்சமின்றி அலசிப் பார்ப்பவள். தெளிவான கருத்துக்களைக் கொண்டவள். உதடுகளில் புன்னகை மாறாதவள். வலிக்காமல் தன் எண்ணத்தைச் சொல்லத் தெரிந்தவள்.

எல்லாம் சரி. இவள் மேல் நான் கொண்டிருக்கும் காதலுக்கு இன்று கிடைத்தது அங்கீகாரமும் இல்லை, முழுக்க ஏமாற்றமும் இல்லை.

என் காதல் இப்போது அவளது பரிசீலனையில் இருக்கிறது என்பதே நிலை! அண்டர் ஆப்சர்வேஷன்! நான் என்ன ஒரு சோதனைப் பொருளா?

இதில் மனத்தில் நிறைவு இல்லாமல் இருக்கிறதே. ஏதோ ஒரு வகையில் என் உண்மையான காதல் சற்றே அலட்சியப்படுத்தப்படுவது போல அல்லவா உணர்கிறேன்?

காதல் என்பதோ, கல்யாணம் என்பதோ சின்ன விஷயம் இல்லைதான். வாழ்க்கையையே ஒப்படைக்கும் மகத்தான உறவு அது. உண்மைதான். அதில் மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டியது நியாயம் தான். அதற்காக?

இதே எச்சரிக்கை எனக்கும்தானே இருக்க வேண்டும்? நிறைய பழகி பரிபூரணமாகப் புரிந்து கொண்டு அதன் பிறகு



அவளைத் திருமணம் செய்து கொள்ளலாம என்கிற முடிவுக்கு நான் வரவில்லையே.

தவறான கணவன் ஒரு பெண்ணுக்கு அமைந்து விட்டால் மட்டும்தான் கொடுமையா? தவறான மனைவி ஒரு ஆணுக்கு அமைந்து விட்டாலும் கூடக் கொடுமை தானே?

பிருந்தாவை மணந்தால் என் மண வாழ்க்கை மகிழ்ச்சியாக இருக்குமா? ஓர் இனிய மனைவியாக அவள் அமைவாளா?

பட்டுக்கோட்டை பிரபாகர்

என்றெல்லாம் நூறு கேள்விகள் நான் கேட்டுப் பார்க்கவில்லையே.

நல்லபடியாக அமையும் என்பது ஒரு நம்பிக்கைதானே? அவளைப் பார்த்ததில் இருந்து எனக்குள் நிகழ்ந்த நவிப்புகளும், கற்பனைகளும் அந்த நம்பிக்கையின் அடிப்படையில்தானே? காதலே ஒரு நம்பிக்கை வடிவம்தானே...

எனில் என்மேல் அவளுக்கு நம்பிக்கை ஏற்படவில்லையா? என் மேல் மதிப்பு ஏற்பட்டது. மரியாதை ஏற்பட்டது. நம்பிக்கை ஏற்படாதது ஏன்? இவன் எனக்கு இனிய கணவனாக அமைவானா என்கிற சந்தேகம் தானே தீர்மானத்திற்கு வரவிடாமல் தயக்கம் காட்ட வைக்கிறது?

இனி எங்கள் ஒவ்வொரு சந்திப்பிலும் அந்த சந்தேகத்திற்கு விடை காணும் விதமாகவேதானே என் பேச்சை, என் செயலை அவள் கண்காணிப்பாள்? அவளுக்கு நம்பிக்கை ஏற்படுத்த வேண்டும் என்கிற உள் மனத்தின் எண்ணத்தோடுதானே என் பேச்சும், செயல்களும் இனி அமையும்.

இதுவரை போல இனி வரும் சந்திப்புகளில் இயல்பு இருக்குமா? ஒரு நாடகத் தன்மை சேர்ந்து விடாது?

நான் நல்லவன், கடைசிவரையில் உன்னைக் கண் கலங்காமல் வைத்திருப்பேன் என்று உணர்த்தும் விதமாக நான் நடந்து கொள்ள வேண்டுமா?

அதுதான் உண்மை என்றாலும் அந்த உண்மைகளை உணர்த்த கொஞ்சம் கவனமாக திட்டமிட்டுக் கொள்ள வேண்டுமா?

என்ன இது, அபத்தமாக இருக்கிறது!

நான் உன்னை நேசிக்கிறேன். இதில் எந்தக் குழப்பமும் இல்லை. எந்த நிபந்தனைகளும் இல்லை.

நீ என்னை நேசிக்கிறாயா? – இது கேள்வி.

ஒன்று 'ஆமாம், நேசிக்கிறேன்' என்று சொல்! அல்லது, 'இல்லை. நேசிக்கவில்லை' என்று சொல்! இப்படியும் இல்லாமல் அப்படியும் இல்லாமல் 'இப்போதைக்கு நேசிக்கவில்லை. இன்னும் பழகிப் பார்க்கிறேன். அதன் பிறகு ஒருவேளை நான் நேசிக்கலாம். அல்லது நேசிக்காமலும் போகலாம்!' என்பது ஒரு விளக்கெண்ணெய் பதிலாக இல்லை?

பழகிப் பார்த்துவிட்டு நீ என்ன பதில் சொல்லப் போகிறாயோ என்கிற பதைப்புடன் நான் காத்திருக்க வேண்டுமா? – பெண் பார்த்து விட்டுப் போகிறவர்கள் எழுதப் போகிற பதில் காகிதத்திற்காக பெற்றோர் காத்திருப்பதைப் போல!

இந்தப் புதிய நிறுவனத்தில் வேலைக்குச் சேர்ந்திருக்கும் வாட்ச்மேன் தாத்தாவுடன் அவன் நடத்தின சம்பாஷணை நினைவுக்கு வந்தது.

"இதோ பாருங்க, உங்களுக்கோ அறுபத்திரெண்டு வயசாச்சின்னு சொல்றீங்க. ஆபரேஷன் செஞ்சி கண்ணாடி வேற போட்டிருக்கீங்க. நான் ஒரு துடிப்பான ஆளாப் பார்க்கறேன்."

"தம்பி, நீங்க இரக்கப்பட்டு எனக்கு வேலை கொடுக்கணும்னு நான் கேக்கலை. எனக்கு வயசு ஆனாலும் திடகாத்திரமாத்தான் இருக்கேன். ஒரு செக்யூரிட்டி சர்வீஸ்ல வேலை பார்த்து ரிட்டயராய்ட்டேன். நல்ல அனுபவம் இருக்கு. நாணயத்தில் நீங்க சந்தேகமேபட வேணாம். நான் இதுக்கு முன்னாடி வேலை பார்த்த ரெண்டு இடத்தோட அட்ரஸ் தர்றேன். நீங்க வேணும்னா போன் செஞ்சி விசாரிச்சுப் பாருங்க."

"அதுக்கில்லை பெரியவரே..."

"உங்களுக்கு மனசுக்குத் திருப்தி வரலைன்னு புரியுது. சரி, இப்படி செய்யுங்க தம்பி. ஒரு பதினஞ்சி நாள் நான் உங்ககிட்ட வேலை பார்க்கறேன். என் நடவடிக்கைகள், வேலை உங்களுக்குப் பிடிச்சிருக்கான்னு பாருங்க. பிடிச்சிருந்தா தொடர்ந்து வெச்சிக்கங்க.



"உங்க கட்சியோட கொள்கை என்ன சார்?"
"நல்லா கேட்டீங்க... அப்பப்போ கொள்கைய மாத்திகிறதுதான் எங்க கட்சியோட் கொள்கை."
— ந. செந்தில் குமார்

திருப்தியா இல்லைன்னா வீட்டுக்கு அனுப்பிச்சிடுங்க!"

அவரின் தன்னம்பிக்கையான அந்த வார்த்தைகள் அவருக்கு உத்தியோகம் கொடுக்கத் தீர்மானிக்க வைத்தது.

அந்த தாத்தா மாதிரி நான் பிருந்தாவுடன் கொஞ்சம் நான் பழக வேண்டும். என்னைப் பற்றி, திருப்தியான அபிப்பிராயம் ஏற்பட்டால் திருமணம் செய்து கொள்ளத் தீர்மானிப்பாள். இல்லையென்றால் 'ஸாரி' என்று விலகி விடுவாள். அப்படித்தானே?

இந்த சாம்பிள் டெஸ்ட் வாட்ச்மேன் உத்தியோகத்திற்குச் சரி! தாம்பத்யத்திற்குச் சரியா? புருஷன் என்பது உத்தியோகமா?

யோசிக்க யோசிக்க பிருந்தா சொன்னது தன் தன்மானத்திற்கு விழுந்த பலமான அடியாகப் பட்டது அரவிந்திற்கு. வலித்தது. உறக்கம் வராமல் புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்தான்.



"உன் மாமனார்தான் பெரிய வண்டியா வாங்கிக் குடுத்துட்டார்னு சொல்றியே, பிறகு ஏன் அவர் மேல கோபமா இருக்கே?"

"ஒரு பழைய ரோடு ரோலர் வாங்கி குடுத்தது மட்டுமில்லாம ரொம்ப வேகமா ஓட்டாதீங்கன்னு வேற சொல்லிட்டு போறார்!"

— தாரை மா. மகேஷ்ப்ரியன்

**வா**ட்ச்மேன் தாத்தா ஸ்ட்ரா போட்ட இரண்டு குளிர்பானங்களைக் கொண்டு வந்து ஒரு ஸ்டூல் போட்டு அதன்மேல் வைத்துவிட்டு, 'வேறு வேலை ஏதாவது இருக்கிறதா?' என்று கேட்பது போல தயங்கி நின்றார்.

"உனக்கு சிகரெட் வேணுமா சந்துரு?" என்றான் அரவிந்த்.

"வேணாம், இருக்கு" என்றான் சந்துரு.

"சரி, நீங்க போங்க. அப்புறமா வந்து பாட்டிலைக் கொண்டு போய்க் கொடுக்கலாம்" என்று அவரை அனுப்பிவிட்டு தன் மடியில் போட்டிருந்த தலையணைமேல் கைகளை ஊன்றிக் கொண்டான் அரவிந்த்.

"என்னடா எதுவுமே சொல்ல மாட்டேங்கறே?"

"அரவிந்த், இப்போ நீ இருக்கற மனநிலையில நான் எது சொன்னாலும் கசக்கும். வீட்டை எதிர்த்துக்கிட்டு உன் சொந்த முயற்சில தொழில்ஆரம்பிக்கிறதுகூட எனக்குத் தப்பாத் தெரியலை. ஆனா வீட்டை விட்டுக் கோபமா வந்துட்டது சரியாப் படலை."

"அந்தச் சூழ்நிலையில நீ இருந்திருக்கணும் சந்துரு. என்ன இருந்தாலும் சாப்பாடு விஷயத்தைக் குத்திக்காட்டி அப்படிப் பேசியிருக்கலாமா எங்கப்பா?"

"கோபத்தில நிதானம் தவறிப் பேசிடறது சகஜம்தானே அரவிந்த்."

"எனக்குன்னு தன்மானமே இருக்கக் கூடாதா?"

"வேணாம். இப்ப இதைப் பத்திப் பேசறதால எந்தப் பிரயோஜனமும் இல்லை."

"என்னை ஏன் யாருமே என் கோணத்திலேர்ந்து புரிஞ்சுக்க மாட்டேங்கறீங்க?"

"உன் கோணம் புரியாம இல்லை அரவிந்த். அதைத் தாண்டி சமுதாயக் கோணம்னு ஒண்ணு இருக்கு. அப்பாவுக்கும் பிள்ளைக்கும் சண்டை வந்து பிள்ளை பிரிஞ்சி போயிட்டான்றதுதான் சமுதாயத்துக்குத் தெரியும். பெரியவங்களை மதிச்சி சின்னவங்க அனுசரிச்சிப் போயிருக்கலாம்னுதான் பொதுவான நியாயமா எல்லாரும் பேசுவாங்க."

"பேசட்டும். எனக்கு சமுதாயத்தைப் பத்தி அக்கறை இல்லை. எனக்கு என் உணர்வுகள் முக்கியம்."

"அதெப்படி நீ சமுதாயத்தைப்பத்தி அக்கறைப் படாம இருக்க முடியும்? இந்தச் சமுதாயத்திலதானே நீ வாழ்ந்தாகணும்? சமுதாயம்னு ஒண்ணு ஏழு கடல்தாண்டி எங்கோ இருக்கா? இந்தச் சமுதாயத்திலதானே நீ தொழில் செய்யப் போறே? இந்தச் சமுதாயத்திலேர்ந்துதானே நீ சம்பாதிக்கப் போறே? உன்கிட்ட வேலை பார்க்கற தொழிலாளிகளும், உனக்கு வேலை கொடுக்கப் போற கஸ்டமர்களும்தானே சமுதாயம்? நீ



**''நீ இப்படி பண்ணுவேன்னு நான் எதிர்பார்க்கவே இல்லை, கருணா!''**
**''எதைச் சொல்றீங்க?''**
**''நேத்து ஒருநாள் சுண்டலுக்கு நீ காசு கொடுத்தே. அதைப் போய் நமக்கு தெரிஞ்சவங்ககிட்ட எல்லாம் சொல்லியிருக்கியே!''**
**— எஸ்.எஸ். பூங்கதிர்**

என்ன தீவுல தனியாவா இருக்கே? நீ சட்டை, பேண்ட் போடறதே இந்தச் சமுதாயத்துக் காகத்தானே?''

''இல்லை. என் மானத்துக்காக.''

''யாரும் இல்லாத தீவுல உன் மானத்தை மறைக்க வேண்டிய அவசியம் வருமா அர விந்த்? ஒரு சர்ரியலிசக் கவிஞன் எழுதின ஒரு கவிதைல 'யாருமே நிமிர்ந்து பார்க்க வில்லை என்றாலும் இந்த ஆகாயம் நீல நிறத் தில்தான் இருக்குமா?'ன்னு ஒரு வரி வரும்.''

''இப்ப என்னை என்ன செய்யச் சொல்றே? வீட்டுக்குப் போய் அப்பாகிட்ட மன்னிப்புக் கேட்டுட்டு அங்கயே இருன்னு சொல்லாதே! என்னை நான் அவங்களுக்கு நிரூபிக்கிற வரைக்கும் வீட்டுக்குப் போறதில் லைன்னு தீர்மானமா இருக்கேன்.''

''இப்படி நடந்துடுச்சி, நீ என்ன நினைக் கிறேன்னு கேள்வி கேட்டதால என் கருத் தைச் சொன்னேன்.''

''வேற பேசலாம்.''

''சரி.''

''ஒரே நேரத்தில் எல்லாப் பக்கமும் என்னை அப்செட் பண்றமாதிரியே நடக் குது சந்துரு. நேத்து எனக்கும், பிருந்தாவுக்கும் நடந்த சம்பாஷணை பூராவும் ஒண்ணு விடாம சொல்லிட்டேன். நேத்து ராத்திரிப் பூரா எனக்குத் தூக்கமில்லைடா. அவளைப் பத்தி நீ என்ன நினைக்கிறே?''

''என் அபிப்பிராயம் உனக்கு அவ்வளவு முக்கியமா என்ன?''

''ஏன் சந்துரு அப்படிக் கேக்கறே?''

''நான் என்ன சொன்னாலும் நீ தீர்மானமா இருக்கற கருத்தை வாதம் பண்ணி வலியுறுத்தப் போறே. இதில எதுக்கு என் கருத்து?''

''கோபமா சந்துரு? நான் ரொம்பக் குழம்பிப் போயிருக் கேன் சந்துரு. நான் சொன்ன தில நீ காயப்பட்டுட்டியா? அப் படின்னா ஸாரி. எனக்கு உரி மையா எல்லாத்தையும் பகிர்ந் துக்க நண்பன்னு வேற யாரு இருக்கா?''

''பிருந்தாவை நான் பார்த்த தில்லை. பேசினதில்லை. நீ பழகியிருக்கே. நான் எது சொன்னாலும் அது நீ சொல் றதை வெச்சி சொல்ற கருத்தாத்தான் இருக் கும். அது சரியானதாக்கூட இல்லாம இருக் கலாம் அரவிந்த்.''

''கரெக்டுதான். எப்படி என் குடும்பத்தில யாருக்கும் என்மேல நம்பிக்கை இல்லையோ, அதே மாதிரி அவளுக்கும் என்மேல நம் பிக்கை இல்லை. லோன் வாங்கி தொழில் ஆரம்பிக்கிறேன். வீட்டை எதிர்த்துக்கிட்டு தனியா வந்திருக்கேன், இன்னிக்குத் தேதில என்னோட ஃபைனான்ஷியல் ஸ்டேட்டஸ் மைனஸ்ல இருக்கு. எனக்கு நல்லாத் தெரி யுது. உள்ளுக்குள்ளே பிருந்தா என்னை விரும்பறா. ஆனா, நான் முன்னேறுவேனா, நல்ல வாழ்க்கை அமைச்சிக் கொடுப் பேனான்னு சந்தேகப்படறா. இது லௌகீக உலகமாப் போச்சிடா. காதல்லகூட கணக்கு கள் வந்துடுச்சி. இப்போ இந்த பிரஸ் எனக் குச் சொந்தமா இருந்து மாசம் அம்பதாயிரம் லாபம் சம்பாதிச்சி, ரெண்டு கார், வீட்டோட நான் இருந்து என் காதலைச் சொல்லிருந்தா, எந்தத் தயக்கமும் இல்லாம அவ சந் தோஷமா தன் மனசை வெளிப்படுத்தி யிருப்பா. குடும்ப உறவுகளைத் தீர்மானிக்கிற மாதிரி இப்போ காதலைக்கூட பணம்தான் தீர்மானிக்குது சந்துரு'' என்ற அரவிந்தின் கண்கள் கலங்கின.

''யு மே பி ரைட்! ஆர் யு மே பி ராங்! எனக்கு என்ன சொல்றதுன்னு நிஜமாப் புரி யலைப்பா'' என்றான் சந்துரு.

(தொடரும்)



1998 மே 10
வெகுதான்ய சித்திரை 27
மலர் : 56
இதழ் : 41

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## வாரே வாஹ், வாஜ்பாய்! சபாஷ் சோனியா!

இந்தியத் தொழிலதிபர்களுக்குப் பாராட்டும் நன்றியும் சொல்லியாக வேண்டும்! எலியும் பூனையுமாக இருந்த அரசியல் தலைவர்களை ஒன்று சேர்த்து, நாட்டின் எதிர்கால வளர்ச்சிக்கு அவர்களது ஒத்துழைப்பை உறுதி செய்வதென்றால் சும்மாவா!

இன்றைய பிரதமர், நேற்றைய பிரதமர் (குஜ்ரால்), நாளைய பிரதமராக வரக்கூடிய ஒருவர் (சோனியா) என மூன்று முக்கிய தலைவர்கள் இந்தியத் தொழிலகங்களின் கூட்டமைப்பில் (Confederation of Indian Industries) உரையாற்றியுள்ளனர். மூவரது உரைகளுமே அர்த்தமுள்ளதாகவும் நாட்டைக் குறித்த மெய்யான அக்கறையை வெளிப்படுத்துவதாகவும் உள்ளன. அரசியல் மேடைகளை விட்டு அகன்று வந்து சிந்தனையாளர்களுடன் புழங்கும்போது உயர்ந்த இலக்குகள் தாமாகவே வந்து சேர்ந்து விடும் போலும்.

'கடந்த ஆட்சி, குறிப்பிடும்படியான சொத்து எதையும் வைத்து விட்டுப் போகவில்லை...' என்று வாஜ்பாய் இலேசாகக் குறை சொன்னாலும், அடுத்த ஓரிரு மாதங்களில் தீவிரமான நடவடிக்கைகள் எடுப்பதன் மூலம், ஏழு அல்லது எட்டு சதவிகிதப் பொருளாதார வளர்ச்சியை அடைய முடியும் என்று உறுதியளித்திருக்கிறார். இருபத்தோறாம் நூற்றாண்டில், இந்தியாவை சர்வதேச அளவிலான பொருளாதார பயில்வானாக்குவதற்குத் தொழில் துறையின் ஒத்துழைப்பைக் கோரியிருக்கிறார் பிரதமர்!







'வளர்ச்சி, மேலும் வளர்ச்சி, மேலும் மேலும் வளர்ச்சி' என்பதை இன்றைய வந்தே மாதரமாக வழங்கியிருக்கிறார்.

தொழில் துறையின் வேகமான, சிறப்பான இயக்கத்துக்குத் தடைபோட்டு வரும் அர்த்தமொழிந்து போன விதிமுறைகளை ஒழித்துக் கட்டவும் மத்திய அரசு முடிவு செய்து விட்டது. அதை உடனடியாக நடைமுறைப்படுத்தாமல், ஒரு கமிஷன் அமைத்து, நிலைமையை ஆராய்ந்து கூறுவது மட்டும்தான் இடிக்கிறது. கமிஷன் நிறுவவும், அது பிரச்னையை ஆராயவும் பின்னர் அறிக்கை தரவும் எத்தனை காலம் ஆகும் என்பதையும் அந்த அறிக்கை குறிப்பிடும் சிபாரிசுகளை நடைமுறைப்படுத்துவது என்பது வெகு அபூர்வம் என்பதையும் நாம் அறிவோம். கமிஷனை மறந்துவிட்டு, பிரதமர் காரியத்தில் இறங்கி, அமைச்சர்களுக்கு அதிகாரங்கள் அளிக்க முன் வந்தாலே போதும். வெறும் காகிதக் குப்பைகளைக் குவிக்கும் விதிமுறைகள் ஒழிக்கப்படும். வளர்ச்சிப் பணிகளின்பால் தொழிலதிபர்களின் முழுக் கவனமும் திரும்பும்.

இதே சி.ஐ.ஐ. அமைப்பில், காங்கிரஸ் தலைவி சோனியா காந்தி மத்திய அரசுக்குத் தமது ஒத்துழைப்பை உத்தரவாதமாக்கியிருக்கிறார். பிரதமருடைய உரையின் சில அம்சங்களை அவர் கடுமையாக விமர்சித்தபோதும் வீழ்ந்து கிடக்கும் இந்தியப் பொருளாதாரத்தைத் தூக்கி நிறுத்த ஆளுங்கட்சிக்கு எந்த வகையிலும் தாங்கள் உதவத் தயார் என்று பிரகடனப்படுத்தியிருக்கிறார். அரசியல் ரீதியான சர்ச்சைகளுக்கும் போட்டிக்கும் இது நேரமல்ல; இடமும் அல்ல.. என்று அழகாகவும் தெளிவாகவும் பேசியிருக்கிறார்.

பொருளாதார வளர்ச்சியுடன் வேலை வாய்ப்புப் பெருக்கமும் விளைய வேண்டும். அப்போதுதான் வளர்ச்சி பூரணமாகும் என்கிறார் சோனியா. சி.ஐ.ஐயின் இவ்வாண்டிற்கான வாசகத்தில் உள்ள **economy, employment, education** ஆகியவற்றுடன் நான்காவதாக **entrepremiership** (சுயமுனைப்பு) என்பதும் இடம்பெற்றிருக்க வேண்டும் என்று சுட்டிக் காட்டுகிறார்.

சமீப ஆண்டுகளில் இந்தத் தொழில் முனைவோர் எடுத்துக் கொண்ட முயற்சியால்தான்




பொருளாதாரம் சரியான பாதையில் திசை திரும்ப முடிந்திருக்கிறது என்று நினைவூட்டியிருக்கிறார். காங்கிரஸ் கட்சியின் தேர்தல் அறிக்கையிலும் ஏழு முதல் எட்டு சதவிகித வளர்ச்சியே குறிக்கோளாகக் குறிப்பிடப்பட்டிருப்பதை ஞாபகப்படுத்துகிறார்.

முந்நாள் பிரதமர் ஐ.கே. குஜ்ரால் இதே அவையில் பேசுகையில், நமது அயலுறவுக் கொள்கைகளைப் பெரிய அளவில் மாற்றிவிடாமல் சுமுகமாகத் தொடர்வது எத்தனை முக்கியம் என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார். தமது அனுபவத்தின் அடிப்படையில் பேசிய அவர், இந்தக் கொள்கைகளில் உறுதியாய் இருப்பதன் மூலம், பாதுகாப்புத் துறை செலவுகளை கட்டுப்படுத்தி, வளர்ச்சிப் பணிகளுக்கு நிதியை திசை திருப்ப முடியும் என்பதை உணர்த்தியிருக்கிறார்.

தொழில் வளர்ச்சியின் முக்கியத்துவத்தை உணர்ந்து மூன்று தலைவர்களுமே ஒரே அலைவரிசையில் சிந்தித்து உரையாற்றியிருப்பது புதிய பொருளாதாரக் கொள்கையின் வெற்றியே ஆகும். இனி எந்த ஆட்சி வந்தாலும் இந்தப் புதிய பாதையில்தான் பயணத்தைத் தொடரும்; தொடர முடியும் என்பதையே இது உணர்த்துகிறது.

ஆனால் மத்திய அரசு, பேச்சளவில் நின்றுவிடாமல், உத்வேகத்துடன் செயலில் இறங்க வேண்டும். அதோடு, மாநில அரசுகளின் சுதந்தரமான செயல்பாட்டையும், வளர்ச்சியிலே மாநிலங்களுக்கிடையில் போட்டா போட்டியையும் ஊக்குவிக்க வேண்டும். மாநில அரசுகளை அச்சுறுத்திக் கொண்டோ, அரசியல் ரீதியாக முட்டுக்கட்டை போட்டுக் கொண்டோ இருந்தால், நிச்சயமாக தேசிய அளவிலான வளர்ச்சி பாதிப்புக்குள்ளாகும்.

மாநில அரசுகளின் சுதந்தரமான இயக்கத்துடன் எதிர்க்கட்சிக்காரர்களின் ஒத்துழைப்பும் ஆக்கபூர்வமான விமர்சனங்களும் சேரும்போது, வாஜ்பாய் எதிர்பார்க்கும் ஏழு முதல் எட்டு சதவிகிதத்துக்கும் கூடுதலாக- பத்து சதவிகித வளர்ச்சியைக்கூட நாம் காண முடியும்.

சாண் ஏறியிருக்கிறார் பிரதமர்; முழம் சறுக்குமாறு மூன்றாந்தர அரசியல்வாதிகள் அவரைப் பின்னுக்கு இழுக்காமலிருந்தால் சரி!

# காதல் கஷ்டம்

## (சினிமாக்காரங்க மட்டும்தான் காதல்னு ஆரம்பிச்சி டைட்டில் வைக்கணுமா?)

**சுமி சூப்பர் மார்க்கெட்**



**ப**தினெட்டு வயசுப் பொண்ணு ஒருத்தி, ஒருநாள் காலேஜுக்குப் போயிட்டு நைட் ரொம்ப லேட்டா வீட்டுக்கு வந்தா.

வீட்டுல இருந்தவங்க எல்லாரும் பயந்து போய், போலீஸுக்குப் போன் பண்ணலாமான்னு நினைச்சிட்டிருந்தப்ப, இவ உள்ள நுழையறா.

உடனே அப்பா கேட்டார்: "ஏன் இத்தனை நேரம்?"

அம்மா, "வாட் ஹாப்பண்ட் டூ யு? டு யு நோ வாட் தி டைம் இஸ்...?"

அவளோட அக்கா, "க்யா ஹுவா மஞ்சு?"ன்னா.

அண்ணன்காரன், "எந்தா இத்தர ஸமயங்கழிச்சு வந்நு?" அப்படீன்னான்.

ஒரே வீடுதான். தென், எப்படி இப்படிக் கேக்கறாங்க? யோசிங்க... கடைசில சொல்றேன்.

**"போ**டிலேருந்து எம். பிருந்தான்னு ஒரு வாசகி, "ஹாய், சுமி அக்கா எப்படி இருக்கீங்க'ன்னு ஆரம்பிச்சி ஒரு லெட்டர் எழுதியிருக்காங்க. அக்கான்னு எல்லாம் சொல்லாதீங்க. வயசு கூட்டிக் காட்டுது. எனக்குக் கல்யாணம் ஆயிடுச்சா, வயசு என்ன, போட்டோ போடுங்க, ரசிகர் மன்றம் ஆரம்பிக்கப் போறேன்னு எல்லாம் சொல்லி இந்த வெயிலுக்கு ரொம்ப இதமா, குளுகுளுன்னு... சே! என்ன ஒரு அன்பு மழை!

அது மட்டுமில்லை. "உங்களுக்கு லவ் லெட்டர்ஸ் நிறைய வருமா"ன்னு வேற ஒரு சப்ளிமென்ட் கேள்வி. ரொம்பக் குசும்பு!

காலேஜ்ல சில பேர் வழிஞ்சிருக்காங்க. பட், லெட்டர் லெவலுக்கு யாரும் போனதில்லை.

மோர் ஓவர், ஜாலியா கலர் பார்த்துட்டு கனவு கண்டுட்டுப் போறதுல இருக்கற கிக், சீரியஸ் லவ்வுல உண்டான்னு

எனக்கு ஒரு டவுட். (நீங்க என்ன நினைக்கறீங்க? சும்மா நாலு வரி போஸ்ட் கார்டுல 'சுமி செக்ஷன்'னு போட்டு எழுதி அனுப்புங்க.

போன வாரம் அமெரிக்காவுல நடந்ததா ஒரு நியூஸ் பார்த்தேன் டீவில.

அவ பேரு மறந்து போச்சு. அவளோட லவ்வர் பேரு, 'ஜேன்'னு சொன்னாங்க. தான் ஒரு ஸ்டார் ஹோட்டல்ல சூபர்வைசர்னு சொல்லி லவ் பண்ணியிருக்கான்.

ஸர்ப்ரைஸா இவ அந்த ஓட்டலுக்கு ஒருநாள் போக, அவன் ரூம் பாயா இருக்கறதைப் பார்த்து ஷாக் ஆயிருக்கா. கத்தி கலாட்டா பண்ணியிருக்கா. அவன் அங்கியே அடிச்சுட்டானாம்.

வீட்டுக்கு வந்தவ, சாப்பிடாம தூங்காம பத்துநாளா பிரமை பிடிச்சி உட்கார்ந்திருக்கா. அவன் வந்து எட்டிக் கூடப் பார்க்கலை!

பொண்ணுக்கு ஷாக் ட்ரீட்மென்ட் குடுத்துத்தான் நார்மல் நிலைக்குக் கொண்டு வரணும்னு அவளோட பேரன்ட்ஸ் ஹாஸ்பிடலுக்குக் கூட்டிட்டுப் போயிருக்காங்க.

ட்ரீட்மென்ட்ல என்னவோ குளறுபடியாகி, அதிர்ச்சில சித்த பிரமையானவள், நிரந்தரமா கோமா ஸ்டேஜுக்குப் போயிடறாப்பல ஆயிடுச்சாம்.

அந்த ஆள் எனக்கு இவளைத் தெரியவே தெரியாதுங்கறானாம்! ஏதாவது எவிடன்ஸ் கிடைக்குமான்னு அவளோட பேரண்ட்ஸ் தேடிட்டு இருக்காங்களாம், இப்ப!

So Sad No?



• லக்ஷ்மி

எழுத்தாளர் லக்ஷ்மியோட படைப்புகளை ஆராய்ச்சி பண்ணி இலக்கியச் சிந்தனைக்காகப் பேராசிரியர் கலாதாக்கர் ஒரு புஸ்தகம் எழுதியிருக்காங்க. போன மண்டே நைட் படிச்சி முடிச்சேன்.

ஒரு காலத்துல லக்ஷ்மியோட நாவல்கள் இல்லாத வீடுகளே கிடையாது. சுஜாதாக்கு முன்னால அவங்க தான் பத்திரிகை உலக சூப்பர் ஸ்டார்! 'ஒரு பெண் கஷ்டப்படுகிறாள்' – இந்த ஒன் லைன்தான் லக்ஷ்மியோட பெரும்பாலான கதைகளோட அடிநாதமா இருக்கும். ஆனா பிரில்லியன்ட்டா ட்ரீட்மென்ட் குடுத்திருப்பாங்க.

கலாதாக்கரோட புஸ்தகம், லக்ஷ்மியைப் பற்றி, அவங்க எழுத்து பற்றி, ஒரு சரியான, துல்லியமான பிம்பத்தைப் படிக்கறவங்களுக்கு வழங்கலைங்கறது என்னோட ஃபீலிங். தவிர, ஒரு யூனிவர்ஸிடிக்கு சமர்ப்பிக்கிற ஆய்வுக் கட்டுரைகள் மாதிரிதான் இருக்கே தவிர, வெகுஜன சுவாரஸ்யம் மிஸ்ஸிங். கிடைச்சா படிச்சிப் பார்த்துட்டு உங்க அபிப்பிராயத்தைச் சொல்லுங்க.

ஓகே. ஃபர்ஸ்ட் பேராவை ஞாபகப்படுத்திக்கங்க. அந்தப் பொண்ணு லேட்டா வரா. வீட்ல ஏன் தமிழ், இங்கிலீஷ், இந்தி, மலையாள லேங்வேஜஸ்ல கேக்கறாங்க?

ஹூம்! இது ஒரு கேள்வியா? வயசுப் பொண்ணு லேட்டா வந்தா நாலு பேரு நாலு விதமாத்தான் பேசுவாங்க!

(சுமி ஸ்பெஷல்; சூப்பர், சம்மர் கடி! ய்ய்யா!) ●

— சுமி

**செ**ன்னை - பெங்களூர் சாலையில் பூந்தமல்லிக்கு அருகில் உள்ள கிராமம் சென்னீர்குப்பம். சென்ற வாரம், குலை நடுங்கச் செய்யும் சம்பவம் ஒன்று இங்கு நடந்துள்ளது.

எய்ட்ஸ் ஊசி போட வந்ததாகக் கூறி, தகிக்கும் வெயிலில் ஒரு வடநாட்டுக்கார இளைஞரை பெட்ரோல் ஊற்றி, ஊர் மக்களே கொன்றுள்ளனர். எரிக்கப்பட்ட கரிய படலம் நடுரோட்டில் படிந்திருக்கிறது. பஸ்ஸில் போகிற, வருகிறவர்களெல்லாம் ஒரு நிமிடம் இறங்கிப் பார்த்து விட்டுச் செல்கின்றனர்.

நாம் சென்னீர் குப்பத்துக்குள் நுழைந்த போது ஊரே வெறிச்சோடிக் கிடந்தது. எல்லாம் நடந்து முடிந்த இடத்திற்கு எதிரே போலீஸ் படை, நிழலில் இளைப்பாறிக் கொண்டிருந்தது. கரையான் சாவடி சாலை நெடுக உள்ள எஸ்.டி.டி பூத், டெய்லர் கடை இரும்புக் கடை என்று விசாரித்தோம்.

"நேற்று ஞாயிற்றுக் கிழமை. கடைக்கு விடுமுறை. அத

# தாண்டவமாடிய இனவெறி!



• படிந்திருக்கும் கருப்பு கறை



• செல்வி



• அமுதா

னால் என்ன நடந்தது என்று தெரியாது'' என்றனர்.

பொதுமக்களை விசாரித்தாலும் 'தெரியாது'தான் பதில்.

இளைஞர்கள் உற்சாகமாகப் பேசுவார்கள் என்று ஊருக்குள் இருந்து வரும் சைக்கிள்காரர்களை நிறுத்தக் கை காட்டினோம். பத்திரிகையாளர் என்று தெரிந்து கொண்டு 'கண்டுக்காமல்' பெடலை அழுத்தி மிதித்தனர். வீட்டுக்குள் இருந்து கிரிக்கெட் ஸ்டம்பைத் தூக்கி வந்த இரண்டு வருங்கால இந்திய வீரர்கள், "நாங்கள் வெளியூர். எங்களுக்கு இதுபற்றி எதுவும் தெரியாது" என்று 'உண்மை' பேசினர்.

வீட்டு முற்றத்தில் அமர்ந்திருந்த பெண்கள், "வெளிய என்ன நடந்துதுன்னு தெரியாதுங்க. நாங்க டி.வி. பாத்துக்கிட்டு இருந்தோம்" என்றார்கள்.

மதியம் ஒரு மணியிலிருந்து மாலை நான்கு மணி வரை சிறுகச் சிறுகக் 'கொல்லும் விளையாட்டு' அரங்கேறி இருக்கிறது. யாருமே பார்க்கவில்லை என்று சத்தியம் செய்கிறார்கள்!

முனிசாமி என்ற நடுவயதுக்காரர் கொஞ்சம் வாயைத் திறந்தார்.

"பத்து நாளா ஒரே பயங்க. ஐம்பது கள்ளப் பசங்க திருவள்ளூர் மாவட்டம் முழுக்க வந்திருக்காங்க. பாரிவாக்கத்தில பொம்பளைங்க தனியா இருக்கிற வீட்டுக்குள்ள புகுந்து கற்பழிக்கிறாங்களாம். கொள்ளை அடிக்கிறாங்களாம். நைட் ஷிப்ட் போகவே பயமா இருக்குங்க. எய்ட்ஸ் ஊசிய கையில வச்சிக்கிட்டு அலையிறானுங்களாம். அதில நேத்து செத்தவனும் ஒருவனாம்" என்றார்கள்.

'நீங்கள் நேரில் பார்த்திருக்கீங்களா?' என்றோம்.

"நான் பாக்கலை. மதுரவாயில்ல போன வாரம் மூணு பேரப் பிடிச்சிருக்காங்க. போலீச வரச் சொன்னதுக்கு ஆறு மணி நேரம் கழிச்சு வந்தாங்களாம்! வந்தவங்க, பொதுமக்கள் கிட்டயே ஜீப் வாடகை ஐந்நூறு ரூபா கொடுங்கன்னு கேட்டாங்களாம். பிடிச்சிட்டுப் போன மறுநாளே அவங்கள போலீஸ் விட்டுடுச்சாம். அதனால தான் தண்டனையை நாமே கொடுத்திடலாம்ன்னு மக்கள் தீர்மானிச்சிட்டாங்க" என்றார் முனிசாமி.

சித்துக்காடு பகுதியில் ஒரு வீட்டிற்குள் நுழைந்து நகையைத் திருடியிருக்கிறது ஒரு கும்பல். அதை எதேச்சையாகப் பார்த்த சிலரை, "நாங்க திருடும் போது ஏண்டா பாத்த?" என்று ஆட்டோவில் அடியாட்களோடு வந்து தாக்கியதாகவும், சான்றிதழ்களைச் சுருட்டிக் கொண்டு போனதாகவும் சொல்கின்றனர். 'இரவு நேரத்தில் உடம்பெல்லாம் எண்ணெய்யைத் தடவிக் கொண்டு வருகிறான். அவனைப் பிடிக்கவே முடியவில்லை. தொட்டால் உடம்பு வழுக்குகிறது. அவன் காலில் ஸ்பிரிங் ஷூ போட்டிருப்பதால் மாடி விட்டு மாடிக்கு ஒரே ஜம்பில் தாண்டுகிறான். ஒரு விசும்பு விசும்பினால், அலாக்காகப் போய் விழுகின்றனர்...' இத்யாதி இத்யாதி கதைகள் உலவுகின்றன.

திருநின்றவூரில் கிளம்பிய பீதி ஒரு மாதத்திற்குள் திருவள்ளூர் மாவட்டம் முழுக்கப் பரவி ஆட்டுகிறது.

"ஒரு வாரமா தூக்கமில்லீங்க. கோடைக் காலத்தில மட்டும் விடியக்காலை ஐந்து



• சம்பவத்துக்குப் பின் 'பாதுகாக்கும்' போலீஸ்

மணிக்குக் கிளம்பி ஒன்பது மணி வரை விவசாய வேலைக்கு ஆட்கள் வருவார்கள். இந்த ஒரு மாசமா வேலைக்கு யாரும் அஞ்சு மணிக்குக் கிளம்புறதில்லீங்க. எட்டு மணிக்குத் தான் வர்றாங்க. ராத்திரியில கூலிக்கு ஆளைக் கூப்பிடப் போனா, 'வராதீங்க. சந்தேகப்பட்டு உங்களைப் பிடிச்சு அடிச்சிடுவாங்க'ன்னு சொன்னதால போறதில்ல.

"களவாசல்ல ராத்திரி வேலையே நடக்கிற தில்லை. கொழுந்த குட்டிகள விட்டுட்டு வர மாட்டோம்ன்னு இருந்துக்கிடுறாங்க. இந்தப் பீதியில இருக்குறப்போ போன வாரம் நாலு பேரு எய்ட்ஸ் ஊசிய வச்சுக்கிட்டு தனியா இருக்கிற பொம்பள வீட்டத் தேடியிருந்திருக் காங்க. ஜனங்க பாத்து வளைச்சப்போ மூணு பேரு அகப்பட்டாங்க. ஒருத்தன் தப்பிச்சிட் டான். தப்பிச்சவன்தான் இவன்னு சொல் றாங்க" என்றார் சி. சம்பத். ராஜீவ் காங்கிரஸ் செயற்குழு உறுப்பினர் இவர்.

சம்பத்தின் மகன் மனோகர், "அடிச்சு நொறுக்கிட்டு இருந்தாங்க அந்த மத்தியான வெயில்ல..." என்று சீரியசாகச் சொல்ல வந்த வரை, சம்பத் இடைமறித்து, 'வேறு விஷயத் திற்கு' இழுத்ததும், நோக்கத்தைப் புரிந்து கொண்டு சம்பத், "திருடனைப் பிடித்து வைத் திருப்பதாக பூந்தமல்லி ஸ்டேஷனுக்குச் சொல்லி இரண்டு மணி நேரம் கழிச்சுதான் வந்தாங்க. ரெண்டே ரெண்டு போலீஸ் வந் தாங்க. ஜீப்பில தூக்கி வச்சவங்க, திடீரென்று இறக்கி விட்டு, ஸ்டேஷனுக்குக் கொண்டு வாங்கன்னு போயிட்டாங்க. அவங்க ஏன் போட்டுட்டுப் போகணும்? தூக்கிட்டுப் போயிருந்தா செத்திருக்க மாட்டான். ரோட் டில கட்டிப் போட்டிருந்ததைப் பார்த்திட்டு, பெண்கள் எல்லாம் எரிக்கச் சொன்னாங்க. ட்ராபிக் ஜாம் ஆனவுடன் பஸ்ஸிலிருந்த மக்கள் எல்லாம் கத்தி நின்னாங்க. அவங்க எரிச்சிடச் சொன்னாங்க. அப்படித்தானப்பா?"

மனோகர் அப்பாவைப் பார்த்து, பாரத் தைப் பயணிகள் மேல் சுமத்தினார்.

பெட்ரோல் ஊற்றி எரிக்கப்பட்டவரை முன்னதாக 'கையும் களவு'மாகப் பிடித்தீர்களா என்றால் 'இல்லை' என்கின்றனர். எல்லாம் சந்தேகத்தின் பேரிலேயே கொன்று விட்டனர்!

நம்மிடம் கொஞ்சம் தைரியமாகப் பேசியவர், திருமதிகள் அமுதாவும் செல்வியும் தான்.

"என்னாங்க! அவன்தான் ராத்திரி வர் றான்றதுக்கு என்னங்க சாட்சி? தமிழ் தெரியாத ஹிந்திக்காரனைப் பிடிச்சு அடிச்சா எப்படிங்க அவன் பதில் சொல்ல முடியும்? ஹிந்தியில ஏதோ சொல்லி அழுதாங்க. கரையான் சாவடி தெரு முழுக்க புரட்டிப் போட்டு அடிச்சு நொறுக்கிட்டாங்க. இரும்புக் கடை முன்னாடி, 'ஆளு செத்துப் போயிடுவா'ன்னு நடுரோட்டில போட்டுட்டாங்க. கொஞ்ச நேரம் கழிச்சு எழுந்து உக்காந்தான். மூஞ்சிய தரையில போட்டு மிதி மிதின்னு மிதிச்சாங்க. ரெண்டு காலைப் பிடிச்சு தரதரன்னு இழுத்திட்டு வந்து சுடுற தார்ச் சாலையில போட்டாங்க. உடம்பு

# I Know what you did Last Summer



அமெரிக்காவிலுள்ள வட கரோலினாவில் நடைபெறும் கதை. விழாவொன்றில் கலந்து கொண்டு நான்கு கல்லூரி இளவட்டங்கள் (இரு மாண வர்கள், இரு மாணவிகள்) காரில் வீடு திரும்பும்போது, கார் எதன்மீதோ வேகமாக மோதி விடுகிறது. நள்ளிரவு. ஆள் நடமாட்டமற்ற சாலை. மோதியது எதன் மீதோவா? யார் மீதோவா? பயத்துடன் காரை நிறுத்திப் பார்க்க, தெருவோரத்தில் கிடக்கிறது

தோல் முழுக்க உரிஞ்சு ரத்தமா கசிஞ்சதுங்க" என்றார் அமுதா.

"போலீஸ்காரங்க வந்து பார்த்திட்டு வண்டியில ஏத்துனவங்க, ஏன் திரும்ப இறக்கிப் போட்டுட்டுப் போகணும்னு சிலர் சொல்றாங்களே?" என்று கேட்டோம்.

"என்னாங்க, அவனைத் தூக்கிட்டுப் போனாலும் பாதி வழியிலயே கண்டிப்பா செத்துப் போயிருப்பான். கொதிக்கிற தார் சாலையில அசைய முடியாம கெடக்க முடியுங்களா? இப்படித்தான் சிவன் வாயில்ல ஒரு ரிடையர்டு மிலிட்டரி ஆளை வெரட்டிப் பிடிச்சு அடிச்சிருக்காங்க. அவன் ஐ.டி. கார்டைக் காட்டின பின்னாடி விட்டிருக்காங்க. இந்த ஜனங்களுக்கு என்ன ஆச்சு?" என்று வருத்தப்பட்டார் செல்வி.

"எய்ட்ஸ் ஊசியைப் போடத் திரிகிறதா சொல்றாங்களே! அவன பிடிச்சாங்க இல்லியா? அந்த ஊசி எங்கே? வீட்டில திருடின பொருள்கள் எங்கே? அதெல்லாம் எங்க போச்சு? புரளியைக் கிளப்பி அநியாயமா ஒரு ஆளைக் கொன்னுட்டானுங்க சார். ஊரே திரண்டு கொன்னதா சொல்றாங்க. கொன்னது மூணே மூணு பேருதான். செத்துப் போனவனைக் கையைக் கட்டி பெட்ரோல் ஊற்றி எரிச்சாங்கன்னுதான் சொல்லுவேன்."

அமுதா சொல்லும்போது சிலர் 'சொல்லாதே' என்பது போல் சைகை செய்தார்கள். அமுதா எதையும் பொருட்படுத்தாமல் பேசினார்.

செல்வி, "ரெண்டு மணி நேரம் ட்ராபிக் ஜாம் ஆயிடுச்சு. வெளியூர் போறவங்க எல்லாம் பஸ்ஸை விட்டு எறங்கி நின்னு எரியறதைப் பார்த்தாங்க. பெட்ரோல் ஊத்துறதுக்கு முன்னாடி, போட்டிருந்த ஜட்டியை உருவி எடுத்து அசிங்கப்படுத்தினாங்க. தடுக்கப் போன போலீஸைக் கூட்டமே அடிக்கப் போகுது! ரெண்டு போலீஸ் என்ன பண்ண முடியும்?" என்றார்.

"எல்லாம் பீஸ் பீஸா பிச்ச பின்னாடிதான் போலீசுக்கே போன் பண்ணுனாங்க. ரொம்ப சின்ன வயசுங்க சார். உயரமா அழகா இருந்தாரு சார். எந்த ஊர்க்காரரோ? வடநாட்டிலிருந்து இங்க என்ன பிஸினஸ் பண்ண வந்தாரோ? பெட்ரோல் ஊத்தின உடனே நாக்க நாக்க நீட்டினாரு. ஐயோ எவ்வளவு தாகமோ? அவன் அம்மாவுக்குத் தெரியுமா? புரளியால அடிச்சே கொன்னுட்டாங்க! எதுக்கு கொன்னோம்னு யாருக்காவது உறுதியா தெரியுமா சார்?" அமுதா உணர்ச்சிவசப்பட்டுப் பேசினார்.

ஊரே கூடி எரித்த அந்த இடம் இன்னும் கருமை படர்ந்திருந்தது. மனிதனுக்குள் இன்னும் மிருகம் இருப்பதை அந்த வட இந்திய இளைஞன் தன் கொடூர மரணம் மூலம் நிரூபித்திருக்கிறான். ⊙

- சு. வேணுகோபால்

படங்கள் : ஸ்ரீஹரி

முகம் சிதிலமடைந்த ஓர் உடல். போலீஸுக்குத் தெரிவித்தால் வருங்காலமே போச்சு எனக் கருதி அந்த உடலை அருகிலுள்ள கடலில் வீச முடிவெடுக்கிறார்கள். வீசுவதற்குச் சற்று முன் அந்த உடலில் கொஞ்சம் அசைவு ஏற்படுகிறது. இருந்தும் அளவு கடந்த பீதியால் அதைக் கடலில் வீசி விடுகிறார்கள். அதாவது ஒரு விபத்து கொலையாகிவிடுகிறது.

அதற்குப் பிறகு நால்வரின் வாழ்க்கைப் பாதையும் மாறிவிடுகிறது. கல்லூரியிலிருந்து பாதியில் விலகி ஒவ்வொருவருமே தான் நினைத்ததைவிடத் தரம் குறைந்த வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டிய கட்டாயம்.

இந்த நிலையில் அவர்களுக்கு வந்து சேருகிறது ஒரு கடிதம். அந்தக் கடிதத்தில் உள்ள ஒரே வாக்கியம்தான் படத் தலைப்பு.

பிறகு அவர்கள் வாழ்வில் திடுக்கிடும் சம்பவங்கள் ஒவ்வொன்றாக நடக்க, யார் தங்களை இந்த அளவு பயமுறுத்துவது என்பதை சம்பந்தப்பட்ட இரு மாணவிகளும் துப்பறிய முயல, எதிர்பாராத கோணங்கள் பிடிபடுகின்றன.

முழுப் படமுமே வேகமாக நகர்கிறது. ஒளிப்பதிவு படத்தின் பெரும்பலம். அதுவும் தொடக்க ரீல்களில் கடற்கரை மற்றும் மலையின் பின்னணியில் அந்த அமானுஷ்ய சூழலை காமிரா வெகு அற்புதமான கோணங்களில் படம் பிடித்திருக்கிறது. இந்த நால்வர் அல்லாத வேறு இருவர் கொலை செய்யப்படுவது ஏன் என்பதற்கான விடை தெரியக் காணோம்.

திடுக்கிடச் செய்யும் படங்களில் ஆர்வம் உள்ளவர்கள் தாராளமாகப் பார்த்துவிட்டு சந்தோஷமாக பயப்பட்டுக் கொண்டு வரலாம். ⊙

— ஜி

கீழ்ப்பாக்கம் ஜெய லலிதா கூடைப் பந்தாட்ட மைதானத்தில் கோடைக் கால கோச்சிங் வகுப்புகள் தொடங்கியிருக்கின்றன. பெற்றோரும் குழந்தைகளு மாக எப்போதும் இங்கே ஜே.ஜே! எல்லா குழந்தை களும் பதின் மூன்று, பதி னான்கு வயதுடையவர்களே!





# ஜா ~~ஹா~~லிடே ஸ்பெஷல்!

அமெரிக்காவில் கல்லூரி மாணவர்களுக்கு கூடைப்பந்துப் பயிற்சியாளராக இருந்த மாதவன் பிள்ளை 'ஷூட் டிங் ஆக்ஷனில்' (கூடையில் பந்து வீசும் விதம்) புதிய முறைகளைச் சொல்லிக் கொண்டிருந்தார். குழந் தைகள் பயிற்சிக்கென்றே பிரத்யேகமாகத் தருவிக் கப்பட்டுள்ளார் இவர்.

"ஆண்களுக்கு ஓவர் ஹெண்ட் ஷூட்டிங் சரிப் பட்டு வரும். பெண்கள் அதைப் பின்பற்றாமல் ஷோல்டர் சைட் ஷூட்டிங் பழகுவது நல்லது. பலத் தைத் திரட்ட இது உதவும்" என்று விதவிமான புதிய டெக்னிக்குகளை சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

திருமதி ரேணுகா வடபழனிக்காரர். தம் குழந்தைக்காக தினம் தினம் வருகிறாராம்.

"காலை மாலை ரெண்டு ரெண்டு மணி நேரம் கோச்சிங் இருக்கிறதாலே பதினஞ்சு நாள் ஆபீசுக்கு லீவ் போட்டிருக்கேன். அடுத்த பதினஞ்சு நாள் என் வீட்டுக்காரர் போடுவார். இப்ப இவ ஆறாம் கிளாஸ் போறா. பிளஸ் டு முடிக்கிறப்போ டாக்டர், இஞ்ஜினீயரிங் ட்ரை பண்ணும்போது என்ட்ரன்ஸில் மார்க் கொறஞ்சா, விளையாட்டுக்குன்னு பத்து மார்க் வச்சிருக்காங்க. கட் ஆஃப் மார்க்கில் இது கை கொடுக்கும். அது மட்டுமில்லை. நல்ல உடற்பயிற்சியும்தானே?" என்கிறார்.

"ஒரு வருஷமாச்சுங்க என் பொண்ணுகூட உக்காந்து பேசி! காலையில நான் ஒரு மூலை, மனைவி ஒரு மூலைக்கு ஓடணும். ஆபீஸ் விட்டுத் திரும்பி வர ராத்திரி எட்டு மணி ஆயிடும். எக்ஸாம்

முடிஞ்ச மறுநாள், 'இந்த வருஷம் முழுக்க எங் கூட ஒரு நாளாவது ஸ்பெண்ட் பண்ணுவீங் களா? பகலெல்லாம் வீட்டில் தனியா விட்டுட் டுப் போயிடுறீங்க. இந்த கார்ட்டூன் கேசட்டை எத்தனை தடவை பாக்குறது?''ன்னு ஃபீல் பண்ணுனது எனக்குக் கஷ்டமாயிடுச்சு. செவன்த் படிக்கிறா. சரி, எங்க போகலாம்னு கேட்டேன். 'எங்கயும் வேண்டாம்; ஸ்போர்ட் ஸ்ல சேத்துவிட்டுட்டு ஒரு மாசம் என் கூடவே இருங்கன்னா. லீவ் போட்டுட்டு ஸ்டேடியத்துக்குக் காலையிலயும் சாயந்திரமும் கொண்டு வந்து விட்டுட்டு வேடிக்கை பாக்கு றேன்'' – இஞ்சினியரான நாராயணன் சொல்லி, சந்தோஷப்பட்டார்.

பெற்றோர்கள் டாடா சுமோ, மாருதி களில் வந்து, ஃபிளாஸ்கோடு நிற் கிறார்கள். பயிற்சியின் இடை வெளி யில் முத்து முத்தாகப் பூத்த வியர் வையைத் துடைத்து விட்டு உற் சாகப்படுத்துகின்றனர்.

பொதுவாக கிரிக்கெட், கால் பந்து, டென்னிஸ் போன்ற விளை யாட்டுகளுக்கு இருக்கிற பெரிய மவுசு கூடைப்பந்தாட்டத்திற்கு இல்லையே'' என்று திருமதி ருக் மணியிடம் கேட்டோம்.

''அப்படியெல்லாம் இல் லீங்க. இந்தியாவில் உலகத் தர மாக விளையாட ஆள் இல்லை. அப்புறம் எப்படிப் பிரபலம் ஆகும்? மத்த விளையாட்டு வீரர் வாங்கும் சம்பளத்தை விட மைக்கல் ஜோர்டன் வாங் குறது அதிகம். அமெரிக் காவே அவரைத் தூக்கி வச்சுக் கொண்டாடுது.

''அந்த நாட்டில் மைக் கலுக்கு உள்ள ரசிகர் பட்டாளம் வேற எந்த ஆட்டக்காரர்களுக்கும் இடையாது. என்னைப் பொறுத்த அளவில் மத்த விளையாட்டுகளுக்கு மினிமம் ரூல்ஸ்தான் இருக்கு. இதில ஒவ் வொரு மூவ்மெண்ட் டும் முக்கியம். பிர ஸன்ஸ் ஆஃப் மைண்ட் இந்த விளையாட் டுக்கு ரொம்ப ரொம்ப அவசியம்! இது பின் னாளில் வேற வேற விஷயங்களுக்கும் கைகொடுக்கும். வேகம், சுறுசுறுப்பு, கவனம் மூன்றும் இதில உயிர்! குழந் தைகளுக்கு மனசை ஒருமுகப் படுத்துறதில் கூடைப் பந்து விளையாட்டு நம்பர் ஒன்! மேலும் குழந்தைகளுக் கும் ஜாலியா பொழுது போகு மில்லையா?'' என்று ஒரு போடு போட்டார்.

ருக்மணி, கல்லூரியில் கூடைப்பந்தாட்ட கேப்டனாக இருந்தவர் என்பது பிறகு தான் தெரிந்தது. அந்தக் காலத்தில் உருப்படியான ஸ்டேடியம் இல்லாததால் மலர முடியாமல் போய் விட் டது. இப்படி ஒரு வாய்ப்பு இருக்கும்போது குழந்தைக ளாவது அந்தக் கனவை அடையட்டும் என்று விடு முறை எடுத்து வந்திருப்ப தாகக் கூறினார்.

இந்த ஜெயலலிதா கூடைப்பந்தாட்ட ஸ்டேடி யத்தின் கோச் ராஜா, ''விளையாட்டு பற்றிய விழிப் புணர்ச்சியை கிராமம் வரைக்கும் எடுத்துச் செல்ல ணும். முறையான பயிற்சி இல்லாததால் இந்தியாவை விட்டு நம்மால் வெளியே போய்த் திறமை காட்ட முடி வதில்லை. இந்தியாவிலேயே பல தனியார் கூடைப்பந் தாட்டக் கழகங்கள் உண்டு. ஆனால் அவற்றுக்கெல்லாம் இப்படியொரு ஸ்டேடியம் இல்லை. இந்தியாவிலேயே நம்பர் ஒன் ஸ்டேடியம் இது தான். இப்ப இங்க, நிறைய பெற்றோர் குழந்தைகளைக் கூட்டிட்டு வர்றாங்க. நகரத் தில இருக்குறவங்களுக்கு மிகப் பெரிய வாய்ப்புத் தான்'' என்றார்.

(பி.கு.: இந்த முகாமை நடத்துபவர் யார் தெரியுமா? கிரானைட் ஊழலில் சிக்கி, கோர்ட்டுக்கு நடந்து கொண் டிருக்கிற தியானேஸ்வரன் ஐ.ஏ.எஸ்!)

— அம்மாபட்டி ஜம்பு

படங்கள் : ஸ்ரீஹரி



டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி

**வா**ழ்வில் சில மாற்றங்கள் ஏற்படு கின்றன.

புதிய சூழ்நிலையில் நாம் தள்ளப்படு கிறோம். புதிய பிரச்னைகள் எழுகின்றன.

அப்போது நாம் என்ன செய்கிறோம்?

இதுவரை நாம் பெற்ற அறிவையும், நாம் வளர்க்கப்பட்ட விதத்தையும், நாம் படித் ததையும் வைத்துக் கொண்டு இவற்றைச் சமாளிக்கப் பார்க்கிறோம். வாழ்வில் நெருக் கடி ஏற்படுகிறது. வாழ்வின் கடைசி நிலைக்கே நாம் தள்ளப்பட்டிருப்பதாக கற்பனை செய்கிறோம். வாழ்வின் ஜீவப் போராட்டம். அப்போது நமது பழைய அனு பவங்களும் பழைய வழிமுறைகளும் உதவுவ தில்லை. நம்மை நாமே ஆராய்கிறோம். வாழ்வில் நமது லட்சியம் எது என்ற முக்கிய மான விஷயத்தைத்தொட்டு அதை முன் னிறுத்துகிறோம். (First things first) "முக் கியமான முதல் காரியம், முதலில் செய்யப்பட வேண்டும்" என்ற தலைப்பில் நிர்வாகக் கலை பேராசிரியர் ஸ்டீபன் கோவி ஒரு புத்தகமே எழுதி இருக்கிறார்.

இதன் விளை வாக நமது சிந்த னைகளிலே பெரும் மாற்றம் ஏற்படுகிறது. இது நம் வாழ்க்கை முறையிலே பிரதிபலிக்கிறது. நாம் நம் - புதிய எண்ணங்களால் - புதிய சிந் தனைகளால்தான் மாறுகிறோம்.

**இ**ப்படிப்பட்ட ஒரு போராட் டத்தில் நான் சிக்கிக் கொண்டேன், நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் முதுநிலைப் படிப்பில் சேர்ந்தபோது.

வேதியல் மேல் படிப்பை இண்டர் மீடியட்'டிற்குப் பிறகு நான் தொடர்ந்து படித்திருந்தேனானால் எளிதாக முடிந்திருக்கும். அதிகமாக ஓராண்டு ஆகியிருக்கும். ஆனால் இப்போது மீண்டும் இரண் டாண்டுகள் படிக்கும் நிலை.

இடையிலே ஐந்தாண்டுகள் மேற்படிப்பின் தொடர்பு இல் லாமல் போய்விட்டது – பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண் டிருந்ததனால். முன்பு நான் பிரம்மசாரியான மாணவன்.







இப்போது மனைவி குழந்தை என்று குடும் பஸ்தன். அதைவிட சோத னையான விஷயம் பல்கலைக் கழகத்தில் பாடங்கள் துவங்கி கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் கழிந்த பின் நான் மாணவனாகச் சேர்ந்தேன். ஒரு இருபது நாட்களில் காலாண்டுத் தேர்வு வந்து விட்டது. "ஏதோ கடந்த மூன்று மாதங்களில் சொல்லிக்

"கொடுத்ததை ஆசிரியர் கேட்பார்" என்று நான் படித்து வைத்திருக்க, அவரோ முந்திய ஆண்டில் தாம் நடத்திய பாடங்களிலிருந்தும் கேள்விகளைக் கேட்டிருந்தார்.

காலாண்டுப் பரீட்சையில் பல்கலையில்







சேர்ந்தவுடன் பேராசிரியர் பாலையா அவர்கள் நடத்திய பாடத்தில் நான் பெற்ற மதிப்பெண்கள் 32. எவ்வளவு மதிப்பெண் வாங்கி இருக்கிறேன் என்பது எனக்குத் தெரியாது. என்னைவிட மோசமாக 17, 11, 8 என்று என வாங்கியவர்கள் அதில் இருந்தார்கள்! அதுவும் எனக்குத் தெரியாது.

பேராசிரியர், பரீட்சை எழுதிய விடைத்தாள்களை எடுத்து வந்தார். எல்லோருக்கும் கொடுக்க ஆரம்பித்தார். பகல் மணி 12.30 இருக்கும். அவருடைய வகுப்பு, காலை நேரத்தின் கடைசி வகுப்பு. சில பேருக்கு அவர்களது விடைத்தாள்களைக் கொடுத்தபின் துரதிர்ஷ்டவசமாக, என்னுடைய விடைத்தாளை எடுத்ததும் அவர் பெரிய 'லெக்சரே' கொடுக்க ஆரம்பித்துவிட்டார். என் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார்; கையில் என் விடைத்தாளை வைத்துக் கொண்டு பேச ஆரம்பித்துவிட்டார்.

அதாவது ஆசிரியராக இருந்துவிட்டு பாடம் படிக்க வருபவர்கள் அக்கறை இல்லாதவர்கள், ஆசிரியராய் இருந்த அனுபவத்தில் பாடங்களைக் கடமைக்காகப் படிக்கிறார்களே தவிர படிப்பில், ஆராய்ச்சியில் ஆர்வம் இருப்பதில்லை என்று துவங்கினார்.

எனக்கு உடம்பு சில்லிட்டது. குடந்தையில் என்னிடம் மாணவர்களாக இருந்தவர்களே இப்போது என்னுடன் சகமாணவர்களாக வகுப்பில் அமர்ந்திருக்கிறார்கள். நான் பல்லைக் கடித்துக் கொண்டேன்.

பேராசிரியர் தன்னோடு வேலை பார்த்த தன் நண்பர் எப்படி மேல் படிப்புக்காகத் தன்னிடம் மாணவராகச் சேர்ந்தார் என்றும், அவருக்கிருந்த குடும்பப் பிரச்னைகளையும், தன் மாணவருக்கும் பேராசிரியர் பாலையாவுக்கும் ஏற்பட்ட பிரச்னைகளையும் சாங்கோ பாங்கமாக சொல்லிக் கொண்டே போனார். எல்லாம் என்னையே மறைமுகமாக விமர்சிப்பது போலிருந்தது.

என் இதயத் துடிப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது. ஒரு மணி ஆயிற்று. வகுப்பு முடிய வேண்டிய நேரம். பேராசிரியர் தன் மாணவ விமர்சனத்திலே ஆழ்ந்து போனார்.

மணவியல் சம்பந்தமான ஒரு விஷயம் எனக்குப் புலப்பட்டது. அதாவது இப்போது நாம் குறுக்கிடக்கூடாது. இவரை முழுக்க முழுக்கப் பேச விட வேண்டும். எல்லாம் கொட்டி முடித்தபின் எழுந்து தாக்க வேண்

# மார்க்-32

டும் – அதாவது பதிலளிக்க வேண்டும் என்ற எண்ணம், என்னுள் வலுப்பட்டுக் கொண்டே இருந்தது.

மணி மதியம் ஒன்றே காலும் ஆயிற்று. பேச்சை நிறுத்தினார்; எனது விடைத்தாளை மீண்டும் கையிலெடுத்தார்.

நான் அமர்ந்த இடத்திலிருந்து எழுந்தேன். உணர்ச்சி பொங்க, "நீங்கள் என்னை அவமானப்படுத்துகிறீர்கள். (You are insulting me) உங்கள் நண்பர் போல ஆவேன் என்று சொல்கிறீர்களா?" என்றேன்.

அவ்வளவுதான்! அங்கே பூமியே அதிர்ந்தாற் போலிருந்தது! இத்தனை நாளும் இப்படி ஒரு மாணவன் வகுப்பிலே எழுந்து பேராசிரியரை நேரே எதிர்த்துப் பேசியதில்லை! பேராசிரியர் அதிர்ச்சி அடைந்தார். படபடப்புடன், "நான் அவரை அவமதித்தேனா?" என்று திரும்பத் திரும்ப எல்லோரையும் - 16 மாணவர்களையும் கேட்டார். மாணவர்கள் என்ன சொல்வார்கள்? "ஆம்!" என்றா சொல்ல முடியும்? "இல்லை இல்லை!" என்று தலையாட்டினார்கள்; முனகினார்கள். அவ்வளவுதான்! வெகு வேகமாக மற்ற விடைத்தாள்களை - 17, 11, 8க்களை எல்லாம் எவ்வித பேச்சு மூச்சின்றி விநியோகித்தார்; வேகமாக மேடையிலிருந்திறங்கி, தம் அறைக்குப் போனார்.

நான் மற்ற மாணவர்களுடன் பேசும் நிலையில் இல்லை. அவர்கள் என்னை மேலும் பயமுறுத்தியிருக்கக் கூடும்.

**எ**டுத்துக் கொண்டு வந்திருந்த மதிய உணவைச் சாப்பிட்டேன். மனமெல்லாம் நடந்ததைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தது.




"என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார் இந்த மனிதர்?" என்ற எண்ணமும், "நன்றாகக் கொடுத்தோம்" என்ற திருப்தியும், வேகமும்தான் என் மனத்தில் இருந்தன.

Honours எனப்படும் சிறப்பு படிப்பு – முதுநிலைப் படிப்பு - முழுக்க முழுக்க பேராசிரியரை ஒட்டியதாகவே இருக்கும். அவர்தான் எல்லாம். அவர் விரும்பினால் கீழே இருப்பவர்களை மேலே தூக்கி குறைந்தபட்சம் வேலை பெறத் தகுதி உள்ள இரண்டாம் வகுப்பு பட்டத்துடன் அனுப்ப முடியும். அவருக்குப் பிடிக்கவில்லை என்றால் நீங்கள் முதல் வகுப்பு பெறும் மாணவராயிருந்தாலும் மூன்றாம் வகுப்பு கொடுத்து உங்கள் மீது பழி தீர்த்துக் கொள்ள முடியும்.

அன்று மதிய உணவுக்குப் பிறகு என் பாட வகுப்பிற்காக ஆய்வுக் கூடத்திற்கு சென்றபோது எனக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

வேதியல் துறை ஆசிரியர்கள் அனைவரும் ஆராய்ச்சி மாணவர்களும் காலையில் வகுப்பில் நடந்த என் சம்பவத்தைப் பற்றித்தான் கூட்டம் கூட்டமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஆங்கில நாவல் ஒன்றில் ஆலிவர் டுவிஸ்ட் என்ற அநாதைச் சிறுவனைப் பற்றி ஒரு கதை வரும். ஆலிவர் டுவிஸ்ட் அநாதைப் பள்ளியில் சேர்கிறான். அங்கே அவன் சொன்னதைச் செய்ய வேண்டும்; போட்டதைச் சாப்பிட வேண்டும்; எழுந்திருக்க வேண்டும். இப்படிப்பட்ட சூழ்நிலையில் ஆலிவர் டுவிஸ்ட் சாப்பிட்டு முடித்தவுடன் "எனக்கு இன்னும் கொஞ்சம் சாப்பாடு!" என்கிறான். சாப்பிடுகின்ற மாணவர்களிலிருந்து பரிமாறுபவர்கள் உட்பட எல்லோரும் அதிர்ந்து போகிறார்கள். இது நாள் வரை இப்படி ஒருவன் கேட்டதில்லை! எல்லோருமே அவனைப் பார்க்கிறார்கள். ஏதோ மாபெரும் குற்றஞ் செய்தவனைப் போல!

இந்தக் கதைதான் எனக்கும் நிகழ்ந்தது.

"நீ பேராசிரியரை எதிர்த்துப் பேசினாயாமே?"

"நீ எவ்வளவு மார்க் வாங்கினாய்?"

"உன் எதிர் காலம் தொலைந்தது. போ!" என்ற பேச்சுக்கள். யாரும் என்னை வீரனாகப் பார்க்கவில்லை; சாதாரண மாணவனாகக் கூடப் பார்க்கவில்லை. கோயிலுக்கு அழைத்துச் செல்லும் பலிகடாவாகப் பார்த்

தார்கள்.

எனக்கு மீண்டும் உடம்பு சில்லிட்டது. இப்போதுதான் நான் பேசியதன் விளைவுகள் என் முன் பிரம்மாண்டமாகக் காட்சி அளித்தன.

என் எதிர் காலத்தையே நான் பாழாக்கிக் கொண்டதை உணர்ந்தேன். அன்றிலிருந்து பேராசிரியர், நான் உட்கார்ந்திருக்கும் பெஞ்சில் உள்ளயாரையும் கூட எந்தக் கேள்வியும் கேட்க மாட்டார். மற்ற எல்லா பெஞ்ச் மாணவர்களிடமும் கேள்விகள் கேட்பார்.

என் எதிர் காலமே என் மேற்படிப்பில் இருக்கிறது; அதில் வாங்கும் மதிப்பெண்களில் இருக்கிறது. தப்பித்தவறி மூன்றாம் வகுப்பு பெற்று விட்டால் எனக்கு விரிவுரையாளராகப் பதவி உயர்வு கிடைக்காது. மூன்றாம் வகுப்பு வாங்கினால் யாரிடம் போய்ச் சொல்ல முடியும்? "நான் நன்றாகப் படிப்பவன். எனது பேராசிரியருக்கும் எனக்கும் சண்டை. அதனால்தான்..." என்று இழுத்தால் யாராவது நம்புவார்களா?

நானோ எல்லாவித கஷ்டங்களுடன் கடன் வாங்கி, கஷ்டப்பட்டு அட்மிஷன் வாங்கி, படிக்க வந்திருக்கிறேன். இதை எல்லாம் உணராது நான் பேராசிரியரை முறைத்துக் கொள்ளலாமா? இப்படி மூன்றாம் வகுப்பு பெற்று, மீண்டும் கீழ் நிலைக்குப் போகவா இங்கே வந்திருக்கிறேன்? ஆயுள் பூராவும் அவர் மூன்றாம் வகுப்பு மாணவர் என்று அது அல்லவா எல்லோர் ஞாபகத்திலும் நிலைத்து நிற்கும்? என்ன காரியம் செய்தேன்!

இந்த எண்ணங்கள் அடுத்தடுத்த வாரங்களில் என்னைப் படாதபாடு படுத்தின. நான் வீட்டில் இதை யாரிடமும் சொல்லவில்லை. என் மனைவியிடம் கூட. நான் இதை யாரிடமாவது சொல்லி அனுதாபம் தேடி இருந்தேனானால், நிச்சயம் அவர்கள் எனக்கு அனுதாபமோ, ஆதரவோ காட்டி இருக்க மாட்டார்கள். யதார்த்த உலகைப் பார்க்கும் அவர்கள், மேலும் என்னை பயமுறுத்தி இருக்கக் கூடும்.

"நான் என்ன செய்தேன், என்ன செய்ய முடியும்?" என்றும் யோசித்தேன்.

இரண்டு விஷயங்கள் புலப்பட்டன.

ஒன்று : கடுமையாக உழைக்க வேண்டும். நன்கு படிக்க வேண்டும். நல்ல மதிப்பெண்கள் வாங்க வேண்டும். என்ற தீர்மானம்.



"சே! வரவர எதுக்குதான் ஸ்ட்ரைக் பண்றதுன்னு எங்க ஆபீஸ் ஊழியர்களுக்கு ஒரு விவஸ்தையே இல்லாமல் போயிடுச்சு!"
"ஏன்? என்ன ஆச்சு?"
"எங்க ஆபீஸுக்கு லிஃப்ட் வெக்கச் சொல்லி ஸ்ட்ரைக் பண்றாங்க!"
"இதிலென்ன தப்பு?"
"எங்க ஆபீஸ் மாடியே கிடையாதேப்பா...?!"
— வடபழனி பாலு

இரண்டாவதாக : எனது மனித உறவுகள் சரியில்லை; பழகும் தன்மை சரியில்லை. "எது முக்கியம்? எதற்காக இங்கே வந்தோம்?" என்பதை உணராமல் இப்படி ஒரு காரியம் செய்யலாமா? போன்ற சிந்தனைகள் என் வாழ்வை மாற்றி அமைத்தன.

இதன் விளைவாக அரையாண்டுத் தேர்வில் நான் 72 மதிப்பெண்கள் பெற்று மூன்றாவது மாணவனாக இருந்தேன். எனது முது நிலைப்பட்டப் படிப்பில் முதல் வகுப்பில் தேறினேன். வேதியல் படிப்பில் அபரிமிதமான ஆர்வம் ஏற்பட்டது.

அடுத்த ஓரிரு மாதங்களிலேயே சிறப்பு வகுப்பில் என்னுடன் படிக்கும் மாணவ மாணவிகளை ஒன்று சேர்த்து (Honours Club) சிறப்பு வகுப்பு மாணவர் சங்கம் ஒன்றைத் துவங்கினோம். ஒவ்வொரு வெள்ளிக் கிழமை மாலையும் ஒரு மாணவர் வேதியல் சம்பந்தமான ஒரு தலைப்பில் பேசுவார். மற்றொரு மாணவர் அனைவருக்கும் தேநீர் அளிக்கும் செலவை ஏற்றுக்கொள்வார். இப்படி அங்கு படித்த இரண்டாண்டுகளும் இதைத் தொடர்ந்து நடத்தினேன். என் முழு முயற்சிதான் இதன் பின்புலம்.

வாழ்வில் நெருக்கடிகளும் பிரச்னைகளும் வருகின்றன. அப்போது நாம் மாறுகிறோம்; நம் சிந்தனைகளையும் அணுகு முறையையும் மாற்றி அமைத்துக் கொள்கிறோம். அதன் மூலம் வளர்கிறோம்; உயர்கிறோம்.

"ஓம் என்பது ஒரு பாலம்" என்பதைப் போல "சிந்தனைகளை சீரமைத்துக் கொள்" என்பதை ஒரு மகா வாக்கியமாக நான் கருதுகிறேன்.

(தொடரும்)

# மரம் நடுவதன் பலன்

பலவிதமான மரங்களை நிழல் இல்லாத இடங்களில் உண்டாக்கி வளர்த்து, வழிப்போக்கர்களுக்கு நிழலுண்டாக்கியவன் தன் வம்சத்தில் இறந்தவர்களையும், இனி பிறப்பவர்களையும் பாவிகளாக இருந்தாலும் தூய்மைப்படுத்தப் பிதுரர்களுக்குப் ப்ரீதி உண்டாக்குபவனுவான். ஒருவன் இறந்த பிறகு அவனது புத்திரர் அவனைச் சாந்தியடையும்படி பலவித கிரியைகளைச் செய்வதுபோல் ஒருவன் வளர்த்த மரங்களும் அவனை சாந்தியடையச் செய்விக்கும். மரங்கள் மலர்களினுல் தேவகணங்களையும் பழங்களினுல் பிதுர்த் தேவர்களையும் நிழலினுல் அதிதிகளையும் பூஜிக்கின்றன. மலர், பழம் முதலியவற்றுடன் கூடி நின்று பூவுலகத்தில் இருப்பவர்களையும் திருப்தி செய்விக்கின்றன. கின்னரர், உரகர், இராக்ஷஸர், தேவர், கந்தருவர், ரிஷிகணங்கள் முதலிய யாவரும் விருக்ஷங்களை விரும்புகிருர்கள். இகத்திலும் பரத்திலும் இம்மரங்கள் தம்மை வளர்த்தவனுக்குப் புத்திரர்கள் என்று சொல்லப்படுகின்றன. நீர்த்துறைகளை உண்டாக்குபவர்களும், மரங்களை நட்டு வளர்ப்பவர்களும் யாகங்களைச் செய்த வேதியர்களும் சத்தியவான்களும் ஒரு காலத்திலும் ஸ்வர்க்க லோகத்தை விட்டு நீங்க மாட்டார்கள்.

(சிவ மஹா புராணம்)

# அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்புச் சிறுகதைப் போட்டி – 1998

இனிய வாசக எழுத்தாளர்களே, கல்கி நூற்றாண்டு விழா கொண்டாட்டங்களின் இரண்டாவது அறிவிப்பு இது. (முதல் – பொன்னியின் செல்வன்!) பிரமாத மான சிறுகதைகள் மூலம் அசத்த அழைக்கிறோம். இவ்வாண்டு, ஸ்பெஷல் அல்லவா? பரிசுத் தொகை கூடியிருக்கிறது.




**முதல் பரிசு – ரூ. 10,000**

**இரண்டாம் பரிசு – ரூ. 7,500**

**மூன்றாம் பரிசு – ரூ. 5,000**

தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் **ரூ. 1000** சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். தழுவல், உருவல் கூடாது; அவ்வளவு தான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்படமாட்டாது.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால்தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நூற்றாண்டு விழா சிறப்புச் சிறுகதைப் போட்டி'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி: ஜூன் 15.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 2 ஆண்டு மலரில் வெளியாகும்.

எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்!

— **ஆசிரியர்**

# மே 6 முதல் 12 வரை

# அக்னி சர்மா பக்கம்



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

வீட்டுல சுபகாரியங்கள் நடக்கும். மத்தவங்க உதவியும் சுலபமா கிடைக்கும். வெளிநாட்டுத் தொடர்பால இல்லாட்டாலும் வெளியூர்த் தொடர்பாலயாவது அனுகூலம் கிடைக்கும். ஐ.ஏ.எஸ் மாதிரி நிர்வாகப் பணியில் இருக்கறவங்களுக்கும் அரசாங்கப் பணியாளர்களுக்கும் முன்னேற்றமான வாரம். இன்னொரு டி.ஏ. ஏறப் போவுதான்னு கேட்காதீங்க. பதவி உயர்வு மாதிரி ஏதாவும் நடக்கும். பொதுவா இது நல்ல வாரம்தான்னாலும் சிறு சிறு பிரச்னைங்க இல்லாம போகாது. வியாபாரிங்க கவனமா இல்லாட்டி நஷ்டமாயிடும். வீடு, மனை ஸ்பெகுலேஷனையும் இந்த வாரம் ஒத்திப் போட்டுடுங்க.



**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

சுற்றமும் நட்பும் உதவி பண்ற வாரங்க இது. பொதுவாவே வளர்ச்சிக்கான அறிகுறி தெரியும். ஆனாக்கூட திடீர் செலவுகளால பொருள் இழப்புகளும் ஏற்படற சான்ஸ் இருக்கு. மின்சாரம், காஸ், இயந்திரம் சம்பந்தமான வேலைகள் செய்றவங்களுக்குக் கவனம் தேவைன்னாலும் இந்த வாரம் அதிகமாத் தேவை. பயணத்திலும் கவனமா இருங்க. சிலருக்கு வேண்டாத இடத்துக்கு டிரான்ஸ்ஃபர் கிடைக்கலாம்னா இன்னும் சிலருக்கு அலைச்சல் அதிகமா இருக்கும். சங்கீதம் மாதிரியான கலைத் துறையினருக்கு உற்சாகமான வாரம்தான்னாலும் அரசியலில் இருக்கறவங்களுக்கு சோதனையான வாரம்தான்.



**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

சூரியன், சனி, செவ்வாய், குரு... இப்படி முக்கிய கிரகங்களெல்லாம் உங்க பக்கம் நிக்கும்போது உங்களுக்கு என்னங்க குறை? போடற திட்டம் ஜெயிக்கும். எதிரிங்க ஓட்டமெடுப்பாங்க. கொடுக்கல் வாங்கல், ஷேர் மார்க்கெட் எதுவானாலும் வருமானம்தான்! திடீர்னு அதிர்ஷ்டமடிச்சுப் பணம் வரக் கூட சான்ஸ் இருக்கு. உங்க ஓட்ட சைக்கிளை வித்தாக்கூட நல்ல லாபம்தான் கிடைக்கும்னா பார்த்துக்கங்களேன்! கல்யாணமாகாதவங்களா இருந்தா டும் டும் நடக்கும். ஆனவங்களா இருந்தா மட்டும் என்னவாம்? அம்மணி நினைக்கறபடி அய்யாவும், அய்யா நினைக்கறபடி அம்மணியும் நடந்து, குடும்பமே சந்தோஷத்துல மிதக்கும் போங்க.



**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

எடுத்த காரியத்திலெல்லாம் வெற்றிக்கான அறிகுறியே தெரியுதுங்க. கவர்மெண்ட்ல ஏதாவது உங்க ஃபைல் ஒரு மேஜைக் கடில தூசி படிஞ்சு கிடந்தாக்கூட இந்த வாரம் அது தட்டியெடுக்கப்பட்டு பாஸ் ஆயிடும்னா பார்த்துக்கங்களேன்! சனியும் செவ்வாயும் உங்க மேல கருணைப் பார்வை பார்த்தாலும் இந்த வாரம் குருவின் பார்வை சுமார்தாங்க. அதால பண விஷயம் சுமாராத்தான் இருக்கும். வியாபாரிங்க நிதானம் காட்டணும். புது ஆளுங்க கிட்ட ஜாக்கிரதையாப் பழகணும். அரசியல்வாதிங்களும் எச்சரிக்கையா இருக்க வேண்டிய வாரம் இது.



**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

பொருளாதார விஷயம் இந்த வாரம் ஏறுமுகம்தாங்க. மத்தவங்களும் உங்களுக்குப் பக்கபலமா இருந்து உதவுவாங்க. வெளிநாட்டுலேர்ந்து உற்சாகமான சேதி ஏதும் வரலாம். இல்லேன்னா நீங்களே ஃபாரின் போறதுக்கான சான்ஸும் கிடைக்கலாம். கல்யாணம், குவா குவான்னு வீட்டுல சந்தோஷத்துக்குப் பஞ்சமிருக்காது. கொடுக்கல், வாங்கல், ஷேர்களிலும் லாபமே கிடைக்கும். இருந்தாலும் தந்தையின் உடல் நலத்துல கவனமா இருங்க. உங்களுக்கும் ராகுவால அலைச்சல் வரலாம், கேதுவால பூரான், தேளுன்னு ஏதாவது விஷ ஜந்துக் கடிகள் ஏற்பட சான்ஸ் இருக்கு. ஜாக்கிரதையா இருங்க.

நடக்குமென்பார்,



**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

குருவும் சனியும் உங்களுக்கு அனுசரணையா சஞ்சரிக்கலீங்க. அதால நீங்க நெனைச்சது நடக்காது. தடங்கல் வரும். அதால மனகலக்குழப்பம் வரும். கூடப்பிறந்தவங்களும் சப்போர்ட் பண்ணாத நிலையில இருப்பீங்க. இயந்திரம், மின்சாரம், நெருப்பு சம்பந்தமான தொழில் செய்யறவங்க ரொம்பவே உஷாரா இருக்கணும். யாரு கிட்ட பேசினாலும் ஜாக்கிரதையாப் பேசுங்க. 'என்னப்பா சௌக்கியம்தானே?'ன்னு நீங்க யாரை யாச்சும் எதார்த்தமாக் கேட்டாக்கூட, 'ஏன், என்னைப் பார்த்தா நோயாளி மாதிரியா இருக்கு?'ன்னு எடக்கா பதில் சொல்லுவாங்க. சின்ன விபத்துக்குக் கூட சான்ஸ் இருக்கு. இருந்தாலும் வெளிநாட்டு செய்தியொன்று வந்து ஆறுதல் குடுத்தாலும் குடுக்கும்!



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

கிரகங்களின் சஞ்சாரம் நல்லபடியா இருக்கறதால எண்ணங்கள் ஈடேறும். பண விஷயம் நல்லாவே இருக்கும். அப்புறம் மனசு உற்சாகம் வந்து பீறிடாம எப்படி இருக்க முடியும்! சட்டம், காவல், தகவல், ஏஜென்ஸி துறைகள்ல இருக்கறவங்க பாடு கனஜோர். கணவன் - மனைவிக்கிடையில சின்னச் சின்ன ஊடல்கள் இருக்கும்னாலும் அது கூட சந்தோஷத்தை அதிகப்படுத்தறதாத்தான் இருக்கும். சட்டம், சயன்ஸ் துறைகள்ல இருக்கறவங்க வழக்கத்தை விட அதிகமா உழைக்க வேண்டியிருக்கும். பலனும் அற்புதமாவே இருக்கும். பயணத்தால அனுகூலம் கிடைக்கும்னாலும் எச்சரிக்கையா பயணம் போங்க.

**விருச்சிகம் :** *(விசாகம் 4- ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

மத்தவங்க பார்த்து மூக்கு மேல விரல் வெக்கற மாதிரியான காரியங்களைச் செய்வீங்க; அட, நல்லபடியாத்தாங்க! எந்தக் காரியமானாலும் தடங்கலே இல்லாம நடக்கும். அப்புறமென்ன, கத்தியிருக்கறவங்க ஜெயிக்கறவனைப் பாராட்டாம இருக்க முடியுமா! புகழ் கிடைக்கும். உங்க வெற்றியின் வெளிச்சத்துல எதிரிங்க காணாம போயிடுவாங்க. அம்மணிகளைப் பத்திக் கேட்கவே வேணாம். அய்யாமார்கள் சொன்னபடி ஆடுவாங்க; கேட்டதையெல்லாம் வாங்கித் தருவாங்க. ஆனாக் கூட தாயாரோட உடல் நிலைல அலட்சியம் காட்டிடாதீங்க. காய்ச்சல், தலைவலின்னு வந்தாக்கூட நீங்களாவே மாத்திரை வாங்கித் தராம, டாக்டராண்ட கூட்டிட்டுப் போய்க் காட்டுங்க.

# நடக்கும்!

**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

குரு 3-லும் சனியும் சூரியனும் 5-லும் இருந்தாலே கஷ்டம்தாங்க. மனசில குழப்பம், குடும்பத்துல பிரச்னைன்னு வரத்தான் செய்யும். குழந்தைங்க விஷயத்துல கவனமா இருக்கணும். உங்க ஹெல்த் விஷயத்துலயும் எச்சரிக்கையாவே இருக்கணும். பணம் பிரச்னை தான். செலவு அதிகமா வரும்கிறதால கடனும் வாங்க வேண்டி வரும். ஆபீஸ்ல வேலை பார்க்கறவங்க சரியானபடிக்கு வேலை செய்யலைன்னா, அதிகாரிங்களோட கோபத்துக்கு ஆளாகி தண்ணியில்லாக் காட்டுக்குத் தூக்கியடிச்சிடுவாங்க. குறிப்பா கேஷியர் மாதிரி பணத்தைக் கையாளற வேலைல இருக்கறவங்க ரொம்ப ரொம்ப உஷாரா இருக்கணும்ங்க.



**தனுசு ராசிக்காரரான போட்டோ கிராஃபர் யோகா உடல் நலத்துல இப்ப கவனமா இருக்கறது முக்கியம்.**



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

குருவோட பலம் உங்க பக்கம் இருக்கறதால, உங்க பேச்சாற்றல், நிர்வாகத்திறன் எல்லாம் பளிச்சிடும். பண விஷயம் தாராளமா இருக்கும். விருந்து, கேளிக்கைன்னு குடும்பமே உல்லாசமா இருக்கும். செல்வியா இருக்கற அம்மணிகள் இனியும் தப்பிக்க முடியாது. திருமதிகளாகிறதுக்கான வேலைகள் ஆரம்பமாயிட்டது! ஆபீஸ் கோயர்ஸுக்கு சம்பளம் கூடாட்டாலும் வேலை கூடும். பொதுவா சின்னச் சின்னப் பிரச்னைகள் வரும்னாலும் எச்சரிக்கையாச் செயல்பட்டா சமாளிச்சிடலாம். பயணமா? ஜாக்கிரதையாப் போங்க. இரவுப் பயணமா? இந்த வாரம் வேணாங்க.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உங்க ஆற்றல், துணிச்சல் எல்லாம் பளிச்சினு வெளிப்படற வாரங்க இது. கோர்ட்டுல வழக்கு கிழக்குன்னு இருந்தா ஜெயம் உங்க சைடுதான். அப்புறம் எதிரிங்க ஓடாம என்ன செய்வாங்க. போட்டி, பந்தயம்னு எதுல ஈடுபட்டாலும் பரிசும் பாராட்டும் உங்களுக்குத்தாங்க. செலவு இருக்கும்னாலும் பண விஷயத்துல பிரச்னை இருக்காது. பிசினஸ்ல இருக்கறவங்களுக்குப் புது ஒப்பந்தங்கள் வரலாம். எதுவானாலும் சரி, அக்கறையோடு செயல்பட்டீங்கன்னா வெற்றி நிச்சயம்தான். திடீர்ப் பணவரவுக்கும் சான்ஸ் இருக்கு. இருந்தாலும் வீட்டு அம்மணியின் ஆரோக்யத்துல எச்சரிக்கையா இருங்க. ஏன்னா, 7-ல் இருக்கற ராகுவின் பார்வை சரியில்லை.



**மீனம் :** *(பூரட்டாதி 4 -ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

சோதனைகள், தடங்கல்கள், தாமதங்கள்... எல்லாமே இந்த வாரம் உங்களால தவிர்க்க முடியாது. அப்புறம் எப்படி எடுத்த காரியங்கள் திட்டமிட்டபடி நடக்க முடியும்? பேச்சுல நிதானம் காட்டுங்க. முடிஞ்சா மௌனம் காக்கறது கூட நல்லதுங்க. கூடப் பிறந்தவங்களாலயே பிரச்னைகள் வரும்ங்கிறபோது, குடும்பத்துல எப்படிங்க அமைதி நிலவும்? இருந்தாலும் நெருக்கமான பிரண்ட்ஸுங்க கைவிட்டுட மாட்டாங்க. தகுந்த சமயத்துல கைகுடுப்பாங்க. 6-ல் இருக்கும் ராகுவும் சங்கடங்களைச் சமாளிக்க உதவுவார். கவலைப் படாதீங்க.

ரயில் சக்கரங்கள் கண்ணிமைப்பதற்குள் பாலகிருஷ்ணனின் தலைக்குமேல் வேகமாகப் பயணம் செய்தன. பிறகு ஒரு நிமிடத்திற்கு முழு அமைதி.

"ஹையா, ரயில் நம்ம தலைக்கு மேலே போச்சு பார்த்தியா?" என்று குதூகலித்தான் சுரங்கப் பாதையில் நின்று கொண்டிருந்த பாலகிருஷ்ணன், தான் சுமந்து கொண்டிருந்த இரண்டு வயது மகனிடம்.

குழந்தை அப்படி ஒன்றும் மகிழ்ந்ததாகத் தெரியவில்லை. அதை சிரிக்க வைப்பதற்காக இதுவரை தலைக்குமேல் நான்கு ரயில்கள் ஓடும்வரை பொறுத்தாகி விட்டது. இனிக் கிளம்ப வேண்டும். தலைக்குமேல் வேறு வேலைகள் இருந்தன.

குழந்தையின் முகம் உர்ரென்றிருந்தது. 'அப்படியே அம்மா மாதிரி' என்று நினைத்தான். உடனே அந்த நினைப்பையே யாராவது கேட்டுவிட்டு, தவறாகப் பொருள் கொள்வார்களோ என்று எண்ணியதுபோல் 'அதாவது இவன் அம்மாவை மாதிரி - அதாவது என் மனைவி மாதிரி. என் அம்மா அப்படி இல்லை. சொக்கத் தங்கம். மலர்ந்த பரங்கிப்பூ. அதிகபட்சம் சிரிப்பு, குறைந்தபட்சம் புன்னகை - இதுதான் அம்மாவின் முகத்தில் நான் கண்ட இரண்டு எல்லைகள்.'

ஆனால் பாமா வேறுமாதிரி. மௌனமாய் வறுத்தெடுப்பாள். அல்லது விஷம் கொட்டுவாள்.

"உங்க அக்காவை மார்க்கெட்டிலே பார்த்தேன். உங்ககிட்டே ஐயாயிரம் ரூபா கடன் கேக்கப் போறாளாம். நாம இருப்பது வாடகை வீடு. ஆனா அவ சொந்தவீடு கட்றதுக்கு நம்ம பணம் தேவைப்படுது. ஏதோ யோசிச்சு முடிவெடுங்க."

கடன் கொடுத்தாலும் தப்பு. "அஞ்சு பைசா நாணயத்துக்கு இருக்கும் மதிப்பு கூட என் பேச்சுக்குக் கிடையாது" என்பாள். கொடுக்காவிட்டாலும் பாமாவிட

அருண் சரண்யா

# ரசனைகள்

மிருந்து தப்பிவிட முடியாது. எதற்காவது சற்றே முகத்தை சுளித்துக் கொண்டால், "உங்க அக்காவுக்குக் கடன் தராம போயிட்ட மேன்னு ஆக்ரோஷமாக்கும். நான் ஒண்ணும் உங்களைக் கொடுக்க வேணாம்னு சொல் லல்லியே'' என்பாள்.

எப்படியும் புரளும் இரட்டை நாக்கு சர்ப்பத்தைப் போல. ராஜநாகம். அல்ல, ராணிநாகம்!

குழந்தையோடு வீட்டுக்கு வந்த பால கிருஷ்ணன் காய்கறிக் கூடையை ஓரமாக வைத்தான். பாமா புருவங்களை உயர்த்தி னாள். என்னென்ன காய்கறி வாங்கி வந் தான் என்று சொல்ல வேண்டுமாம். பட்டி யலை முடித்ததும் புருவச் சுருக்கம் நீங்கி விடும் – கொஞ்ச நேரத்துக்கு!

''வெண்டைக்காய், முட்டைகோஸ், பூசணிபத்தை, குந்துரூஸ்'' புருவங்கள் இறங்கக் காணோம்.

"கொசுறாக கொத்தமல்லி கறிவேப்பிலை யும் வாங்கியாகிவிட்டது."

அப்பா! புருவங்கள் சமநிலையை அடைந்தன.

பையன் சிரிப்பது போலத் (போலதான்) தென்பட்டான். அவனைக் குஷிப்படுத்த வேண்டும். அதன்மூலம் தன்னை குஷிப் படுத்திக் கொள்ள வேண்டும் என்று பால கிருஷ்ணனுக்குத் தோன்றி யது.

''என்னடா பயலே, பார்த்தியா உங்கம்மா சொன்ன அத்தனை வெஜிடபிளையும் வாங்கி வந்துட்டேன். அந்த ஆண்டவன் சொல்றா. அதை இந்த அடிமைச்சலம் செய்யறான்'' என்றான் ரஜினி போல். குழந்தை சட்டை செய்யாமல் ஜட்டியில் ஈரத்தை அதிகமாக் கியது.

"சகிக்கலை" என்றபடி முகத்தை இன்னும் கடுமையாக்கிக் கொண்டு பாமா உள்ளே போனாள். கடுவன்பூனை. நரசிம்மிராவ்.

போன வாரம் கூட 'எஜமான்' ரஜினி போல் துண்டை ஸ்டைலாக உதறி உதறித் தோளில் போட்டுக் கொண்டபோது ரசனையே இல்லாமல் "மொத்தமே வீட்டில் ரெண்டு காசித்துண்டுதான். அதையும் கிழிச்சி வக்க வேண்டாம்" என்றாள்.

**பா**மா மாதிரி அம்மா பி.ஏ. முடித்திருக்கவில்லை. பாமா மாதிரி அம்மா வேலைக்குப்





**''வழிப்பறி வடிவேலுவை 'கையும் களவுமா' பிடிக்கப் போனியே... என்ன ஆச்சு?''**

**'''கையும் மாமூலுமா' வந்துருக்கேன் சார்!''**



''நான் பெரிய மீசை வச்சருக்கறது தலைவருக்குப் புடிக்கல!''

''உனக்கு எப்படி தெரிஞ்சுது?''

''கால்ல விழுந்து கும்பிட்டப்ப என்னை எந்திரிக்க விடாம மீசைய மிதிச்சுக்கிட்டு நிக்கறார்!''

''ஆபீசுல யாருமே இன்னிக்கு உங்களுக்கு லஞ்சம் தரலியா?''

''உங்களுக்கு எப்படி தெரியும்?''

''விடாம பெருமூச்சு விட்டுக்கிட்டிருக்கீங்களே!''

— அம்பை தேவா



கல்கி 10.5.98

போனதில்லை. ஆனால் அம்மாவுக்கு ரசனை உண்டு. ஆழ்ந்த ரசனை. அதுவும் பாலகிருஷ்ணனை ரொம்ப ரசிப்பாள்.

நான் கல்லூரியிலிருந்து வீடு திரும்பும் போது அம்மா கட்டாயம் வீட்டிலிருக்க வேண்டும் அவனுக்கு. சில சமயம் அம்மா அடுத்த தெருவில் இருக்கும் தன் தோழியின் வீட்டுக்குப் போயிருப்பாள். அம்மா மேல் கோபம் வந்தாலும், அவள் வந்தவுடன் ஜில் உணர்ச்சி வந்துவிடும்.

''மறுபடியும் சொல்றேன். நீ வேறே எந்த வீட்டுக்கும் போகக் கூடாது'' என்பான் ஒரு பாடலுக்கு நடுவே எம்.ஜி.ஆர் பேசும் குரலில்.

''கண்டிப்பா சொல்றேன். நான் போகத் தான் போவேன்'' என்பாள் அம்மா ஜெய லலிதா குரலில்.

''கூடாதுன்னா கூடாது'', ''போகத்தான் போவேன்'', ''கூடாது'', ''போவேன்'' என்று இவர்கள் மாறி மாறி சொல்லிவிட்டு அடக்க முடியாமல் சிரிக்கும்போது ஈஸி-சேரிலிருந்து மிக மெலிதான ஒரு சிரிப்பு சத்தம் சில நொடிகளுக்குக் கேட்கும் - அப்பா!

கட்டபொம்மன் வசனத்தை எவ்வளவு முறை பாலகிருஷ்ணன் சொன்னாலும் அம்மா கைதட்டி ரசிப்பாள். அவ்வப்போது 'மனோகரா' வசனத்தைப் பேசச் சொல்லி அம்மாவை வற்புறுத்துவான். உடனே கண்ணாம்பா மாதிரி ''பொறுத்தது போதும் பொங்கி எழு'' என்று தொடங்குவான். ஒரு முறை அப்படிப் பேசியபோது சமையலறையில் பால் பொங்கி வழிந்து விட்டது!

இரவில் ஊரெல்லாம் ஓரளவு அடங்கிய பின் ட்ரான்ஸிஸ்டரை கிட்டே வைத்துக் கொண்டு சினிமா பாட்டு கேட்பது சுகம். அதுவும் ஏ.எம். ராஜா, ஸ்ரீனிவாஸ், ஜேசுதாஸ் குரலென்றால் அந்த நேரத்துக்கு தனி இதம். படுத்துக் கொண்டே தலையை அவ்வப் போது ஆட்டுவதிலிருந்தே அம்மாவும் இதை ரசிப்பது விளங்கும். அந்த ரசனை மங்காம லேயே அம்மாவும், கடைசிவரை இசை ரசனை இல்லாமலேயே அப்பாவும் போய்ச் சேர்ந்து விட்டார்கள்.

''**பா**ல் வண்ணம் பருவம் கண்டு வேல் வண்ணம் விழிகள் கண்டு'', ஸ்ரீனிவாசும் சுசிலாவும் தேனைக் கொட்டிக் கொண்டிருந்தபோது, பாமா அனலைக் கொட்டினாள்.

''ராத்திரி பத்தரை ஆயிடுத்து. என்ன

சினிமா பாட்டோ?" பட்டென்று நின்று விடும் - ட்ரான்ஸிஸ்டரும், மனதும்.

தொலைபேசியிலும் ரொம்ப நறுக் சுருக் தான். பொதுத் தொலைபேசியாக இருந்தால் என்ன, 180 நொடிகள் பேசலாமே. மாட்டாள்.

"வரும்போது உங்க ஆபீஸுக்கு எதிர்க் கடையிலிருந்து அரைகிலோ வெண்ணெய் வாங்கிட்டு வாங்க". டொக். வைத்துவிடுவாள்.

"கரண்ட் பில் கட்ட இன்னிக்கு கடைசி தேதி. மறக்க வேண்டாம்" டொக்.

தொலைபேசியில் தந்தி வாசகங்கள். அவனுக்குப் பேச வாய்ப்பே இருக்காது.

அம்மா நேரெதிர் கிரகவாசி. தகவல் தொடர்பு என்பது அவளைப் பொருத்த வரை ஓர் உயிர்நாடி. ஒருவாரம் எங்காவது போனாலும் நுணுக்கி நுணுக்கி இன்லண்ட் லெட்டர் முழுதும் எழுதி விடுவாள். மடிக்கும் பகுதிகளில் கூடத் தகவல்கள். சில சமயம் வெளிப்பக்கத்தில் கூட - கவரை ஒட்டிய பிறகு நினைவுக்கு வந்த விஷயங்கள். "அன்பை வெளிப்படுத்திண்டாதான் மனித உறவு நிலைக்கும்டா" என்பாள்.

**மா**லை வீடு வந்தபோது கதவில் பூட்டு. ஓ. அவன்தான் மறந்து விட்டான் மதியம் பாமாவிடமிருந்து வந்த போன் காலை.

"மத்தியானம் கிளம்பி அம்மா வீட்டுக்குப் போறேன். சாவி எதிர்வீட்டிலே இருக்கும். ஏழு மணிக்கு வருவேன்." டொக்.

எதிர்வீடும் பூட்டியிருந்தது. என்ன அவசரமோ, எங்கோ போய்விட்டிருந்தார்கள். தெருவில் தவம் கிடக்கப் பிடிக்காமல், பதினைந்து நிமிடம் பஸ் பயணத்தில் உள்ள மாமனார் வீட்டுக்குக் கிளம்பினான்.

செருப்பைக் கழற்றும்போதே உள்ளிருந்து குழந்தையின் அர்த்தமில்லாத மழலை ஒலி கேட்டது. கூடவே பாமாவின் கம்மிய குரல்.

"அம்மா, அவருக்கு ரசனையும் இல்லே. இங்கிதமும் இல்லே. சினிமாப் பாட்டு, அசட்டு நகைச்சுவைன்னு ரொம்ப பாமரத்தனமா இருக்காரும்மா. எரிச்சல் வருதும்மா. அதுவும் நம்ம அப்பா மாதிரி, ஒரு பெர்ஃபக்ஷனிஸ்ட்டைப் பார்த்துக்கிட்டே வளர்ந்துட்டேனா, அவர் கூட ஒப்பிடும்போது இவரோட அபத்தங்களெல்லாம் பளிச்சுனு மனசிலே படுதும்மா." ●

# புள்ளாங்குயில்



- ஓடி ஓடி உழைக்கிறது
  மானம் காக்க
  தறி நாடா!

- பிஞ்சு விரல்களில்
  வண்ணச் சுவடுகள்
  தப்பித்தது பட்டாம்பூச்சி!

- பூத்திருக்கும் ரோஜாக்கள்
  பார்த்து ரசித்தனர்
  கீரி – பாம்பு சண்டை.

- முணுமுணுக்கும் தாய்
  முதியோர் இல்லத்தில்...
  "எப்படி இருக்கிறானோ மகன்?"

- எத்தனைக் கோடி இன்பம்
  ஈடாகாது
  கோபுர வாசல் காற்று!

- சிறகுகள் இருந்தென்ன?
  பறக்க மறந்தன
  விழி வண்டுகள்!

- யார் கொடுத்த தண்டனை?
  ரோஜா பாதம்
  முள் மேல்.

- கொத்திக் கொத்திச் சிதைந்தன
  கோல முகத்தை...
  பருக்கள்.

- ஏழைக் குடிசை
  எண்ணெயில்லா விளக்கு
  திரிமேல் மின்மினி!

- துளையிடாமலே வாசித்தது
  மூங்கிற்காட்டில்
  புள்ளாங்குயில்!

* புள் – பறவை

— பல்லவன்

# பொன்னியின் செல்வன்




கல்கி கலெக்‌ஷன்

முப்பத்தெட்டாம் அத்தியாயம்

## நந்தினியின் ஊடல்

பெரிய பழுவேட்டரையர் கடைசியாகத் தமது மாளிகைக்குத் திரும்பிய போது நள்ளிரவு கழிந்து மூன்றாவது ஜாமம் ஆரம்பமாகியிருந்தது. விதிப்புழுதியை வாரி அடித்துக் கொண்டு சுழன்று சுழன்று அடித்த மேலக் காற்றைக் காட்டிலும் அவருடைய உள்ளத்தில் அடித்த புயல் அதிகப் புழுதியைக் கிளப்பியது. அருமைச் சகோதரனை அவ்வளவு தூரம் கடிந்து கொள்ள வேண்டியிருந்தது பற்றிச் சிறிது பச்சாதாபப்பட்டார். அவர் மீது தம்பி வைத்திருந்த அபிமானத்துக்கு அளவேயில்லை. அந்த அபிமானத்தின் காரணமாகத்தான் ஏதோ சொல்லிவிட்டான். இருந்தாலும் சந்தேகக்காரன். எதற்காக அநாவசியமாய் நந்தினியைப் பற்றிக் குறைகூற வேண்டும்? மனித சுபாவம் அப்படித்தான் போலும். தான் செய்த தவறுக்குப் பிறர் பேரில் குற்றம் சொல்லித் தப்பித்துக் கொள்ள முயல்வது சாதாரண மக்களின் இயற்கை. ஆனால் இவன் எதற்காக அந்த இழிவான முறையைக் கடைப்பிடிக்க வேண்டும்? கைவசம் சிக்கியிருந்த அந்த மோசக்காரத் திருட்டு வாலிபனை விட்டு விட்டு, அதற்காக ஒரு பெண்ணின் பேரில், அதுவும் மதனியின் பேரில் குற்றம் சொல்லுவது இவனுடைய வீரத்துக்கும் ஆண்மைக்கும் அழகாகுமா? போனால் போகட்டும்! அதற்காகத்தான் அவன் வருந்தி மன்னிப்பும் கேட்டுக் கொண்டு விட்டானே? மேலும் அதைப் பற்றி நாம் எதற்காக நினைக்க வேண்டும்?

இருந்தாலும், அவன் கூறியதில் அணு

அமரர் கல்கி

வளவேனும் உண்மை இருக்கக் கூடுமா? ஒருவேளை இந்த முதிய பிராயத்தில் நமக்குப் பெண் பித்து தான் பிடித்திருக்குமோ? எங்கேயோ காட்டிலிருந்து பிடித்து வந்த ஒரு பெண்ணுக்காக, கூடப் பிறந்த சகோதரனை, நூறு போர்க்களங்களில், நமக்குப் பக்கபலமாயிருந்து போரிட்டவனை, பலமுறை தன் உயிரைப் பொருட்படுத்தாமல் நமக்கு வந்த அபாயத்தைத் தடுத்துக் காத்தவனையல்லவா கடிந்து கொள்ள வேண்டியிருந்தது? அப்படி என்ன அவள் உயர்த்தி? அவளுடைய பூர்வோத்திரம் நமக்குத் தெரியாது. அவளுடைய நடவடிக்கையும் பேச்சும் சில சமயம் சந்தேகத்துக்கு இடமாகத்தான் இருக்கின்றன. சிச்சி! தம்பியின் வார்த்தை நம் உள்ளத்திலும் இத்தகைய குழப்பத்தை உண்டாக்கிவிட்டதே! என்ன அநியாயம்? அவள் எப்படி நம்மிடம் உயிர்க்குயிரான அன்பு வைத்திருக்கிறாள்? எவ்வளவு மட்டு மரியாதையுடன் நடந்து கொள்ளுகிறாள்? நம்முடைய காரியங்களில் எல்லாம் எவ்வளவு உற்சாகம் காட்டுகிறாள்? சில சமயம் நமக்கு யோசனைகள் கூடச் சொல்லி உதவுகிறாளே? இந்த அறுபது வயதுக்கு மேலான கிழவனைத் துணிந்து மணந்து கொண்டாளே, அதைப் பார்க்க வேண்டாமா? தேவலோக மாதரும் பார்த்துப் பொறாமைப்படும்படியான அந்தச் சுந்தரிக்குச் சுயம்வரம் வைத்தால், சொர்க்கத்திலிருந்து தேவேந்திரன்கூட ஓடி வருவானே? இந்த உலகத்து மணிமுடி வேந்தர் யார்தான் அவளை மணந்து கொள்ள ஆசைப்படமாட்டார்கள்? ஆ! இந்தச் சுந்தரச் சோழன் கண்ணில் அவள் அகப்பட்டிருந்தால் போதுமே? அப்படிப்பட்டவளைப் பற்றி எந்த விதத்திலும் ஐயப்படுவது எவ்வளவு மடமை? இளம் பெண்ணை மணந்து கொண்ட கிழவர்கள், இல்லாத சந்தேகங்கள் எல்லாம் கொண்டு தம் வாழ்க்கையை நரகமாக்கிக் கொள்வார்கள் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். உலக வாழ்க்கையில் அத்தகைய உதாரணங்களைப் பார்த்துமிருக்கிறோம். அம் மாதிரி ஊரார் சிரிப்பதற்கு நம்மை நாமே இடமாக்கிக் கொள்வதா?

இருந்தபோதிலும் சிற்சில விவரங்களை அவளுடைய வாய்ப் பொறுப்பில் கேட்டறிந்து கொள்வதும் அவசியம்தான். அடிக்கடி முத்திரை மோதிரம் வேண்டும் என்று கேட்டு வாங்கிக் கொள்கிறாளே, எதற்காக? அடிக்கடி தன்னந்தனியாக லதா மண்டபத்தில் போய் உட்கார்ந்து கொள்ளுகிறாளே, அது எதற்கு? யாரோ ஒரு மந்திரவாதி அடிக்கடி அவளைப் பார்க்க வருகிறதாகக் கேள்விப்படுகிறோமே, அவளே ஒப்புக் கொண்டாளே, அது எதற்காக? மந்திரவாதியிடம் இவள் என்னத்தைக் கேட்டறியப் போகிறாள்? மந்திரம் போட்டு இவள் யாரை வசப்படுத்த வேண்டும்? இதெல்லாம் இருக்க, 'கல்யாணம் பண்ணியும் பிரம்மச்சாரி' என்ற நிலையில் என்னை எத்தனை காலம் வைத்திருக்கப் போகிறாள்? ஏதோ விரதம், நோன்பு என்று சொல்லுகிறாளே தவிர, என்ன விரதம், என்ன நோன்பு என்று விளங்கச் சொல்கிறாள் இல்லை! கதைகளிலே வரும் தந்திரக்காரப் பெண்கள் தட்டிக் கழிக்கக் கையாளும் முறையைப் போலத்தானே இருக்கிறது? அதற்கு இனிமேல் இடம் கொடுக்கக் கூடாது! இன்றிரவு அதைப் பற்றிக் கண்டிப்பாகப் பேசித் தீர்த்துக் கட்டிவிட வேண்டியதுதான்!

பழுவேட்டரையர் அவருடைய மாளிகை வாசலுக்கு வந்த போது அரண்மனைப் பெண்டிரும் ஊழியர்களும் தாதியர்களும் காத்திருந்து வரவேற்றார்கள். ஆனால் அவருடைய கண்கள் சுற்றிச் சுழன்று பார்த்தும் அவர் பார்க்க விரும்பிய இளையராணியை மட்டும் காணவில்லை. விசாரித்ததில், இன்னும் லதா மண்டபத்தில் இருப்பதாகத் தெரிய வந்தது. அவர் மனத்தில், "நள்ளிரவு ஆன பிறகும் அங்கு இவளுக்கு என்ன வேலை!" என்ற கேள்வியுடன், தம்மை அலட்சியம் செய்கிறாளோ என்ற ஐயமும் கோபமும் எழுந்தன. சிறிது ஆத்திரத்துடனேயே கொடி மண்டபத்தை நோக்கிச் சென்றார்.

இவர் கொடி மண்டப வாசலை



அடைந்த போது நந்தினியும் அவளுடைய தோழியும் எதிரே வருவதைக் கண்டார். அப்படி வந்தவள் இவரைக் கண்டதும் நின்று, அவரைப் பார்க்காமல், தோட்டத்தில் குடிகொண்டிருந்த இருளை நோக்கத் தொடங்கினாள். தாதிப் பெண் சற்று அப்பாலேயே நின்றுவிட்டாள்.

பழுவேட்டரையர் நந்தினியின் அருகில் வந்த பின்னரும் அவள் அவரைத் திரும்பிப் பார்க்கவில்லை. நந்தினியைக் கடிந்து கொள்ளலாம் என்று எண்ணிக் கொண்டு வந்ததற்கு மாறாக அவளுடைய கோபத்தை இவர் தணிக்க முயல வேண்டியதாயிற்று!

''நந்தினி! என் கண்மணி! என்ன கோபம்? ஏன் பாராமுகம்?'' என்று கேட்டுக் கொண்டு தம் இரும்பையொத்த கையை அவளுடைய தோளின்மீது மிருதுவாக வைத்தார்.

நந்தினியோ மலரினும் மிருதுவான தன் கர மலரினால் அவருடைய வஜ்ராயுதத்தையொத்த கையை ஒரு தள்ளுத் தள்ளினாள். அம்மம்மா! மென்மைக்கும் மிருதுத் தன்மைக்கும் இத்தனை பலமும் உண்டா?

''என் உயிரே! உன் பட்டுக் கையினால் தொட்டு என்னைத் தள்ளினாயே, அதுவே என் பாக்கியம்! திரிகோண மலையிலிருந்து விந்திய மலைவரையில் உள்ள வீராதிவீரர் யாரும் செய்ய முடியாத செயலை நீ செய்தாய்! அது என் அதிர்ஷ்டம்! என்றாலும், எதற்குக் கோபம் என்று சொல்ல வேண்டாமா? உன் தேன் மதுரக் குரலைக் கேட்க என் காது தாபம் அடைந்து தவிக்கின்றதே?'' என்று கெஞ்சினார் ஆயிரம் போர்க்களங்களில் வெற்றி கண்ட அந்த மகா வீரர்.

''தாங்கள் என்னைப் பிரிந்து போய் எத்தனை நாள் ஆயிற்று? முழுமையாக நாலு நாள் ஆகவில்லையா?'' என்று

சொன்ன நந்தினியின் குரலில் விம்மல் தொனித்தது. அது எத்தனையோ வாள்களையும் வேல்களையும் தாங்கி நின்றும் தளராத பழுவேட்டரையரின் நெஞ்சத்தை அனலில் இட்ட மெழுகைப்போல் உருக்கி விட்டது.

"இதற்காகத்தானா இவ்வளவு கோபம்? நாலு நாள் பிரிவை உன்னால் சகிக்க முடியவில்லையா? போர்க்களத்துக்குப் போக நேர்ந்தால் என்ன செய்வாய்? மாதக் கணக்காகப் பிரிந்திருக்க நேரிடுமே?" என்றார்.

"தாங்கள் போர்க்களத்துக்குப் போனால் மாதக்கணக்கில் தங்களை நான் பிரிந்திருப்பேன் என்றா எண்ணினீர்கள்? அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ளுங்கள். தங்களுடைய நிழலைப் போல் தொடர்ந்து நானும் போர்க்களத்துக்கு வருவேன்..."

"அழகாயிருக்கிறது! உன்னைப் போர்க்களத்துக்கு அழைத்துப் போனால் நான் யுத்தம் பண்ணினாற் போலத்தான்! கண்மணி! இந்த மார்பும் தோள்களும் எத்தனையோ கூரிய அம்புகளையும் வேல் முனைகளையும் தாங்கியதுண்டு. அவ்வாறு ஏற்பட்ட காயங்கள் அறுபத்து நான்கு என்று உலகோர் என்னைப் புகழ்வதுமுண்டு. ஆனால் உன்னுடைய மிருதுவான மலர் மேனியில் ஒரு சிறு முள் தைத்து விட்டால், என்னுடைய நெஞ்சு பிளந்து போய்விடும். எத்தனையோ வாள்களும் வேல்களும் என்னைத் தாக்கிச் சாதிக்க முடியாத காரியத்தை உன் காலில் தைக்கும் சிறிய முள் சாதித்து விடும். உன்னை எப்படி யுத்த களத்துக்கு அழைத்துப் போவேன்? நீ இத்தனை நேரம் கருங்கல் தரையில் நின்று கொண்டிருப்பதே எனக்கு வேதனையாயிருக்கிறது. இப்படி வா; வந்து உன் மலர்ப் படுக்கையில் வீற்றிரு! உன் திருமுகத்தைப் பார்க்கிறேன். நாலு நாள் பிரிவு உனக்கு மட்டும் வேதனை அளித்தது என்று நினையாதே! உன்னைக் காணாத ஒவ்வொரு கணமும் எனக்கு ஒரு யுகமாயிருந்தது. இப்போதாவது என் தாபம் தீர, உன் பொன் முகத்தைப் பார்க்கிறேன்!" என்று கூறி, நந்தினியின் கரத்தைப் பற்றி அழைத்துக் கொண்டு போய் மஞ்சத்தில் உட்கார வைத்தார்.

நந்தினி தன் கண்களைத் துடைத்துக் கொண்டு பழுவேட்டரையரை நிமிர்ந்து பார்த்தாள். தங்க விளக்கின் பொன்னொளியில் அவளுடைய முகத்தில் மலர்ந்த முத்து முறுவலைப் பார்த்தார் தனாதிகாரி. 'ஆகா! இந்தப் புன்சிரிப்புக்கு மூன்று உலகத்தையும் கொடுக்கலாமே? மூன்று உலகமும் நம் வசத்தில் இல்லாதபடியால், நம் உடல், பொருள், ஆவி மூன்றையும் இவளுக்காகத் தத்தம் செய்யலாம்! ஆனால் இவளோ நம்மிடம் ஒன்றும் கேட்கிறாள் இல்லை!' – இவ்விதம் எண்ணினார் அந்த வீராதி வீரர். அவளைக் கேள்வி கேட்பது, கடிந்து கொள்வது என்கிற உத்தேசம் போயே போய் விட்டது! நந்தினி காலால் இட்ட பணியைத் தலையால் நடத்தி வைக்கும் நிலைமைக்கு வந்து விட்டார்! எந்தவித அடிமைத்தனமும் பொல்லாததுதான்! ஆனால் பெண்ணடிமைத்தனத்தைப் போல் ஒருவனை மதி இழக்கச் செய்வது வேறொன்றுமில்லை!

"நாலு நாள் வெளியூரில் இருந்து விட்டுத்தான் வந்தீர்களே? இரும்பி வந்தவுடனே நேரே ஏன் இங்கு வரவில்லை? என்னை விடத் தங்களுக்குத் தங்கள் தம்பிதானே முக்கியமாகிவிட்டார்!" என்று கேட்டாள் நந்தினி. கேட்டுவிட்டுக் கள்ளக் கோபத்துடன் அவரைக் கடைக் கண்ணால் பார்த்தாள்.

"அப்படியில்லை, என் கண்மணி! வில்லிலிருந்து புறப்பட்ட பாணத்தைப் போல் உன்னிடம் வருவதற்குத்தான் என் மனம் ஆசைப்பட்டது. ஆனால் அந்த அசட்டுப் பிள்ளை – மதுராந்தகன் – சுரங்க வழியின் மூலமாகப் பத்திரமாகத் திரும்பி வந்து சேர்கிறானா என்று தெரிந்து கொள்வதற்காகவே தம்பியின் வீட்டில் தாமதிக்க வேண்டியதாயிற்று...."

"ஐயா! தாங்கள் எடுத்த காரியங்களிலெல்லாம் எனக்குச் சிரத்தை உண்டு. தங்கள் முயற்சி அனைத்தும் வெற்றி பெற

வேண்டுமென்றுதான் நானும் ஆசைப் படுகிறேன். ஆனாலும் நான் ஏற வேண்டிய மூடுபல்லக்கில் ஓர் ஆண் பிள்ளையைத் தாங்கள் ஏற்றிக் கொண்டு போவதை நினைத்தால் எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. நாடு நகரங்களில் உள்ள ஜனங்கள் எல்லோரும் என்னையும் கூட அழைத்துப் போவதாக எண்ணுகிறார்கள்...."



"அது எனக்கு மட்டும் சந்தோஷமளிக்கிறது என்றா நினைக்கிறாய்? இல்லவே இல்லை! ஆனால் எடுத்த காரியம் பெரிய காரியம். அதை நிறைவேற்றுவதற்காகச் சகித்துக் கொண்டு செய்கிறேன். மேலும், இந்த யோசனை கூறியதே நீதான் என்பதை மறந்து விட்டாயா? உன்னுடைய மூடுபல்லக்கில் மதுராந்தகனை அழைத்துப் போகும்படி நீதானே சொன்னாய்? கோட்டையிலிருந்து போகும் போதும் வரும்போதும் அவனைத் தனியாகச் சுரங்க வழியில் அனுப்பும் யுக்தியையும் நீதானே கூறினாய்?...."

"என்னுடைய கடமையைத்தான் நான் செய்தேன். கணவர் எடுத்திருக்கும் காரியத்துக்கு உதவி செய்வது மனைவியின் கடமை அல்லவா? ஏதோ எனக்குத் தெரிந்த யுக்தியைச் சொன்னேன். தங்களுக்கு அதனால்...."

"அது மட்டுமா செய்தாய்? இந்த மதுராந்தகன் உடம்பெல்லாம் விபூதியைப் பூசிக் கொண்டு ருத்ராட்ச மாலையை அணிந்து நமசிவாய ஜபம் செய்து கொண்டிருந்தான்! கோவில், குளம் என்று சொல்லிக் கொண்டு 'அம்மாவுக்குப் பிள்ளை நான்தான்' என்பதை நிரூபித்துக் கொண்டிருந்தான்! அரசாள்வதில் ஆசை உண்டாக்க நாங்கள் எவ்வளவோ முயன்றும், முடியவில்லை. இரண்டு தடவை நீ அவனுடன் பேசினாய், உடனே மாறிப் போய் விட்டான். இப்போது அவனுக்கு உள்ள இராஜ்ய ஆசையைச் சொல்லி முடியாது. தற்போது அவனுடைய மனோராஜ்யம் இலங்கையிலிருந்து இமயமலை வரையில் பரவியிருக்கிறது! பூமியிலிருந்து ஆகாசம் வரையில் வியாபித்திருக்கிறது. நம்மைக் காட்டிலும் அவனுக்கு அவசரம் தாங்கவில்லை. சோழ சிம்மாசனத்தில் ஏறத் துடித்துக் கொண்டிருக்கிறான். நந்தினி! அந்தப் பிள்ளை விஷயத்தில் நீ என்ன மாய மந்திரம் செய்தாயோ, தெரியவில்லை!.... ஆமாம், நீதான் இப்படிப்பட்ட மாய மந்திரக் காரியாயிருக்கிறாயே? வேறு மந்திரவாதியை நீ ஏன் அழைக்கிறாய்? அதைப் பற்றி அநாவசியமாக ஜனங்கள்...."

"அரசே! அதைப் பற்றி அநாவசியமாக யாரேனும் பேசினால், அப்படிப்பட்ட

துஷ்டர்களின் நாக்கைத் துண்டித்துப் புத்தி கற்பிப்பது தங்கள் பொறுப்பு. மந்திர வாதியை நான் ஏன் அழைக்கிறேன் என்பதை முன்னமே சொல்லியிருக்கிறேன். தாங்கள் மறந்திருந்தால், இன்னொரு தடவையும் சொல்லுகிறேன். பழையாறையிலுள்ள அந்தப் பெண் பாம்பின் விஷத்தை இறக்கத்தான். நீங்கள் ஆண்மை உள்ள புருஷர்கள். யுத்த களத்தில் நேருக்கு நேர் நின்று ஆண் பிள்ளைகளோடு போரிடுவீர்கள். 'கேவலம் பெண் பிள்ளைகள்' என்று அலட்சியம் செய்வீர்கள். பெண் பிள்ளைகளுடன் போர் செய்வது உங்களுக்கு அவமானம். ஆனால் நூறு ஆண் பிள்ளைகளைக் காட்டிலும் ஒரு பெண் பிள்ளை அதிகமான தீங்கு செய்து விடுவாள். பாம்பின் கால் பாம்பு அறியும். அந்தக் குந்தவையின் வஞ்சனையெல்லாம் உங்களுக்குத் தெரியாது, எனக்குத் தெரியும். தங்களையும் என்னையும் சேர்த்து அவள் அவமானப்படுத்தியதைத் தாங்கள் மறந்திருக்கலாம், நான் மறக்க முடியாது. நூறு பெண்களுக்கு மத்தியில் என்னைப் பார்த்து, 'அந்தக் கிழவனுக்குத்தான் சாகப் போகிற சமயத்தில் பெண் மோகம் பிடித்துப் புத்தி கெட்டுப் போய்விட்டது; - உன் அறிவு எங்கேயடி போயிற்று? அந்தக் கிழவனைப் போய் ஏன் மணந்து கொண்டாய்?' என்று கேட்டாளே, அதை நான் மறக்க முடியுமா? 'தேவலோக மோகினியைப் போல் ஜொலிக்கிறாயே? எந்த ராஜகுமாரனும் உன்னை விரும்பி மாலையிட்டுப் பட்டமகிஷியாக வைத்திருப்பானே? போயும் போயும் அந்தக் கிழ எருமை மாட்டைப் போய்க் கலியாணம் செய்து கொண்டாயே! என்று அவள் என்னைக் கேட்டதை மறக்க முடியுமா!'' என்று கூறி நந்தினி விம்மி அழத் தொடங்கினாள். அவளுடைய கண்களில் பொங்கிய கண்ணீர் தாரை தாரையாகக் கன்னங்களின் வழியாகப் பெருகி அவளது மார்பகத்தை நனைத்தது.

## முப்பத்தொன்பதாம் அத்தியாயம்

# உலகம் சுழன்றது!

முதிய பிராயத்தில் தாம் கலியாணம் செய்து கொண்டது பற்றிப் பலர் பலவிதமாகப் பேசிக் கொள்கிறார்கள் என்பதைப் பழுவேட்டரையர் அறிந்திருந்தார். அப்படி நிந்தனையாகப் பேசியவர்களில் குந்தவைப் பிராட்டியும் ஒருத்தி என்பது அவர் காதுக்கு எட்டியிருந்தது. ஆனால் குந்தவை என்ன சொன்னாள் என்பதை இதுவரை யாரும் அவரிடம் பச்சையாக எடுத்துச் சொல்லவில்லை. இப்போது நந்தினியின் வாயினால் அதைக் கேட்டதும் அவருடைய உள்ளம் கொல்லர் உலைக் களத்தை ஒத்தது. குப், குப் என்று அனல் கலந்த பெருமூச்சு வந்தது. நந்தினியின் கண்ணீர் அவருடைய உள்ளத் தீயை மேலும் கொழுந்து விட்டெரியச் செய்ய நெய்யாக உதவிற்று.

"என் கண்ணே! அந்தச் சண்டாளப் பாதகி அப்படியா சொன்னாள்? என்னைக் கிழ எருமை மாடு என்றா சொன்னாள்? இருக்கட்டும்; அவளை... அவளை... என்ன செய்கிறேன், பார்! எருமை மாடு அல்லிக் கொடியைக் காலில் வைத்து நசுக்குவது போல் நசுக்கி எறிகிறேன், பார்! இன்னும்... அவளை.... அவளை'' என்று பழுவேட்டரையர், கோபாவேசத்தினால் பேச முடியாது தத்தளித்தார். அவர் முகம் அடைந்த கோர சொரூபத்தை வர்ணிக்க முடியாது.

நந்தினி அவரைச் சாந்தப்படுத்த முயன்றாள். அவருடைய இரும்புக் கையைத் தன் பூவையொத்த கரத்தினால் பற்றி விரல்களோடு விரல்களை இணைத்துக் கோத்துக் கொண்டாள்.

"நாதா! எனக்கு நேர்ந்த அவமானத்

தைத் தாங்கள் பொறுக்க மாட்டீர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் மத்தகஜத்தின் மண்டையைப் பிளந்து இரத்தத்தைக் குடிக்கும் வலிமையுள்ள சிங்கம், கேவலம் ஒரு பூனையின் மீது பாய முடியாது. குந்தவை ஒரு பெண் பூனை; ஆனால் பெரிய மந்திரக்காரி. மாயமும் மந்திரமும் செய்துதான் எல்லோரையும் அவள் இஷ்டம் போல் ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறாள்! இந்தச் சோழ ராஜ்யத்தையே ஆட்டி வைத்துக் கொண்டிருக்கிறாள்! அவளுடைய மந்திரத்தை மாற்று மந்திரத்தால் தான் வெல்ல வேண்டும். தங்களுக்கு விருப்பமில்லாவிட்டால் சொல்லி விடுங்கள். இன்றைக்கே நான் இந்த மாளிகையை விட்டு வெளியேறுகிறேன்...." என்று கூறி மீண்டும் விம்மினாள்.

பழுவேட்டரையரின் கோப வெறி தணிந்தது; மோக வெறி மிகுந்தது.

"வேண்டாம், வேண்டாம்! ஆயிரம் மந்திரவாதிகளை வேண்டுமானாலும் அழைத்து வைத்துக் கொள். நீ போக வேண்டாம்! என் உயிர் அனையவள் நீ! அனையவள் என்ன? என் உயிரே நீதான்! உயிர் போய்விட்டால் அப்புறம் இந்த உடம்பு என்ன செய்யும்?.... இப்போதே என்னை நீ விலக்கி வைத்திருப்பது என்னை உயிரோடு வைத்துக் கொல்கிறது! இத்தனை மந்திரம் தெரிந்து வைத்திருக்கிறாயே? எனக்கு ஒரு மந்திரம் சொல்லித் தரக்கூடாதா?" என்றார்.

"நாதா உங்கள் கையில் வாளும் வேலும் இருக்கும்போது மந்திரம் எதற்கு? பேதைப் பெண்ணாகிய என்னிடம் விட்டு விடுங்கள் மாயமந்திரங்களை! தங்களுக்கு எதற்கு மாயமும் மந்திரமும்?" என்றாள் நந்தினி.

"கண்ணே! நீ உன் பவள வாய் திறந்து 'நாதா' என்று அழைக்கும்போதே என் உடம்பு சிலிர்க்கிறது. உன் பொன் முகத்தைப் பார்த்தால் என் மதி சுழல்கிறது! என் கையில் வாளும் வேலும் இருப்பது உண்மைதான். அதையெல்லாம் போர்க்களத்தில் பகைவர்களைத் தாக்குவதற்கு உபயோகிப்பேன். ஆனால் அந்த ஆயுதங்களை வைத்துக் கொண்டு இந்தக் கொடி மண்டபத்தில் என்ன செய்வேன்? மன்மதனுடைய பாணங்களுக்கு எதிர்ப் பாணம் என்னிடம் ஒன்றுமில்லையே? உன்னிடம் அல்லவா இருக்கிறது? எனக்கு மந்திரம் எதற்காக என்று கேட்கிறாய்! என் உடலையும் உயிரையும் ஓயாமல் எரித்துக் கொண்டிருக்கிறதே, அந்தத் தீயைத் தணிப்பதற்காகத்தான்! அதற்கு ஏதாவது மந்திரம் உனக்குத் தெரிந்திருந்தால் சொல்லு! இல்லையென்றால், உன் பூ மேனியைத் தொட்டு மகிழும் பாக்கியத்தை எனக்குக் கொடு! எப்படியாவது என் உயிரைக் காப்பாற்று! கண்மணி! உலகம் அறியச் சாஸ்திர விதிப்படி நீயும் நானும் மணந்து இரண்டரை ஆண்டுகள் ஆகின்றன! ஆயினும் நாம் உலக வழக்கப்படி இல்வாழ்க்கை நடத்த ஆரம்பிக்கவில்லை. விரதம் என்றும், நோன்பு என்றும் சொல்லி என்னை ஒதுக்கியே வைத்துக் கொண்டிருக்கிறாய். கரம் பிடித்து மணந்து கொண்ட கணவனை வாட்டி வதைக்கிறாய்! அல்லது ஒருவழியாக எனக்கு உன் கையினால் விஷத்தைக் கொடுத்துக் கொன்று விடு..."

நந்தினி தன் செவிகளைப் பொத்திக் கொண்டு, "ஐயையோ! இம்மாதிரி கொடிய வார்த்தைகளைச் சொல்லாதீர்கள்! இன்னொருமுறை இப்படிச் சொன்னால், நீங்கள் சொல்லுகிறபடியே செய்து விடுவேன். விஷத்தைக் குடித்துச் செத்துப் போவேன். அப்புறம் தாங்கள் கவலையற்று நிம்மதியாக இருக்கலாம்!" என்றாள்.

"இல்லை, இல்லை; இனி அப்படிச் சொல்லவில்லை. என்னை மன்னித்து விடு! நீ விஷங் குடித்து இறந்தால் எனக்கு மனநிம்மதி உண்டாகுமா? இப்போது அரைப் பைத்தியமாயிருக்கிறேன். அப்போது முழுப் பைத்தியமாகி விடுவேன்!..."

"நாதா! எதற்காகத் தாங்கள் பைத்தியமாக வேண்டும்? என்றைக்கு நாம் கைப்பிடித்து மணந்து கொண்டோமோ, அன்றைக்கே நாம் இரண்டு உடம்பும் ஓர் உயிரும் ஆகிவிட்டோம். உயிரும் உயிரும்



கலந்து விட்டன; உள்ளமும் உள்ளமும் சேர்ந்து விட்டன; தங்கள் இதயத்தின் ஒவ்வொரு துடிப்பும் இங்கே என் இதயத்தில் எதிரொலியை உண்டாக்குகிறது. தங்கள் நெஞ்சில் உதிக்கும் ஒவ்வொரு எண்ணமும் இங்கே என் அகக் கண்ணாடியில் பிரதிபலிக்கிறது. தங்கள் புருவம் நெரிந்தால் என் கண் கலங்குகிறது. தங்கள் மீசை துடித்தால் என் குடல் துடிக்கிறது. இப்படி நாம் உயிர்க்குயிரான பிறகு, கேவலம் இந்த உடலைப் பற்றி ஏன் சிந்தனை? மண்ணினால் ஆன உடம்பு இது. ஒருநாள் எரிந்து சாம்பலாகி மண்ணோடு மண் ஆகப்போகிற உடம்பு இது..."

"நிறுத்து! நிறுத்து! உன் கொடுமையான வார்த்தைகளைக் கேட்டு என் காது கொப்புளிக்கிறது!" என்று பழுவேட்டரையர் அலறினார். மேலும் அவள் பேச இடங் கொடாமல் பேசினார் : "மண்ணினால் ஆன உடம்பு என்றா சொன்னாய்? பொய்! பொய்! தேன் மணம் கமழும் உன் கனி வாயினால் அத்தகைய பெரும் பொய்யைச் சொல்லாதே! உன் உடம்பை மண்ணினால் செய்ததாகவா சொன்னாய்? ஒருநாளும் இல்லை. உலகில் எத்தனையோ பெண்கள் இருக்கிறார்கள். அவர்களையெல்லாம்



பிரம்மதேவன் மண்ணினாலும் செய்திருக்கலாம், கல்லினாலும் செய்திருக்கலாம், சுண்ணாம்பினாலும் செய்திருக்கலாம். கரியையும் சாம்பரையும் கலந்தும் செய்திருக்கலாம். ஆனால் உன்னுடைய திருமேனியைப் பிரம்மா எப்படிச் செய்தான் தெரியுமா? தேவலோகத்து மந்தார மரங்களிலிருந்து உதிர்ந்த மலர்களைச் சேகரித்தான்; தமிழகத்துக்கு வந்து செந்தாமரை மலர்களைப் பறித்துச் சேகரித்தான்: சேகரித்த மலர்களைத் தேவலோகத்தில் தேவாமிர்தம் வைத்திருக்கும் தங்கக் கலசத்தில் போட்டான். அமுதமும் மலர்களும் ஊறிக் கலந்து ஒரே குழம்பான

பிறகு எடுத்தான். அந்தக் குழம்பில் வெண்ணிலாக் கிரணங்களை ஊட்டி னான். பண்டைத் தமிழகத்துப் பாணர் களை அழைத்து வந்து யாழ் வாசிக்கச் சொன்னான். அந்த யாழின் இசையையும் கலந்தான். அப்படி ஏற்பட்ட அற்புதமான கலவையினால் உன் திருமேனியைப் படைத்தான் பிரம்மதேவன்..."

"நாதா! ஏதோ பிரம்மாவுக்குப் பக் கத்தில் இருந்து பார்த்தவரைப் போல் பேசுகிறீர்களே! இந்த வர்ணனைகளுக் கெல்லாம் நான் ஒருத்திதானா அகப் பட்டேன்? தங்களுடைய அந்தப்புரத்தில் எவ்வளவோ பெண்ணரசிகள் இருக்கிறார் கள். இராஜ குலங்களில் பிறந்தவர்கள். எத்தனையோ நீண்ட காலமாக அவர் களுடன் இல்லறம் நடத்தியிருக்கிறீர்கள். என்னைத் தாங்கள் பார்த்து இரண்டரை ஆண்டுதான் ஆகிறது!..." என்று நந்தினி சொல்வதற்குள், பழுவேட்டரையர் குறுக் கிட்டார். அவருடைய உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்த உணர்ச்சி வெள்ளத்தை வார்த்தைகளின் மூலமாக வாவது வெளிப்படுத்திவிட விரும்பினார் போலும். அவரைப் பற்றி எரிந்த தாபத் தீயைச் சொல்மாரியினால் நனைத்து அணைக்க முயன்றார் போலும்.

"நந்தினி! என் அந்தப்புரத்து மாதர் களைப் பற்றிச் சொன்னாய். பழமையான பழுவூர் மன்னர் குலம் நீடித்து வளர வேண்டும் என்பதற்காகவே அவர்களை நான் மணந்தேன். அவர்களில் சிலர் மலடிகளாகித் தொலைந்தார்கள். வேறு சிலர் பெண்களையே பெற்றளித்தார்கள். 'கடவுள் அருள் அவ்வளவுதான்' என்று மன நிம்மதியடைந்தேன். பெண்களின் நினைவையே வெகு காலம் விட்டொழித் திருந்தேன். இராஜாங்கக் காரியங்களே என் கவனம் முழுவதையும் கவர்ந் திருந்தன. சோழ ராஜ்யத்தின் மேன்மை யைத் தவிர வேறு எந்த நினைவுக்கும் இந்த நெஞ்சில் இடமிருக்கவில்லை. இப்படி இருக்கும்போதுதான் பாண்டியர் களோடு இறுதிப் பெரும் யுத்தம் வந்தது. வாலிபப் பிராயத்துத் தளபதிகள் பலர் இருந்தபோதிலும் என்னால் பின்தங்கி இருக்க முடியவில்லை. நான் போர்க்களம் சென்றிராவிட்டால், அத்தகைய மாபெரும் வெற்றி கிடைத்தும் இராது. பாண்டியர் படையை அடியோடு நாசம் செய்து மதுரையில் வெற்றிக் கொடி நாட்டிய பிறகு கொங்கு நாடு சென்றேன். அங்கிருந்து அகண்ட காவேரிக் கரை யோடு திரும்பி வந்து கொண்டிருந்தேன். வழியில் காடு அடர்ந்த ஓர் இடத்தில் உன்னைக் கண்டேன். முதலில் நீ அங்கு நிற்கிறாய் என்பதை என்னால் நம்பவே முடியவில்லை. கண்ணை மூடித் திறந்து பார்த்தேன். அப்போதும் நீ நின்றாய். 'நீ வனதேவதையாக இருக்க வேண்டும்; அருகில் சென்றதும் மறைந்து விடுவாய்!' என்று எண்ணிக் கொண்டு நெருங் கினேன். அப்போதும் நீ மறைந்து விட வில்லை. 'புராணக் கதைகளிலே சொல்லி யிருப்பது போல், சொர்க்கத்திலிருந்து சாபம் பெற்றுப் பூமிக்கு வந்த தேவ கன்னிகை அல்லது கந்தர்வப் பெண்ணா யிருக்க வேண்டும்; மனித பாஷை உனக் குத் தெரிந்திராது!' என்று எண்ணிக் கொண்டு, 'பெண்ணே! நீ யார்?' என்று கேட்டேன். நீ நல்ல தமிழில் மறுமொழி கூறினாய். 'நான் அநாதைப் பெண்; உங்களிடம் அடைக்கலம் புகுந்தேன்; என்னைக் காப்பாற்றுங்கள்' என்றாய். உன்னைப் பல்லக்கில் ஏற்றி அழைத்துக் கொண்டு வந்தபோது என் மனம் எண் ணாததெல்லாம் எண்ணியது. உன்னை எங்கேயோ, எப்போதோ, முன்னம் பார்த் திருப்பது போலத் தோன்றியது. ஆனால் நினைத்து நினைத்துப் பார்த்தும் எங்கே என்று தெரியவில்லை. சட்டென்று என் மனத்தை மூடியிருந்த மாயத்திரை விலகியது; உண்மை உதயமாயிற்று. உன்னை இந்த ஜன்மத்தில் நான் முன்னால் பார்த்ததில்லை. ஆனால் முந் தைய பல பிறவிகளில் பார்த்திருக்கிறேன் என்பது தெரிந்தது. அந்தப் பூர்வ ஜன் மத்து நினைவுகள் எல்லாம் மோதிக் கொண்டு வந்தன. நீ அகலிகையாக இந்த உலகில் பிறந்திருந்தாய்; அப்போது நான் தேவேந்திரனாக இருந்தேன். சொர்க்க லோக ஆட்சியைத் துறந்து ரிஷி

சாபத்துக்கும் துணிந்து உன்னைத் தேடிக் கொண்டு வந்தேன். பிறகு நான் சந்தனு மகாராஜனாகப் பிறந்திருந்தேன். கங்கைக் கரையோடு வேட்டையாடச் செல்லு கையில் உன்னைக் கண்டேன்; பூலோகப் பெண்ணைப் போல் உருக்கொண்டிருந்த கங்கையாகிய உன்னைக் காதலித்தேன். பிறகு ஒரு காலத்தில் காவேரிப் பூம்பட்டினத்தில் நான் கோவ லனாய்ப் பிறந்திருந்தேன். நீ கண் ணகியாக அவதரித்திருந்தாய். என் அறிவை மறைத்த மாயையினால் உன்னைச் சில காலம் மறந்திருந் தேன். பிறகு மாயைத் திரை வில கிற்று. உன் அருமையை அறிந்தேன். மதுரை நகருக்கு அழைத்துச் சென் றேன். வழியில் உன்னை ஆயர் குடியில் விட்டு விட்டுச் சிலம்பு விற்கச் சென்றனே். வஞ்சகத்தினால் உயிரை இழந்தேன். அதற்குப் பழிக்குப் பழியாக இந்தப் பிறவியில் மதுரைப் பாண்டியன் குலத்தை நாசம் செய்து விட்டுத் திரும்பி வரும் போது உன்னைக் கண்டேன். பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு பிரிந்த கண்ணகி நீதான் என்பதை உணர்ந்தேன்!..."

இப்படிப் பழுவேட்டரையர் முற்பிறவிக் கதைகளைச் சொல் லிக் கொண்டு வந்தபோது நந்தினி, அவர் முகத்தைப் பார்க்காமல் வேறு திசையை நோக்கிக் கொண்டிருந் தாள். அதனால் அவள் முகத்தில் அப் போது தோன்றிய பாவ வேறுபாடுகளைப் பழுவேட்டரையர் கவனிக்கவில்லை. கவனித்திருந்தால், அவர் தொடர்ந்து பேசியிருப்பாரா என்பது சந்தேகந்தான்.

மூச்சு விடுவதற்காக அவர் சற்று நிறுத்தியபோது, நந்தினி அவரைத் திரும்பிப் பார்த்து, "நாதா! தாங்கள் கூறிய உதாரணங்கள் அவ்வளவு பொருத்தமா யில்லை. எல்லாம் கொஞ்சம் அபசகுன மாகவே இருக்கின்றன. வேண்டுமென் றால், தங்களை மன்மதன் என்றும்



என்னை ரதி என்றும் சொல்லுங்கள்!" என்று முன்போல் முகமலர்ந்து புன்னகை செய்தாள்.

பழுவேட்டரையரின் முகமும் அப் போது மகிழ்ச்சியினாலும் பெருமையினா லும் மலர்ந்து விளங்கியது. எவ்வளவு அவ லட்சணமான மனிதனாயினும், தான் காதலித்த பெண்ணினால் 'மன்மதன்' என்று அழைக்கப்பட்டால் குதூகலப்படா தவன் யார்' என்றாலும், தற்பெருமையை விரும்பாதவர் போல் பேசினார் :

"கண்மணி! உன்னை ரதி என்பது மிகவும் பொருத்தமானதுதான். ஆனால் என்னை 'மன்மதன்' என்று சொல்லுவது பொருந்துமா! உன் அன்பு மிகுதியினால் சொல்கிறாய்!" என்றார்.

"நாதா! என் கண்களுக்குத் தாங்கள் தான் மன்மதன். ஆண் பிள்ளைகளுக்கு அழகு வீரம். தங்களைப் போன்ற வீராதி வீரர் இந்தத் தென்னாட்டில் யாரும் இல்லை என்பதை உலகமே சொல்லும். அடுத்தபடியாக, ஆண்மை படைத்தவர் களுக்கு அழகு தருவது அபலைகளிடம்

இரக்கம். அந்த இரக்கம் தங்களிடம் இருப்பதற்கு நானே அத்தாட்சி. இன்ன ஊர், இன்ன குலம் என்று தெரியாத இந்த ஏழை அநாதைப் பெண்ணைத் தாங்கள் அழைத்து வந்து அடைக்கலம் அளித்தீர்கள். இணையில்லாத அன்பையும் ஆதரவையும் என்பேரில் சொரிந்தீர்கள். அப்படிப்பட்ட தங்களை நான் வெகுகாலம் காத்திருக்கும்படி செய்ய மாட்டேன். என்னுடைய விரதமும் நோன்பும் முடியும் காலம் நெருங்கி விட்டது...'' என்றாள்.

''கண்மணி! என்ன விரதம், என்ன நோன்பு என்பதை மட்டும் தெளிவாகச் சொல்லிவிடு! எவ்வளவு சீக்கிரம் முடித்துத் தரலாமோ அவ்வளவு சீக்கிரத்தில் முடித்துத் தருவேன்!'' என்றார் பழுவூர் அரசர்.

''தன்னைக் காட்டிலும் மன்மதன் வேறு இல்லை என்று எண்ணியிருக்கும் இந்தச் சுந்தர சோழருடைய சந்ததிகள் தஞ்சைச் சிம்மாசனத்தில் ஏறக்கூடாது. தற்பெருமை கொண்ட அந்தக் குந்தவையின் கர்வத்தை ஒடுக்க வேண்டும்...''

''நந்தினி! அந்த இரண்டு காரியங்களும் நிறைவேறி விட்டதாகவே நீ வைத்துக் கொள்ளலாம். ஆதித்தனுக்கும் அருள்மொழிவர்மனுக்கும் பட்டம் கிடையாது; மதுராந்தகனுக்கே பட்டம் கட்ட வேண்டும் என்று இந்த ராஜ்யத்தின் தலைவர்கள் எல்லாரும் சம்மதித்து விட்டார்கள்...''

''எல்லாரும் சம்மதித்து விட்டார்களா? உண்மைதானா?'' என்று நந்தினி அழுத்தமாகக் கேட்டாள்.

''இரண்டு மூன்று பேரைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் சம்மதித்து விட்டார்கள். கொடும்பாளூரானும், மலையமானும், பார்த்திபேந்திரனும் நம்முடன் என்றும் இணங்க மாட்டார்கள். அவர்களைப் பற்றிக் கவலையில்லை...''

''ஆயினும் காரியம் முடியும் வரையில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டியதுதானே?''

''அதற்குச் சந்தேகம் இல்லை. எல்லா ஜாக்கிரதையும் நான் செய்து கொண்டுதான் வருகிறேன். மற்றவர்களின் முட்டாள்தனத்தினால் பிசகு நேர்ந்தால்தான் நேர்ந்தது. இன்றைக்குக் கூட அத்தகைய பிசகு ஒன்று நேர்ந்திருக்கிறது. காஞ்சியிலிருந்து வந்த ஒரு வாலிபன் காலாந்தகனை ஏமாற்றி விட்டுச் சக்கரவர்த்தியைச் சந்தித்து ஓலை கொடுத்திருக்கிறான்...''

''ஆகா! தங்கள் தம்பியைப் பற்றித் தாங்கள் ஓயாமல் புகழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். அவருக்குச் சாமர்த்தியம் போதாது என்று நான் சொல்லவில்லையா?''

''இந்த விஷயத்தில் அசட்டுத்தனமாகத்தான் போய் விட்டான்! ஏதோ நம் அரண்மனை முத்திரை மோதிரத்தை அந்த வாலிபன் காட்டியதாகச் சொல்கிறான்!''

''ஏமாந்து போனவர்கள் இப்படித்தான் ஏதாவது காரணம் சொல்லுவார்கள்! ஏமாற்றிய அந்த வாலிபனைப் பிடிக்க முயற்சி ஏதும் செய்யவில்லையா?''

''முயற்சி செய்யாமல் என்ன? கோட்டைக்கு உள்ளேயும் வெளியேயும் வேட்டை ஆரம்பமாகி விட்டது! எப்படியும் பிடித்து விடுவார்கள். இதனாலெல்லாம் நம்முடைய காரியத்துக்கு ஒன்றும் பங்கம் வந்து விடாது. சக்கரவர்த்தி காலமானதும் மதுராந்தகன் சிம்மாசனம் ஏறுவது நிச்சயம்...''

''நாதா! என்னுடைய விரதம் என்னவென்பதைத் தங்களுக்குத் தெரியப்படுத்தும் காலம் இப்போது நெருங்கி வந்து விட்டது...''

''கண்ணே! அதைச் சொல்லும்படிதான் நானும் கேட்கிறேன்...''

இந்த இதழ் அட்டைப்படத்தை அலங்கரிப்பவர்கள் நந்தினியும் பழுவேட்டரையரும். ஓவியம் : பத்மவாசன்.

"மதுராந்தகன் - அந்த அசட்டுப் பிள்ளை - பெண் என்றால் பல்லை இளிப்பவன்... அவன் பட்டத்துக்கு வருவதினால் என்னுடைய விரதம் நிறைவேறி விடாது..."

"வேறு எதனால் நிறைவேறும்? உன் விருப்பத்தைச் சொல்லு! நிறைவேற்றி வைக்க நான் இருக்கிறேன்...."

"அரசே! என் சிறு பிராயத்தில் ஒரு பிரபல சோதிடன் என் ஜாதகத்தைப் பார்த்தான். பதினெட்டுப் பிராயம் வரையில் நான் பற்பல இன்னல்களுக்கு உள்ளாவேன் என்று சொன்னான்..."



"இன்னும் என்ன சொன்னான்?"

"பதினெட்டுப் பிராயத்துக்குப் பிறகு திசை மாறும் என்றான். இணையில்லாத உன்னத பதவியை அடைவேன் என்று சொன்னான்...."

"அவன் சொன்னது உண்மைதான்! அந்தச் சோதிடர் யார் என்று சொல்லு! அவனுக்குக் கனகாபிஷேகம் செய்து வைக்கிறேன்."

"நாதா!"

"கண்ணே!"

"இன்னும் அந்தச் சோதிடன் கூறியது ஒன்று இருக்கிறது. அதைச் சொல்லட்டுமா?"

"கட்டாயம் சொல்லு! சொல்லியே தீரவேண்டும்!"

"என்னைக் கைப்பிடித்து மணந்து கொள்ளும் கணவர், மணிமகுடம் தரித்து ஒரு மகா சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும் வந்து அடிபணிந்து ஏத்தும் சக்கரவர்த்தியாக வீற்றிருப்பார் என்று அந்தச் சோதிடன் சொன்னான். அதை நிறைவேற்றுவீர்களா?"

பழுவேட்டரையரின் செவியில் இவ்வார்த்தைகள் விழுந்ததும், அவருக்கு முன்னாலிருந்த நந்தினியும் அவள் வீற்றிருந்த மஞ்சமும் சுழன்றன. லதா மண்டபம் சுழன்றது. அந்த மண்டபத்தின் தூண்கள் சுழன்றன. எதிரே இருந்த இருளடர்ந்த தோப்பு சுழன்றது. நிலாக் கதிரில் ஒளிர்ந்த மர உச்சிகள் சுழன்றன. வானத்து நட்சத்திரங்கள் சுழன்றன. இருபுறத்து மாளிகைகளும் சுழன்றன. உலகமே சுழன்றது!

(தொடரும்)

# தமிழ்த் தந்தை திரு.வி.க.

ஸ்ரீ திரு வி.கல்யாணசுந்தர முதலியார் 1921ம் ஆண்டில் "தேசபக்தன்" பத்திரிகையிலிருந்து நீங்கினார். பிறகு "நவசக்தி" என்னும் வாரப் பத்திரிகையைச் சொந்தமாகவே ஆரம்பித்து நடத்தி வந்தார். ஏறக் குறைய நாலு ஆண்டுகள் "நவ சக்தி"யில் நான் தொண்டாற்றினேன். அப்போது ஸ்ரீ திரு வி.க. அவர்களிடம் நெருங்கிப் பழகும் பேறு எனக்குக் கிடைத்தது. அவருடைய தூய இலட்சிய வாழ்க் கையைப் பற்றியும் அவருடைய சிறந்த குணங் களைப் பற்றியும் அறிந்து கொள்ள முடிந்தது.

ஒரு சமயம் திருவி.க.வை "ராயப்பேட்டை முனிவர்" என்று நான் குறிப்பிட்டிருந்தேன். அரசியல் உலகம், பத்திரிகை உலகம், தொழி லாளர் உலகம்- ஆகிய மூன்று சங்கடமான உலகங்களில் சஞ்சரித்த போதிலும் அவரு டைய சொந்த வாழ்க்கை முனிபுங்கவரின் உத்தம வாழ்க்கையாகவே இருந்தது.

அவருடைய தோற்றம் தூய்மையே உருக் கொண்டது போல இருக்கும். வெண்மையான எளிய கதர் உடை அணிவார். சநாதன ஹிந்து தர்மத்தில் அவருடைய ஆழ்ந்த பற்றுக்கு அடையாளமாக அவருடைய உச்சிக் குடுமி விளங்கும். அவர் எவ்வளவு புரட்சிகரமான சீர்திருத்தக் கருத் துக்களை வெளியிட்டபோதிலும், அவற்றுக்கெல்லாம் மூலவேர் சநாதன ஹிந்து தர்மத்திலே தான் நிலைபெற்றிருக்கும்.

"நவசக்தி" பத்திரிகையில் எனக்கு ஏற்பட்டிருந்த வேலைகளில் ஒன்று, காந்திஜியின் கட்டுரை களை மொழி பெயர்த்தல். பொதுவாக, என்னுடைய மொழிபெயர்ப்பு திரு வி.க.வுக்கு மிகவும் பிடித்திருக்கும். ஒரு முறை மகாத்மா தமது கட்டுரையொன்றில், பரம்பொருளைக் குறிப்பிடும் இடத் தில் "லார்ட் சிவா' என்று எழுதி யிருந்தார். தமிழ் மொழிபெயர்ப் பில் நான் 'சிவ பெருமான்' என்று நியாயமாகப் போட்டிருக்க வேண்டும். எதனாலோ-காரணம் எனக்கே தெரிய வில்லை-"இறைவன்" என்று எழுதிவிட்டேன். ஆங்கிலத் தில் கட்டுரையைப் படித்துத் தமிழ் மொழிபெயர்ப்பையும் படித்த திரு.வி.க.வுக்கு என் பேரில் சந்தேகம் உண்டாகி விட்டது.

அந்தரங்கமாக என்னை அழைத்து என்னுடைய மதக் கோட்பாடுகளைப் பற்றிக் கேட்க ஆரம்பித்தார். "உனக்கு எந்த மதத்தில் அதிகப் பற்று?" என்றார். "ஒரு மதத்திலும் எனக்குப் பற்றுக் கிடையாது. மதங்களைப் பற்றிய உண் மையை இன்னும் நான் நன் கறியவில்லை" என்றேன். "எந்த மதத்தின் பேரிலாவது கோபம் உண்டா?" என்று கேட்டார். "இல்லவே இல்லை; மதம் என்னை என்ன செய்தது?" என்றேன். "ஒருவேளை சிவனை உனக் குப் பிடிக்காதோ?" என்று கேட்டார். "சிவனை எனக்கு ரொம்பப் பிடிக்கும். அவரு டைய நெற்றிக் கண்ணை மட்டும்தான் அவ்வளவாகப் பிடிக்காது. இதெல்லாம் எதற்காகக் கேட்கிறீர்கள்?" என்றேன். அவர் விவரம் சொன்ன பிறகு, "சிவன் என் பதற்குப் பதிலாக 'இறைவன்' என்று போட்டதினால் சிவ னைத் தூக்கித் தானே வைத்திருக்கிறேன்! சிவன்தான் இறைவன் என்று ஏற்படுகிற தல்லவா?" என்று சொல்லிச் சமாளித்துக் கொண்டேன்.

திரு.வி.க.வுக்கு உண்மை யில் மத வேற்றுமை உணர்ச் சியே கிடையாது. எனக்கு ஒருவேளை அந்த மாதிரி பைத்தியக்கார வேற்றுமை உணர்ச்சிகள் இருக்குமோ என்று சந்தேகித்துத்தான் மேற்கண்டவாறு குறுக்கு விசாரணை செய்தார்

அம்மாதிரி ஒன்றும் இல்லை என்று அறிந்ததும் பெரிதும் திருப்தியடைந்தார்.



திரு.வி.க.வுக்கு அரசியலைக் காட்டிலும் அதிக ஆர்வத்தை ஊட்டிய இரண்டு இலட்சியங்கள் இயற்கை வாழ்வும், பெண்ணின் பெருமையும். ''பழந்தமிழர்கள் இயற்கையோடியைந்த வாழ்வு நடத்தினார்கள்; பெண்களைப் போற்றினார்கள். இக்காலத் தமிழர்கள் பழம் பெருமையை அடைய வேண்டுமானால் அந்த இயற்கை வாழ்வுக்குத் திரும்ப வேண்டும். பெண் குலத்தைப் போற்ற வேண்டும்'' என்பது அவருடைய ஆழ்ந்த நம்பிக்கை. காந்தியடிகள் மீது திருவி.கவுக்கு உள்ள அபார பக்திக்கு ஒரு முக்கிய காரணம், மகாத்மா இயற்கையோடியைந்த வாழ்வை ஆதரிப்பதேயாகும்.

''பெண் தெய்வங்கள்'' என்ற சொற்றொடரை முதன் முதலில் திரு.வி.க.தான் உபயோகப்படுத்தினார் என்று நினைக்கிறேன்.

தமிழ் நாட்டில் உள்ள அத்தனை பெண்களையும் திரு.வி.க. அத்தனை தெய்வங்களாகவே கண்டார்.

திரு.வி.க.வின் 'பெண் தெய்வங்கள்' சம்பந்தமாக யாராவது பரிகாசம் செய்தாலும் அவர் அதைப் பொருட்படுத்துவதில்லை. அவர்களுடைய பரிகாசத்துக்கு எதிராக, "எனக்குப் பெண்ணியற்கை உண்டு; என் உள்ளம் பெண் உள்ளம்" என்று அடிக்கடி கூறுவார். இம்மாதிரியே, அவரைப் பற்றிச் சிலர் "முதலியாரா? பரம சாது!'' என்று சொல்வதுண்டு. இதை முன்னிட்டே அவர் புதிதாக அச்சுக் கூடம் தொடங்கியபோது "சாது அச்சுக்கூடம்" என்று பெயரிட்டார்.

திருவி.கவிடம் உண்மையிலேயே பெண் தன்மை உண்டு. பெண் தன்மையென்றால், பெண்களுக்கு இயற்கையாக உரியதென்று கருதப்படும் இனிய சுபாவம்தான். "நவசக்தி"யில் நான் ஏறக்குறைய நாலு வருஷம் வேலை பார்த்தேன். இந்த நான்கு வருஷத்தில் திருவி.க. ஒரு தடவையாவது கடிந்து பேசிய தில்லை. முகத்தைச் சிணுங்கியதுகூடக் கிடையாது. மேலே கூறிய ''சிவபெருமான்'' சம்பவத்தைப் பற்றி என்னைக் குறுக்கு விசாரணை செய்ததைத் தவிர, எனக்கும் அவருக்கும் ஒரு விதமான தகராறும் ஏற்பட்டதில்லை.

**அமரர்**
**கல்கி**

சென்னைத் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த பதினாயிரக் கணக்கான தொழிலாளிகளும் திருவி.கவைத் தங்களுடைய உற்ற நண்பராகவே இன்று வரையில் கருதி வருகிறார்கள். சென்னைத் தொழிலாளர் சங்கம் இன்றைக்கு இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னால் ஆரம்பிக்கப்பட்டது. இந்தியாவிலேயே முதன் முதலில் அமைக்கப்பட்ட தொழிலாளர் சங்கம் இதுதான் என்று சொல்வார்கள். இதன் அமைப்பில் பங்கு பெற்றவர்களில் முக்கியமான ஒருவர் திரு வி.க. ஆரம்ப நாட்களில் சென்னைத் தொழிலாளர் சங்கத்துக்கு எத்தனையெத்தனையோ ஆபத்துக்கள் நேர்ந்தன. அந்த ஆபத்துக் காலத்தில் எல்லாம் அளவில்லாத

தைரியத்துடன் எதிரிகளுக்கு முன்னால் திறந்த மார்புடன் நின்றவர் திரு.வி.க. முதலியார்.

"நவசக்தி"யில் நான் தொண்டாற்றி வந்த காலத்தில் சில சமயம் சூளையில் நடந்த தொழிலாளர் கூட்டங்களுக்குச் சென்றிருக்கிறேன். தொழிலாளர் கூட்டந் தானே என்பதற்காக திரு.வி.க. தமது பிர சங்கத்தின் நடையை மாற்றிக் கொள்வ தில்லை. வழக்கம் போலவேதான் சொற் பொழிவு ஆற்றுவார். அவர் கூறுவதெல்லாம் தொழிலாளர்களுக்கு விளங்குமா என்று எனக்குச் சில சமயம் சந்தேகம் உண்டா கும். ஆனால் அவர்கள் முகங்கள் மட்டும் மலர்ந்துதானிருக்கும். திரு.வி.க.வின் வாயிலிருந்து வரும் சொற்களைக் காட்டி லும் அவருடைய உள்ளத்திலிருந்து பொங் கும் அன்பே அவர்களுடைய முகங்களை அவ்விதம் மலரச் செய்கிறது என்று எனக் குத் தோன்றும்.

"நவசக்தி"யிலிருந்து நான் விலகிய சம்பவத்தைக் கூறி இந்தக் கட்டுரையை முடிக்க விரும்புகிறேன்.

நான் விலகிக் கொள்ள விரும்புவதாகத் திரு.வி.க.விடம் தெரிவித்தபோது அவரால் அதை நம்ப முடியவேயில்லை. வியப்பும் வருத்தமும்கூட அடைந்தார். விலகிக் கொள்ள விரும்புவதற்குக் காரணம் கேட் டதுடன், "இங்கு ஏதாவது குறை உண்டா?" என்றும் விசாரித்தார்.

உண்மை என்னவென்றால், "நவசக்தி" காரியாலயத்தில் எனக்கு ஒரு குறையும் இருக்கவில்லை. எந்தப் பத்திரிகாலயத்திலும் ஓர் உதவி ஆசிரியருக்கு அவ்வளவு உரி மையும் மரியாதையும் அளிக்க மாட்டார் கள் என்பதை நன்கு அறிந்திருந்தேன். "நவசக்தி"யில் நான் செய்த தொண்டு எனக்கே அவ்வளவு திருப்தி அளிக்காதது தான் நான் விலகிக் கொள்ள விரும்பிய தற்குக் காரணம். பெரும்பாலும் மொழி பெயர்ப்பு வேலைதான் "நவசக்தி"யில் நான் செய்ய நேர்ந்தது. திரு.வி.க.வின் தமிழ் நடையை என்னால் கையாள முடிய வில்லை. என்னுடைய நடையில் நான் சொந்தமாக எழுத முயன்ற விஷயங்கள் "நவசக்தி"க்குப் பொருத்தமாக அமைய வில்லை. இதனால் என் மனம் அமைதியை இழந்து விட்டது. வேலையில் ஊக்கம் இல்லாமல் போய்விட்டது. அதன் பிறகு "நவசக்தி"யில் இருப்பது திரு.வி.க.வின் அன்பைத் தவறாக உபயோகப்படுத்திக் கொள்வதாகும் என்று கருதினேன்.

இதையெல்லாம் இவ்வளவு பட்டவர்த் தனமாக அப்போது திரு.வி.க. விடம் சொல்லவும் முடியவில்லை. "என்னமோ, மனம் அமைதியிழந்திருக்கிறது. ஆகை யினால்தான் விலக விரும்புகிறேன். வேறு ஒரு குறையும் கிடையாது" என்று வற் புறுத்திக் கூறினேன்.

சில தினங்கள் இவ்விதம் விவாதம் நடந்த பிறகு, கடைசியாக ஒரு நாள் திரு வி.க. கூறினார்:

"இதோ பார்! உன்னைப் போகச் சொல்ல எனக்கு விருப்பமில்லை. நீயோ பிடிவாதம் பிடிக்கிறாய். உன்னைப் போல் சிலர் அவசரப்பட்டு ஒரு காரியம் செய்து விட்டுப் பிறகு வருந்துவதும் உண்டு. அதற்கு இடமில்லாமல் செய்து கொள்வோம். உன்னுடைய ஸ்தானத்தை இன்னும் ஆறு மாதங்களுக்குக் காலியாக வைத்திருக் கிறேன். இந்த ஆறு மாதத்துக்குள் நீ எப் போது வேண்டுமானாலும் திரும்ப வந்து சேர்ந்து கொள்ளலாம். ஆறு மாதத்திற்குப் பிறகு உன்னைக் கேட்டுவிட்டு அப்புறம் வேறொருவரை நியமித்துக் கொள்கிறேன்."

திரு.வி.க.வின் பேரன்பும் பெருந்தன் மையும் என்னைப் பேச்சு மூச்சில்லாமல் அடித்து விட்டன. உள்ளம் உருகிக் கண்ணீ ரும் துளித்து விட்டது. ஒருகணம் "நான் போகவே இல்லை" என்று சொல்லிவிடலா மென்று தோன்றியது. பிறகு, "பார்த்துக் கொள்ளலாம்; ஆறு மாதத் தவணைதான் கொடுத்திருக்கிறாரே?" என்று தீர்மானித் தேன். அவருக்கு என் மனமார்ந்த நன்றி யைத் தெரிவித்து விடைபெற்றுக் கொண் டேன்.

திரு.வி.க.வைப் பற்றிய என்னுடைய அனுபவங்களையெல்லாம் ஞாபகப்படுத்திப் பார்த்துக் கொண்டு, "அவர் எப்பேர்ப்பட்ட மனிதர்?" என்று சிந்தனை செய்தேன். அவருடைய குணாதிசயங்களுக்குள்ளே என் ஞாபகத்தில் மேலோங்கி நிற்பது, "அவர் எவ்வளவு நல்லவர்!" என்பதே யாகும். இந்த உலகத்தில் ஒரு மனிதன் பெறக்கூடிய பேறு இதைக் காட்டிலும் வேறு என்ன இருக்கிறது? ●

'குமரி மலர்' இதழில் அமரர் கல்கி எழுதியது.

'கோவையில் ஓர் அதிசய அரசியல்வாதி' - கல்கி 19.4.98 இதழில் கோவை மாநகராட்சியின் 44வது வார்டு கவுன்சிலர் ஹேமா ஜெயசீலன் பற்றி எழுதியிருந்தோம். இப்போது அவர், தமாகாவை விட்டே நீக்கப்பட்டிருக்கிறார்.

இதற்கு த.மா.கா மாவட்டத் தலைமை வட்டாரத்தில் சொல்லப்படும் காரணம்: "கட்சிக் கட்டுப்பாட்டை மீறினார். பத்திரிகைகளுக்கு அவதூறாய் செய்திகள் அளித்தார். கட்சியில் தேர்தல் தோல்விக்குக் கருத்துக் கேட்கும் கூட்டத்தில் தலைவர் மூப்பனார் முன்னிலையில் முறையற்றுப் பேசினார்" என்பன.

த.மா.காவைச் சேர்ந்தவரே மேயராக உள்ள கோவை மாநகராட்சியில், எதிர்க்கட்சி போல் செயல்படுபவர் இந்த த.மா.கா கவுன்சிலர் ஹேமா ஜெயசீலன்!

மாநகராட்சி தார் வாங்கியதில் ஊழல், மாநகராட்சி லாரிகளில் டீசல் திருட்டைக் கைப்பிடியாய்ப் பிடித்து கமிஷனர் வசம் ஒப்படைத்தது... எழுதுபொருள் (ஸ்டேஷனரி) வாங்கியதில் ஊழல்... இந்த ஊழல்களின் பின்னணியில் மாநகராட்சி ஃபைல்கள் மாயம்... மாடு வாங்கியதில் ஊழல், பல்புகள் வாங்கியதில் ஊழல்... என அடுக்கடுக்கான ஊழல் குற்றச்சாட்டுகளை வெளிச்சம் போட்டுக் காட்டியது ஒரு தி.மு.க கவுன்சிலரோ, அ.தி.மு.க கவுன்சிலரோ, கம்யூனிஸ்டுகளோகூட அல்ல. கூட இருந்தே கூப்பாடு போடும் இவர்தான் என்பதை முழுக்க முழுக்க கோவை த.மா.காவினர் உறுதியாக நம்புகிறார்கள்.

இதன் பின்னணியில், இவர் தம் சொத்துக் கணக்கை சமீபத்தில் மாமன்றத்தில் சமர்ப்பித்ததும் எழுந்த புகைச்சல், சமீபத்திய மூப்பனாரின் கருத்துக் கேட்புக் கூட்டத்தில் முடிவுக்கு வந்து விட்டது. இந்த இடைக்கால நீக்கம் திட்டமிட்ட சதியா... இல்லை இதற்கு வேறு பின்னணி ஏதும் உண்டா...? என அவரிடமே கேட்டபொழுது கொஞ்சம் உணர்ச்சி பூர்வமாய்த்தான் பேசினார்.

"இங்கே மாவட்டத் தலைமையின் சதிதான்.. சந்தேகமில்லை. நான் இதுவரை தலைவரை மட்டுமே நம்பினேன்... மற்றவர்கள் தவறை நான் சுட்டிக் காட்டிய பொழுது அவர்களைக் கண்டிக்காமல் 'உனக்கு கான்ட்ரவர்ஷியலாவே பேசறது வழக்கமாகப் போச்சு... உட்கார்...' என்றார். நான் அவருடன் இதுவரை ஓரிருமுறை பேசியிருந்தாலே அதிகம். அதிலும் எந்த இடத்திலும் நான் பிரச்னைகளை அழுத்தமாய்ச் சுட்டியதில்லை. அப்படிப்பட்ட மனிதரிடத்தில் இப்படியொரு வார்த்தை வந்து விழுகிறதென்றால் என்னைப் பற்றிய தவறான கருத்து அவருக்கு யாராலோ அழுத்தந் திருத்தமாய்த் தரப்பட்டுள்ளதாகத் தானே அர்த்தம்...? சரி... நான் தலைவர் அப்படிக் கேட்டவுடனேயே கூட்டத்திலிருந்து வெளி நடப்பு செய்து விட்டேன்... அப்போதே கட்சியிலிருந்தும் வெளியேறி விட்டதாகவே அர்த்தம்...!

"இந்த நிலையில் என்னை இடைநீக்கம் செய்ய இவர்கள் (த.மா.கா கோவை மாவட்டத் தலைமை) யார்...? கூண்டோடு ராஜினாமா



# பெண் கவுன்சிலருக்கு அநீதி?

செய்த மாவட்டத் தலைவர்களுக்கு ஒரு மக்கள் மன்றப் பிரதிநிதியைக் கட்சியை விட்டு நீக்க என்ன அருகதை இருக்கிறது...? நான் கட்சிக் கட்டுப் பாட்டை மீறினேன் என்கிறார்கள்... இந்த மாவட்டத் தலைவர் மட்டும் எனக்குக் கடிதம் அனுப்பும் முன்னரே எப்படி பிரஸ்ஸுக்குச் செய்தி கொடுக்கலாம்? நான் நீக்கப்பட்டுள்ளதை பேப்பரில் பார்த்துத் தெரிந்து கொண்ட அவலம் வேறெந்தக் கட்சியிலும் நிகழாது. இது மட்டும் கட்சிக்குப் பெருமை சேர்க்குமா...?

"என்னைப் பொறுத்தவரை த.மா.கா ஊழலை எதிர்க்கப் பிறந்த கட்சி. 'கடவுளே வந்தாலும் தமிழகத்தைக் காப்பாற்ற முடியாது...' என ரஜினி பேசியதின் பின்புலமாய் வளர்ந்த கட்சி. ஏப்ரல் 14-ந் தேதி வரை (இடைநீக்கம், வெளிநடப்பு செய்தது) அப்படித்தான் நம்பியிருந்தேன். நான் ஏமாந்தால் பரவாயில்லை... மக்கள் ஏமாறலாமா...? அதனால் தொடர்ந்து மக்கள் பணிகளில் ஈடுபடுவேன்...!"

"கட்சிக்கு ராஜினாமா கடிதம் அனுப்பி விட்டீர்கள்... இனி வேறெந்தக் கட்சியில்...?"

"பலரும் அழைப்பு விடுக்கிறார்கள். போனிலும் விசாரிக்கிறார்கள்... அது பற்றி நிதானமாகவே முடிவு செய்வது என உள்ளேன். கண்டிப்பாக அது தேசியக் கட்சியாக இருக்கும்."

இவர் ராஜினாமா அனுப்பிய நாளிலிருந்து இவருக்கு திடீரென்று செக்யூரிட்டி (நான்கு போலீஸார், ஒரு எஸ்.ஐ) ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதன் பின்னணியில் ஏதும் மிரட்டல் (ஒருமுறை தீவிரவாதக் கும்பலுக்கும் இவருக்கும் முடிச்சுப் போட்ட சம்பவம் உள்ளது) உண்டோ எனக் கேட்டபோது போலீஸ் வட்டாரம் வழக்கம் போல் பலமாக மறுக்கிறது. 'மேலிடத்து உத்தரவு... இருக்கிறோம்...!' என்ற ஒற்றை வரி பதில் இந்த கவுன்சிலர் குடும்பத்தையும் கொஞ்சம் கலக்கியுள்ளது.

இதுபற்றி இவர் கணவர் ஜெயசீலன் கூறும் போது (இவரும் த.மா.காக்காரர்) "திடீர்னு இவங்க நாலு பேர் வந்து நின்னாங்க சார்... ஏன் என்னன்னு கேட்டா மேல கேளுங்கன்னு பதில்... ஸ்டேஷன்ல கேட்டா ஜெனரல் செக்யூரிட்டி தான்னு பதில்... வெளியில எல்லாம் நாங்களா செக்யூரிட்டி கேட்டு வாங்கினதா பேச்சு...' அவங்களைப் போன்னு சொன்னாலும் போக மாட்டேங்கறாங்க... ஒண்ணுமே புரியல... நாங்க ரெண்டு பேரும் வழக்குறைஞர்கள் மட்டுமில்ல... எதுக்கும் துணிஞ்சு அரசியலுக்கு வந்தவங்க... இதென்ன அசிங்கம்னு தோணுது...!"

ஒரு பக்கம் தீவிரவாதிகள் அச்சுறுத்தல் எனப் பேச்சு. இன்னொரு பக்கம் இவர் நிறைய பகை சம்பாதித்து விட்டதால் சக கட்சிக்காரர்களே மிரட்டல் விட்டதாகவும் வதந்தி. இதற்கு மத்தியில் அடுத்த மாமன்றக் கூட்டத் தொடர் எப்போது துவங்கும்...? கூட்டத்தில் பிரச்னை எப்படி வெடிக்கும்...? என்கிற எதிர்பார்ப்பு.



கோவை மாவட்ட த.மா.கா தலைவர் கோவைத் தங்கத்தை தொலைபேசியில் தொடர்பு கொள்ள முயன்றோம். ஒருமுறைக்கு இருமுறை அவர் சகாவே எடுத்தார். அவரே விளக்கம் கேட்டார். ஹேமா ஜெயசீலன் விஷயம் என்றதும்... 'மூச் கூடாது...!' என்று பதில் வந்தது!

— ரோகிணி

"டெல்லியிலிருந்து என் தங்கச்சியும், மதுரையிலேர்ந்து அம்மாவும் ஒரு வாரம் தங்கற மாதிரி வரப் போறாங்களாம்... ஆபீசுக்கு ஃபோன் வந்திச்சு."

"வடக்கேயிருந்து வம்பு வரப் போகுது. தெற்கேயிருந்து தொல்லை வரப் போகுது'-ன்னு விடியற்காலை குடுகுடுப்பைக்காரன் சொன்னது சரியாகத்தான் இருக்கு."

— சீர்காழி வி. ரேவதி

# மறுபடியும் (டிவியில்) வெந்து தணியப் போகிற காடுகள்!

கல்கியில் வெளிவந்த, இந்திரா பார்த்தசாரதியின் 'வெந்து தணிந்த காடுகள்' நாவல், தூர்தர்ஷனில் தொடராக வெளிவருகிறது. திரைக்கதை, வசனமெல்லாம் இ.பா. தான்.

சுமார் பதினாறு ஆண்டுகளுக்கு முன்னால் வெந்து தணிந்த காடுகள் தொடர்கதையாக வெளியானபோது உண்டான பரபரப்பும் எழுச்சியும் அது பேசப்பட்ட வேகமும் நீண்ட நாள் வாசகர்களுக்கு இன்னும் மறந்திருக்காது.

இப்போது டி.வி.க்காகத் திரை உருவம் பெறும் இக்கதையில் ஒரே ஒரு மாறுதல். கதை நிகழ்கிற இடம் தில்லி அல்ல; படப்பிடிப்பு வசதிக்காகச் சென்னை!



• 'வெந்து தணிந்த காடுகள்' தொடரில் ஒரு காட்சி

"இந்தியாவில் எந்தப் பெரு நகரமாயினும் சரி. அங்கு வாழும் தமிழர்களிடம் அடிப்படை உணர்வுகள் இன்னும் மாறவேயில்லை. தவிரவும் இன, மொழி கடந்து நாடு முழுவதிலுமாக முதலாளித்துவ மதிப்பீடுகள் ஒரே மாதிரிதான் இருக்கிறபடியால் தொடரில் எது ஒன்றும் சிதையவே இல்லை" என்கிறார் இ.பா.



• இந்திரா பார்த்தசாரதி

பெண்ணியக் கொடியைத் தூக்கிப்பிடிக்கிற இக்கதைக்கு முதலில் தூர்தர்ஷன் அனுமதி தர மறுத்திருக்கிறது. அதிர்ச்சி மதிப்புக்காகத் திணிக்கப்பட்ட புரட்சி ஏதும் கதையில் இல்லை என்பதை இ.பாவே சுட்டிக் காட்டியபின்தான் அனுமதித்து, ஒளிபரப்ப முன் வந்திருக்கிறார்கள்.

சமூகத்தில், திருமணம்-குடும்பம் போன்ற அமைப்புகள் பெண்ணை எப்படி அழுத்துகிறது என்பது பற்றிய கதை இது. பெண்ணின் இருப்பு குறித்த அடையாளச் சிக்கலில், கணவன் மனைவிக்குள் ஏற்படுகிற போராட்டமும் விளைவாகப் பிரிவுமாக உளவியல் ரீதியில் நகருகிற கதை.

"சேதுமாதவன், முதலில் இந்தக் கதையைத்தான் திரைப்படமாக்க விரும்பினார். நான்தான் 'உச்சிவெயில்' கதையை அவருக்கு சிபாரிசு செய்தேன். அது, 'மறுபக்கமா'க வந்து தேசியவிருது வாங்கியது. அவர் தூண்டிவிட்ட யோசனைதான் இப்போது இது டி.வி. தொடராகிறது" என்றார் இ.பா.

ரவிராகவேந்திரா, பூ விலங்கு மோகன் என்ற வழக்கமான டி.வி. நடிகர்கள்தான் என்றாலும் இது வழக்கமான கதை இல்லை என்றபடியால் வழக்கம் போல் போரடிக்காது! ●

— யுகாந்தன்

## 5

சரஸ்வதி அத்தை நடை வாசலில் பலகை வைத்துப் படுத்திருந்தாள். வாசல் கதவு திறந்திருந்தது. ஜிலுஜிலுவென்று காற்று. மதியச் சாப்பாட்டை ஒழித்தவுடன் அவளுக்குச் சிறிது கட்டையைச் சாய்க்க வேண்டும். பக்கத்தில் செவ்வந்தி. இடதுகாலை மடித்து, வலது காலை நீட்டி விளையாட்டில் உட்கார்ந்திருந்தாள். தட்டாங்கல் விளையாட்டு. கூழாங்கற்களை இறைத்தாள். ஒவ்வொன்றாய்த் தூக்கிப் பிடித்தாள். ஒன்றை மேலே தூக்கிப் போட்டு, அது இறங்குவதற்குள் தரையில் இருப்பதை வாரி எடுத்தாள். பின் மற்றொன்றைத் தூக்கிப் போட்டாள். ஒரு கைதான் இதில் ஈடுபட்டது. மெல்ல இடது கையையும் விளையாட்டில் இறக்கினாள். வேகம் பிடித்தது. கற்கள் மேலே எழும்புவதும், இறங்குவதுமாய் வேகம். இந்த வேகத்திலும் ஒவ்வொரு முறையும் உள்ளங்கையால் தரையைச் செல்லமாய் ஒரு தட்டு. அந்தத் தட்டில் அவள் வளையல்கள் அதிர்ந்தன.

விளையாட்டு வேகம் பிடித்தது. அவள் விழிகள் மேலும் கீழுமாய்ப் பாய்ந்தன. அந்த விளையாட்டின் வேகத்தைவிட அவள் முக அபிநயங்கள் அற்புதம். எத்தனை பாவங்கள். அந்த பாவங்களை மாற்றுகிற வேகம். சட்டென்று ஆட்டத்தை நிறுத்தினாள். கால் மயக்கத்தில் படுத்துக்கிடந்த அத்தையின் கையைத் தொட்டு உலுக்கினாள்.

"அத்தை..."

"என்னம்மா..."

"வந்திருக்காங்க..."

"யாரு..."

"வடக்குத் தெருக் காரங்க..."

"வடக்குத் தெருவா?"

''தோ வந்தாச்சு''



என்று உதறி எழுந்தாள் செவ்வந்தி. கூழாங்கற்கள் சிதறின.

வந்தவர்கள் நடைவாசலில் செருப்பை உதறிக் கொண்டிருந்தனர். நான்கைந்து பேர்கள். ஒருவன் சாக்குப்பை வைத்திருந்தான். ஒருவன் நாற்பது பக்க நோட்டைச் சுருட்டி வைத்திருந்தான். உறங்காப்புலி தேவர்தான் முன்னாடி வந்தார். தேவர் நல்ல உசரம். பலகை மாதிரிப் படர்ந்த மார்பு. திரள் திரளாய் சதை. கை, கால், மார்பு



என்று எல்லா இடத்திலும் சதை எழும்பி நின்றது. படர்ந்த முகம். அவருக்குத் தொழில் மாட்டுத் தரகு. காய்கறித் தரகு. அவரின் ஓங்குதாங்கான உருவமும் மிரட்டுகின்ற குரலும்தான் அவரை ஊர்க் காரியத்திற்கெல்லாம் முன்னாடி பிடித்து இழுத்துப் போட்டு விடுகிறது.

"ஆச்சி..."

"தோ வர்றேன்" என்று அத்தை எழுந்தாள். கலைந்த தலையை உதறி முடித்தாள்.

"கூட்டம் சொல்ல வந்திருக்கோம்."

"வாங்க... வாங்க..."

"இன்னைக்கு ராவுலெ கூட்டம். ஊர் கூட்டம். வடக்குத் தெரு சாவடியிலே கூடுது. எங்க, ஐயா இல்லைங்களா?"

"வயலுக்குப் போயிருக்காங்க."

"தைப்பூசம் வர்றது. வர்ற விசாலக் கிழமை. கருளத்தீர்த்தம் போவணும். இந்த வாட்டி எல்லா ஜாதி சனமும் ஒன்ணா வண்டிகட்டிப் போகலாம்னு பேச்சு. எதுக்குத் தனித்தனியாய்ப் போய் உலை வைப்பானே?"

"வாஸ்தவம்தான்."

"ஆச்சிக்கு எத்தனை தலைக்கட்டு?"

"ஒன்னுதேன். இது என்ன புதுசாக் கேள்வி?"

"தம்பி இருக்காள்ள..."

"அவருக்கு இன்னும் கல்யாணம் ஆவலை தேவரே. ஆகட்டும். இப்பத்தேன் படிச்சு முடிச்சிருக்காரு" என்று கூட வந்த ஒருவன் பதில் சொன்னான்.

"தீர்த்தத்துக்குச் சின்னய்யாவையும் கூட்டிட்டு வாங்க. அந்தக் கடவுள் கண் திறக்கட்டும்." அத்தைக்கு உதட்டில் சிரிப்பு சுழியிட்டது.

"அரிசியா... நெல்லா?"

"அரிசின்னா ஒரு படி. நெல்லுன்னா ஒரு மரக்கால். கொடுங்க உங்க பிரியப்படி கொடுங்க."

"ஆச்சிகிட்ட பச்சரிசி வாங்குங்க. பொங்கலுக்கு வெச்சிக்கிடலாம். சைவ ஆளுங்க கிட்டத்தேன் பச்சரிசி வாங்கணும்..."

"ஆச்சி நம்ம மறக்காமலை சொல்றதைக் கேட்டீங்களா?" என்று கூறிவிட்டு ஒரு சிரிப்புச் சிரித்தார் உறங்காப்புலி. அந்தச் சிரிப்பில் அவரின் மீசை சிதறியது . அதை அவர் இடதுகையால் ஒழுங்கு பண்ணிக் கொண்டார்.

"பச்சரிசி வேணும்னாலும் தர்றேன். ஒரு படி தரட்டுமா?"

"நல்ல மனசு. தாங்க ஆச்சி."

படம்: யோகா

சரஸ்வதி அத்தை விறுவிறுவென்று வீட்டிற்குள் போனாள். பொங்கப் பொங்க ஒரு படி அரிசியை அளந்து எடுத்து வந்தாள். அதை ஒரு மஞ்சள் பையில் போட்டு ஒரு சணற் கயிற்றை உருவி எடுத்து அதன் வாயை இறுகக் கட்டிக் கொடுத்தாள். மற்றொரு படி அரிசி அளந்தாள். அது புழுங்கல். அதைத் தனியாகக் கொடுத்தாள். உறங்காப் புலித் தேவர் முதுகை வளைத்து வாங்கிக் கொண்டார்.

"அப்ப, நாங்க கிளம்பட்டுமா?"

"இதோ, மோர் கலக்கித் தர்றேன்."

"வர்றோம் ஆச்சி. இன்னும் நாலு தெரு போவணும்."

"அதான். மோர் தர்றேங்கிறேன்."

"அப்பச் சரி..." என்று வாசல்படி, நடை வாசல் என்று ஆளுக்கு ஒரு பக்கம் உட்கார்ந்து விட்டனர்.

"இந்த சின்ன ஆச்சி யாரு?" என்று உறங்காப்புலித் தேவர் செவ்வந்தியைப் பார்த்தார்.

"ஆப்பக்கார அம்மா மகள்" என்றான் ஒருவன்.

"ஆப்பக்கார அம்மாவா?"

"அதான் தேவரே, நம்ம வண்டிச் சுப்பையா மகன்."

"பிள்ளைமாருங்கதானே?"

"இல்லை. பண்டாரம். பூக்கட்டுறவங்க..."

"பெரிய ஆச்சி கூடவே இருக்கவும் நான் பிள்ளைமாருங்கன்னுலெ நெனச்சேன்" என்று ஒரு குரல் நடை வாசலில் இருந்து வந்தது.



"பையன் பெயிலாகிட்டான்னு சொல்றதைக் கூட அவர் அரசியல் பாணியிலே பேசி சமாளிக்கிறாரு!"

"எப்படி?"

"அதே வகுப்பை என் பையன் தக்க வைத்துக் கொண்டான்னு சொல்றார்!"

— உடுமலை பொன்னுசாமி

"நீ எந்த ஊர்லெப்பா இருக்க?" என்று ஒரு எதிர்குரல்.

உறங்காப்புலித் தேவர் செவ்வந்தியை ஒருதரம் பார்த்தார். பின் தன்னோடு வந்திருந்தவர்களை ஒரு தரம் பார்த்தார். 'இந்த ஆச்சியை, ஐயர்னு சொன்னாக்கூட எவனும் நம்பிப் போடுவான்" என்று கூறிவிட்டு, மீண்டும் செவ்வந்தியைப் பார்த்தார். அந்தப் பார்வையில் பெருமிதம் ஒழுகிற்று. செவ்வந்தி முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள். "என்ன பரிகாசம் பண்ணுறீர்களா?" என்று திருப்பிக் கேட்க வேண்டும் போலிருந்தது. ஆனால் கேட்காமல் பார்வையைத் திருப்பிக் கொண்டாள்.

உறங்காப்புலித் தேவர்தான் என்றில்லை. பலரும் இப்படித்தான் தடுமாறி விடுவார்கள். பார்த்த மாத்திரத்தில் ஏதோ பாடம் பண்ணிக் கொள்கிறார்கள். 'அத்தை... அத்தை' என்று சரஸ்வதியைச் சுற்றிச் சுற்றி வருவது பார்த்து, ஒரு தீர்மானத்திற்கு வந்து விடுகிறார்கள். அத்தை என்றால் ரத்த உறவு இல்லை. பழகிய உறவு. பழகிப் பழகி உறவுகளைப் பளபளப்பாகத் தீட்டி வைத்திருக்கிறார்கள். பிரியங்களைப் பிழிந்தெடுத்து உறவுக்கு உரம் போட்டு விடுகிறார்கள். அதுதான் இப்படி உயிரோடு எழும்பி நிற்கிறது.

அந்த ஊரில் இப்படி ஒரு வழக்கம். நாடார், செட்டியார், பிள்ளை, பண்டாரம், தேவர் என்று எல்லாச் சாதியும் ஏதாவது ஓர் உறவில் ஒன்றுக்கொன்று ஒட்டிக் கொண்டுதான் நிற்கும். இதில் அவர்களுக்கு ஓர் இன்பம். கேலிக்கும் கிண்டலுக்குமாவது இந்த உறவு முறைகள் அவர்களுக்குத் தேவை. அப்படியே பார்த்துப் பார்த்து சொல்லி ரொம்ப நாளாய் அது அப்படியே நின்று விட்டது. இதுதான் உறங்காப்புலித் தேவருக்குச் சிரமம். சட்டென்று பிரித்துப் பார்ப்பதில் சிரமம்.

"என்ன தேவரே, அசலூர் ஆள் மாதிரிப் பேசுதீர்?"

"என் வயசென்ன தெரியுமா? இப்பவே எண்பதை முடிச்சுட்டேன். எனக்கு இப்பத்தேன் காலம் திரும்புதாக்கும். போடா போ. கோட்டிப் பயலே! என் வயசுக்கெல்லாம் நீ உன் அப்பன் பேரையே மறந்திடுவே..." என்று இடி இடித்தாற்போல் ஒரு சிரிப்புச் சிரித்தார்.

அத்தை எல்லோருக்கும் மோர் கொடுத்தாள். தலையை உயர்த்தி கடக்... கடக் என்று குடித்தனர். அந்த வேகத்தில் அவர்களின் தாகம் தெரிந்தது.

"வர்றோம் ஆச்சி. இந்த வாட்டி, நம்ம

சின்னய்யாவையும் தீர்த்தத்திற்கு கூப்பிட்டு வாங்க. மறந்துடாதீங்க."

"வர்றோம்."

சரஸ்வதி அத்தையும் செவ்வந்தியும் வாசலைப் பார்த்தனர். அவர்கள் அடுத்த வீட்டிற்குள் சென்றனர்.

தீர்த்தத்திற்கு வண்டி தயாராகி விட் டது. மொத்தம் ஆறு வண்டிகள். எல்லாம் கூட்டு வண்டிகள். நாலு மணிக்கெல்லாம் வண்டிகள் ஜோடணையாய் நின்றன. செவ்வந்தியின் அப்பா வண்டியின் அலங்காரம் தான் தூக்கியது. காலையில் இருந்தே அவருக்கு ஒரு வதை. ஏதோ தவிக்கிறாற் போல் ஒரு வதை. சந்தோஷ வதை. தன் சந்தோஷத்தையும், தவிப்பையும் வண்ணமாய்க் குழைத்தெடுத்தார். அந்த வண்டிக்கு ஏதோ உருவேற்றிவிட வேண்டும் என்ற வெறி அவரைப் பிடித்துக் கொண்டது. வண்டிக் கூடு முழுக்கச் சரம் சரமாய் பூ. வண்டியின் சக்கரங்களுக்கு ஒரு வண்ணம். மாட்டுக் கொம்புகளைச் சீவி அதற்கும் ஒரு வண்ணம். மாடுகளுக்குச் சலங்கை. வண்டிக்குள் வைக்கோல். அதை அடித்து அடித்து அமுக்கி, மெத்தை மாதிரிப் பண்ணி விட்டார். மேலே சலவை செய்த ஜமுக்காளம். அத்தனையும் அழகின் மிதப்பு!

முதல் வண்டியில் பாத்திர பண்டங்கள், சமையல் சாமான்கள் என்று ஏற்றினார்கள். இரண்டாவது வண்டியில் காபி ஹோட்டல் முத்துப்பிள்ளை, சாவடிச் செட்டியார், குத்தாலிங்க நாடார், தரகர் பரமு என்று முக்கியஸ்தர்கள் கூட்டம். அடுத்த வண்டியில் பெண்கள். செவ்வந்தியும் அதில்தான் போய் ஏறிக் கொண்டாள். அடுத்து செவ்வந்தியின் அப்பா வண்டி. எல்லோரும் சக்திவேலை அதில்தான் போய் ஏறச் சொன்னார்கள். கூடவே இளைஞர் கூட்டம். ராசு வாத்தியாரும் அதில்தான் ஏறிக் கொண்டார். சக்திவேலின் அப்பா கடைசி வண்டியில் போய் ஏறிக் கொண்டார். உறங்காப்புலித் தேவரும் அதில்தான் போய் ஏறிக் கொண்டார்.

"என்ன கிளம்பலாமா?" காபி ஹோட்டல் முத்துப்பிள்ளை உரக்கக் கேட்டார்.

"ஐயா உத்தரவு."

''உறங்காப்புலித் தேவர் எங்கே? யார் சகுனம் பார்க்கிறது?"

"தேவர், கடைசி வண்டியில் இருக்கார்."

"சாமியாடி எந்த வண்டி?"

''தோ வர்றேன்'' என்று ஒரு உருவம் தாவிக்குதித்தது.

"என்ன கிளம்பலாமா?"



''நம்ம தலைவருக்கு தன்னம்பிக்கை கொஞ்சம் ஓவரா போயிடுச்சுன்னு தோணுது...''

''எப்படி சொல்றே?''

''பில் கிளிண்டன் மேலயும் வழக்கு இருக்கு. அவரையும் டிஸ்மிஸ் பண்ணணும்னு, பிரதமருக்கு அறிக்கை விட்டிருக்காரே!''

— பாம்பன் செ.சல்மான்

கரகரவென்று காலை இழுத்துக் கொண்டே தெருக்கோடி வரை ஒரு ஓட்டம். கண்ணில் ஏதேனும் கெட்ட சகுனம் இடறி விடப்படாது. ஒரு வீட்டின் வாசலில் கிழவி ஒருத்தி தலையை விரித்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளை வீட்டிற்குள் விரட்டி விட்டான். திரும்பவும் ஓடி வந்து முதல் வண்டியின் முன்னால் நின்றான். வானம் பார்த்துக் கை குவித்தான். சிறிது நேரம் ஏதோ முணங்கினான். இடுப்பில் முடிந்து வைத்திருக்கும் திருநீறை அள்ளி உள்ளங் கையில் வைத்துப் பொத்திக் கண் மூடினான். அவன் உடல் வெடவெட வென்று நடுங்கிற்று. திருநீறை மாட்டின் மீது வீசி எறிந்தான். மாடுகள் மிரள, வண்டி லேசாய் ஆடிற்று! ஓட்டமும் நடையுமாய் ஒவ்வொரு வண்டிக்கும் முன்னாலும் போய் நின்றான். அங்கும் இதே சாஸ்திரம்தான். அந்தி கருக்கவும் வண்டி கிளம்பிற்று! ஒன்றன்பின் ஒன்றாய் வண்டிகள் ஊர்ந்தன.

சக்திவேல் வண்டியின் பின்புறம் உட்கார்ந்து இருந்தான். அவனுக்கு முன்னால் ஒரு வண்டி. வடக்குத் தெருக்காரர்கள். ஒரே கூச்சலும் கும்மாளமும்தான். அதற்கு முன்னால் ஒரு வண்டி. அதில்தான் செவ்வந்தி. அவளும் வண்டிக்குப் பின்புறம்தான் உட்கார்ந்து இருக்கிறாள்.

பாளையம் ஆற்றுப் பாலம் ஏறி இறங்கவும், சக்திவேல் வண்டி முந்தியது. வடக்குத் தெருக்காரர்கள் வண்டி எப்படியோ பிந்திற்று. ஒருவரை ஒருவர் பார்த்துக் கொள்ள நல்ல தோது. இரண்டு வண்டிக்கும் இடைவெளி பத்தடிகூட இருக்காது.



போலீஸ் தேர்வுக்கு வந்தவரிடம்: ''திருடன் மேல உனக்கு உள்ள கோபத்தை எப்படி வெளிப்படுத்துவே, சொல்லு?''

''ஹி...ஹி.. மாமூல் தொகையை உயர்த்திக் கேட்டுத்தான்!''

-காழி ஆர். சீதாராமன்

**ந**டு நிசி -

நிலவு ஒழுகுகிறது. மூன்றாம் பிறை நிலவு. பட்டென்று முகத்தில் அடிக்காமலும் சட்டென்று மூடாமலும் பாலாய் ஒழுகிக் கொண்டிருக்கிறது. வண்டி கம்பம் தாண்டிற்று. தார் ரோட்டில் சிதறிக் கிடக்கும் சிறு மணலை அரைத்துக் கொண்டே ஊர்கிறது. ஆனை மலையன் பட்டி, ராயப்பன் பட்டி, நாராயணத் தேவன்பட்டி, காமயகவுண்டன் பட்டி என்று பட்டி பட்டியாய் ஊர்ந்து கொண்டிருக்கிறது. எல்லாம் தூங்கி விட்டனர். கால், அரை, முக்கால் தூக்கமெல்லாம் முழுசாய் ஆகிவிட்டது. மாடுகளுக்கும்கூட தூக்க நடைதான். வண்டியின் ஆட்டத்திற்கு ஏற்ப ஒவ்வொரு தலையும் ஆடிக் கொண்டிருந்தன. மரங்கள் காற்றில் ஆடி ஆடித் தூங்கி விழுந்தன.

சக்திவேல் செவ்வந்தியைப் பார்த்தான். பளீரென்று ஒரு மின்னல் சொடுக்கிற்று! அவளும் அவனையேதான் பார்த்துக் கொண்டிருந்தாள். அவன் பார்வை அவளைத் துரத்திற்று. அவளால் அந்த ஒளியைத் தடுக்க முடியவில்லை.

எங்கோ தூரத்தில் லாரி ஹாரன் ஓசை. சாலையின் இரண்டு பக்கங்களிலும் பச்சைப் பசேல்! இருட்டில் நிறம் தெரியவில்லை. வீசுகின்ற காற்றில் பச்சை மணம். வயல் காட்டிற்குள் 'பளக்... பளக்' என்று தவளைகள் தாவுகின்ற சப்தம். சில் வண்டின் இரைச்சல்! மேற்குப் பருவக் காற்று. பட படவென்று பற்களைப் பதரடிக்கின்ற காற்று. அதை ரசித்தான். மாட்டின் மணி ஓசை. தூரவே துரத்திக் கொண்டு வரும் நிலவு. ஒவ்வொன்றாய் பார்த்துக் கொண்டே வந்தான்.

**ச**ட்டென்று இரண்டு வண்டிகளுக்குமான இடைவெளி பெரியதாகிக் கொண்டே போனது. செவ்வந்தியின் முகம் குளிர்ந்தது. சில்லிட்ட காற்றுப் பட்டுப் பட்டுக் குளிர்ந்தது. செவ்வந்தி அடிக்கொரு தரம் உள்ளங் கையை உரசி கன்னத்தில் வைத்துப் பொத்திக் கொண்டாள். பளீரென்று ஒரு ஒளி சிமிட்டிற்று. ஒரு வாகனம் கடந்தது. அந்த ஒளிச் சிமிட்டலில் அவளைக் கூர்ந்து பார்த்தான். உதட்டில் ஒரு சிரிப்பு ஒட்டியிருந்தது. புன்சிரிப்பு. அவன் அந்தச் சிரிப்பைக் கவ்விக் கொண்டான். அந்தச் சிரிப்பு மெல்ல விரிந்தது!

வண்டி ஒரு சிறு கல்லில் ஏறி இறங்கிற்று! வண்டி குலுங்கியது. அதில் ராசு வாத்தியார் தலை மோதியது. சட்டென்று விழித்துக் கொண்டார். விழித்த மாத்திரத்தில் சக்திவேல் விழித்திருப்பதைப் பார்த்து விட்டார். சக்திவேலுக்குப் படபடவென்று துடித்துக் கொண்டிருந்தது. இப்படிப் படபடவென்று துடித்துக் கொண்டிருந்தால் உடம்பு கூட கெட்டுப் போகும். இப்படித் தளதளவென்று ரத்தம் கொதிக்க அதைச் சுமப்பானேன்? உள்ளங்கையில் வைத்துப் பொத்திப் பொத்தி, தனக்குத்தானே பார்த்துப் பார்த்துப் பேசிப் பேசி... ச்சை! என்ன கோழைத்தனம் இது!

ஒவ்வொரு கணமும் உள்ளே விழிப்பு வருகிறது. அள்ளி எடுக்கப் போகிறோம் என்ற ஆவல் மிதப்பாகவேதான் இருக்கிறதே தவிர, அள்ளி எடுத்தபாடில்லை. நீயும் தரத் தான் தவிக்கிறாய் என்பதுகூடத் தெரியும். நானும் வாங்கிக் கொள்ளும் பேராசையோடு தான் உன்னை நெருங்குகிறேன். சட்டென்று ஏதோ ஒன்று என் நாக்கைச் சுட்டு விடுகிறது. கடைசியில் கையாலாகாத குறும்புச் சிரிப்புதான் மிஞ்சுகிறது.

சக்திவேலுக்கு அந்த அசதியிலே கண் சொருகியது. திமுர் என்று மண்டைக்குள் ஒரு சப்தம். தடதடவென்று ஒரு சப்தம். தலை தெறிக்க ஓடுகின்ற சப்தம். எத்தனை தூரம் ஓடினாலும் சரி, இன்றைக்குப் பிடித்து விடுவது என்று இவனும் ஓடினான். அந்த வெளியில் ஒருவரும் இல்லை. ஓடுவது யார் என்று தெரியவில்லை. மிதக்கவும் முடியவில்லை. அது என்ன ஓட்டம்! எங்கோ தோட்டத்து வழியாக ஓடி அப்படியே மறைந்து விட்டது. ராசு வாத்தியார் சக்தி வேலை ஒரு உலுக்கு உலுக்கினார். சக்தி திடுக்கிட்டு விழித்தான். அவன் உடல் தெப்பமாய் நனைந்திருந்தது.

(தொடரும்)




# வட்டமேஜை

## வனதேவதை வாழ்த்துவாள்!

✉ 'தொலைக் காட்சிப் பெட்டிகளில் மது பான விளம்பரங்களை வெளியிட்டு சமுதாயத்தைச் சீர்குலைப்பது - நமக்கு நாமே வெடிகுண்டு வைத்துக் கொள்வது' என்ற தலையங்க வரிகள் நச். இளைய தலைமுறைக்காகச் சிந்திக்கும் அமைச்சர் சுஷ்மா சுவராஜ் பாராட்டுக்குரியவர்.

சுப்பராயர்புரம், ஜெயத்திருமகன்.

✉ 'முட்டுக்கட்டை போடும் வோட்டுக்கள்' துணைத் தலையங்கம் கண்டேன். மிகச் சிறப்பாக இருந்தது. நீண்ட கால நோக்குடன் எதையும் செய்யாததால்தான் தரமான கல்வியை நம்மால் தர முடியவில்லை. ஆட்சிக்கு வரும் எவரும் செய்வதாகவும் காணோம்!

தக்கோலம், அ. முஸ்தபா.

✉ 'மேடம் 356' - 'ஜெ'வின் அட்டைப் படமும், அதையொட்டிய ஆழமான, விளக்கமான கட்டுரையும் தமிழகத்தில் நிலவும் அரசியலை நன்கு துலக்கிக் காட்டுவதாக உள்ளது. பாராட்டலாம்.

வரட்டணப்பள்ளி, வி.எஸ். கிருஷ்ணமூர்த்தி.

✉ பத்தாவோடு கூடிய ஸ்டில் அவரது தற்போதைய நடவடிக்கையை முகத்தில் காட்டியது... அதாங்க ஜெவின் அட்டைப்படம்தான்!

தூத்துக்குடி, சிவராமசுப்பிரமணியன்.

✉ அடேயப்பா! என்ன பொருத்தம் 'மேடம் 356' என்ற தலைப்பு! இதுதான் கல்கி முத்திரை!

சென்னை - 78, தி. சுபாகர்.

✉ சென்னை நகர மரங்களை மனிதர்களிடமிருந்து காப்பாற்ற வேண்டிய அவசியத்தை மேயருக்குச் சுட்டிக் காட்டிய கல்கியை வனதேவதை வாழ்த்துவாள்.

கோவை-14, ஏ.எஸ். ராமசாமி.

✉ தினந்தோறும் பத்திரிகைகள், வானொலி, தொலைக்காட்சி போன்றவற்றில் கும்பமேளா, கும்பமேளா என்று செய்தி வருகின்றதே. அதன் முக்கியத்துவம் என்ன என்பது இங்கே நிறையப் பேருக்குத் தெரியாது என்பது உண்மை. அந்தக் குறையைப் போக்கி விட்டது கல்கி.

லால்குடி, எம். இராஜேந்திரன்.

✉ 'முன்னாள் முதல்வர்' சிறுகதை பசுத்தோல் போர்த்திய புலிகளான அரசியல்வாதிகளின் தன்னலப் போக்கைத் தோலுரித்துக் காட்டியது. கதை நிகழ்வுகள் சிந்திக்க வைத்தன. கன்னடத்தில் எழுதிய டிசோஸாவும் தமிழில் சுவை குன்றாமல் வழங்கிய ராம்ஜியும் பாராட்டுக்குரியவர்கள்.

வலையபட்டி, எம். பாலசுப்பிரமணியன்.

✉ 'இந்த வார இளைஞர்' பூபாலன் எதிர்கால இந்தியாவின் நம்பிக்கை நட்சத்திரமாக - இல்லை, இல்லை - நம்பிக்கைச் சூரியனாகத் திகழ்வார்.

தலைஞாயிறு, எஸ். ராஜகணேஷ்.

✉ ஏதோ கடமைக்காக விமர்சனம் எழுதி விட்டுப் போகாமல் நடுநிலையுடன் 'காதலா காதலா'வுக்கு விமர்சனம் எழுதியவிதம் 'நச்' சென்று இருந்தது.

விஜயவாடா-3, தென்னாலிராஜன்.

✉ யோகி எழுதிய 'இன்றும் நேற்றும் தான்' சிறுகதை படித்தேன். பாவம் சித்ரா! அவளைப் போல் எத்தனை சகோதரிகள் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்களோ?

மணியக்காரன்பாளையம், ஏ.ஜி. கல்யாணசுந்தரம்.

✉ இந்திய கிரிக்கெட் அணியின் இளம் சுழற்பந்து வீச்சாளர் ஹர்பிஜன் சிங்கின் பேட்டி இனிமையாக இருந்தது. அவரது பிரார்த்தனை வீண் போகாது. அவரது வேண்டுகோளை நாமும் ஏற்போம்!

திருமானூர், ஆர். மார்ட்டின்.

● ஜி. பாரதி, கோவை - 4.

? திரையுலகம், பத்திரிகையுலகம், அரசியல் உலகம்... இவற்றில் சிறந்ததாகவும் சக்தி வாய்ந்ததாகவும் எதைக் கருதுகிறீர்கள்...?

! தரமான பத்திரிகை உலகம் மற்ற இரண்டையும் விமர்சிக்கிறது; பாராட்டுகிறது; தவறுகளைக் கண்டிக்கிறது; ஊழல்களை அம்பலப்படுத்துகிறது. மற்ற இரண்டும் நடுநிலையான பத்திரிகை உலகுக்கு மரியாதை செலுத்துகின்றன. அப்புறம் என்ன...? நீங்களே முடிவு செய்து கொள்ளலாமே!

● கே. பெருமாள், கூனியூர்.

? ஜெயலலிதா கூட்டணி நீடிக்குமா?

! சு. சுவாமி நம்பர் ஒன் காஷுவாலிடி... மற்றவர்கள் என்ன ஆவார்கள் என்பது பி.ஜே.பியின் சாமர்த்தியத்தைப் பொருத்திருக்கிறது.

# ஜெயலலிதா கூட்டணி நீடிக்குமா?

● ஆ. கமல்ராஜ், தாரமங்கலம்.

? மத்திய அமைச்சர்கள் (அ.தி.மு.க.) தங்கள் இலாகா வேலைகளைச் செய்வதைக் காட்டிலும் தி.மு.க. ஆட்சிக் கலைப்பைப் பற்றிப் பேசுவதில்தானே அதிகக் கவனம் செலுத்துகிறார்கள்?

! இலாகா வேலைகளைச் செய்வதற்காகத்தான் அவர்களை ஜெ. அமைச்சராக்கினார் என்று நீங்கள் நினைத்துக் கொண்டிருந்தால் அதற்கு அவர்கள் என்ன செய்ய முடியும்!

● புளியரை கணேசன், சென்னை - 30.

? 'பல ஆண்டுகள் சிறையிலிருந்த நெல்சன் மண்டேலா நோபல் பரிசை வெல்ல முடியும் என்றால், நானும் அதற்குத் தகுதியானவளே' என்று பூலன் தேவி கூறியிருக்கிறாரே?

! நோபல் பரிசுக்குத் தாம் தகுதியானவர் என்று மண்டேலா அறிக்கை விட்டதாகத் தெரியவில்லையே!

● மலர் சூர்யா, வில்லியனூர்.

? ஜெயலலிதாவை விட மோசமான அரசியல்வாதி இந்தியாவில் யாராவது இருக்கிறார்களா சார்...?

! எதிலும் நெம்பர் ஒன் என்பதுதான் அம்மாவின் இலட்சியம்!

● மு. இரவிச்சந்திரன், சேலம் - 9.

? மதுரை துணை மேயர் மிசா பாண்டியன் நீக்கம் குறித்து...?

! இன்னும் பல மிசா பாண்டியர்கள் தி.மு.க.வில் உள்ளனர் என்று வை.கோ எச்சரிக்கை செய்திருக்கிறார்.

● கே. கே. வெங்கடேசன், சென்னை - 58.

? சோம்பலைப் போக்கிக் கொள்ள ஒரு நல்ல வழி சொல்லுங்களேன்?

! சென்னை குடிநீர் சப்ளை ஆகும் டெயில் எண்ட் பகுதியில் குடியேறி, தினமும் காலையில் அடி குழாயை அழுத்தி, தண்ணீர் வர வழையுங்கள்... ஒரு போர் வீரனின் சுறுசுறுப்பு ஆக்கிரமிக்கும் உங்களை!

● ஜே. ஜெசிந்தா, தூத்துக்குடி.

? அரசியல்வாதிகளிடம் மனச்சாட்சி என்பதே இல்லாமலிருக்கக் காரணம் என்ன?

! சாட்சிகளால் ஆபத்து வரும் என்பது அவர்களுக்குத் தெரியாதா என்ன...?!

● வசந்தாகாந்த், கருப்பம்புலம்.

? மீண்டும் மத்தியக் குழு வர வேண்டும் என்று ஜெயலலிதா கோருவதில் உள் நோக்கம் ஏதாவது உண்டா...?

! உள் நோக்கமாவது, வெளி நோக்கமாவது! ஒரே நோக்கம்தான் - கலைஞரைக் கவிழ்ப்பது!

● ஏ. ஆர். முத்தமிழன், திருவாரூர் - 51.

? அறிவுஜீவிகள், சிந்தனையாளர்கள்... சினிமா, அரசியல் என்ற ராட்சதத் தொடர்புகள் இன்றிப் பிரபலமடைவதில்லையே...?

! பிரபலமாவதற்கு விளம்பரம் தேவைதான். ❑


• நெம்பர் ஒன்!


• முதல் காஷுவாலிடி!


• தகுதி அறிக்கை!

• நட்சத்திர அபத்தம்!

ஆனால் சொந்தச் சரக்கு இல்லாவிட்டால் விரைவிலேயே விளம்பரச் சாயம் வெளுத்துப் போகும்.

● யமுனா ரெங்கநாதன், சென்னை – 91.

*? அவ்வை சண்முகியை வாரியதைப் போலவே 'காதலா காதலா'வையும் கல்கி செமத்தியாக வாரியுள்ளதே..? கமல் மீது உங்களுக்கு அப்படி என்ன சார் கோபம்?*

! கமல் மீது ஒரு கோபமுமில்லை. அவர் செய்கிற அபத்தங்களைத்தான் சாடுகிறோம். தரமான கலைஞர் என்ற பெயரைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறோம்.

• நீக்கமும்...





• எச்சரிக்கையும்!

● கே. வி. சூர்யா, நல்லத்துக்குடி.

*? உறவில் வரும் அன்பு, நட்பில் வரும் அன்பு – சக்திவாய்ந்தது எது?*

! மெய்யான அன்பாயின், உறவு – நட்பு போன்ற குறுகிய எல்லைகளைக் கடந்து, நிபந்தனைகளற்றுப் பாயும்... அதன் சக்திக்கு ஈடுஇணையே கிடையாது.

● மணிமதியண்ணன், சுப்பராயர்புரம்.

*? 'கலைக்க வேண்டும், கலைக்க வேண்டும்!' என்று கூச்சலிட்டு, மத்திய மாநில அரசுகளை ஆக்கபூர்வமான பணிகளில் ஈடுபட முடியாமல் தடுத்துக் கொண்டிருக்கும் ஜெயலலிதா மீது தேசத் துரோகக் குற்றம் சுமத்தி வழக்குத் தொடர முடியாதா?*

! அப்படியெல்லாம் செய்ய முடியாது! அப

• தவறான ஒப்பீடு!



படியே செய்ய முடிந்தாலும் தடைகோரி படிப்படியாக மேல் முறையீடு செய்து காலம் கடத்த ஜெக்குத் தெரியாதா?!

● சிவன்மகன், தஞ்சை.

*? மொழி வெறி, இன வெறி, சாதி வெறி, மதவெறி, பிராந்திய வெறி – இவற்றில் மிகவும் மோசமானது எது...?*

! அணு ஆயுதங்கள், ரசாயன ஆயுதங்கள், உயிரியல் (Biological weapons) ஆயுதங்கள், இவற்றைத் தாங்கி வரும் ஏவுகணைகள்... இவற்றில் எது மிகவும் மோசம்?!

● எம். இரத்தினவேல், பொன்மலை.

*? லஞ்சத்தை எதிர்த்து கல்கத்தாவில் இளம் பொறியாளர் ஒருவர் தற்கொலை செய்து கொண்டது குறித்து...?*

! கோழைத்தனம்! அல்லது அறியாமை! அரசியல் வெறியர்கள் தீக்குளிப்பது போல்தான் இது! உலகம் தன் பாதையில் பாதிப்பின்றித் தொடரும். நின்று போராடுகிறவர்களை மட்டுமே அது நிமிர்ந்து பார்க்கும்.

● அ. முஸ்தபா, தக்கோலம்.

*? மனிதனை அதிகம் வாட்டுவது எது...?*

! இப்போதைக்கு சகிக்க முடியாத சென்னை வெயில்!

● ஜி. சுரேஷ், கோவை – 8.

*? விசு – சுப்ரமண்யம் சுவாமி – ஒப்பிடுக.*

! விவகாரமாகப் பேசக்கூடியவர்கள் என்பதற்காக இப்படியா இரண்டு பேரை ஒப்பிடுவது? பாவம் விசு...!

**❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :**
**ஏ. ஆர். முத்தமிழன்,**
**பவித்திரமாணிக்கம்,**
**திருவாரூர் - 610 051.**




●● மத்திய அரசில் உள்ள அ.தி.மு.க. அமைச்சர்கள் எல்லோரும் இரண்டு செல்லுலார் போன் வைத்திருக்கிறார்கள். ஒன்றின் நம்பர் மட்டும் முக்கிய கட்சிக்காரர்களுக்குத் தெரியும். மற்றொன்றின் நம்பர் போயஸ் தோட்டத்துக்கு மட்டுமே தெரியுமாம். 'எந்த நேரம் அந்த 'செல்'லில் சிணுங்கல் வருமோ' என்று திக்திக்குடன் இருக்கிறார்கள். 'எங்கு' போனாலும் போயஸ் தோட்டத் தொடர்பு 'செல்'லைக் கையோடு கொண்டு போகிறார்கள்.

●● நிர்வாகம், பொது மக்கள் குறை, ஓய்வூதியம் ஆகியவற்றைக் கவனிக்கும் இணை அமைச்சரான கடம்பூர் ஜனார்த்தனம் தனித் தீவில் மாட்டிக் கொண்டது போல் தவிக்கிறாராம். இந்த இலாகாவின் இணை அமைச்சர் பிரதமரின் கீழ் செயல்பட வேண்டும். சி.பி.ஐ. உட்பட பல்வேறு துறைகளில் இருக்கும் ஐ.பி.எஸ். அதிகாரிகளின் போஸ்டிங், டிரான்ஸ்ஃபர் ஆகியன இந்த இலாகாவின் மூலம்தான் செயல்படுத்தப்படும். ஆனால் பிரதமர் அலுவலகத்தில் அரசியல் உதவியாளராக இருக்கும் பிரமோத் மகாஜன் கடம்பூரை ஓரம்கட்டி விட்டு, நேரடியாகப் பல விஷயங்களை 'டீல்' செய்கிறாராம். 'அரசின் தலையீடு இல்லாமல் சி.பி.ஐ. இயங்க வேண்டும் என்று சுப்ரீம் கோர்ட் தெரிவித்த கருத்தை அரசு ஏற்றுக் கொண்டுள்ள நிலையில், கடம்பூரார் நேரடியாக சி.பி.ஐ. இயக்குனர் அலுவலகத்தோடு தொடர்பு கொண்டு, இந்தியன் வங்கி, ஹவாலா ஊழல் வழக்கு விவகாரங்களில் 'நோட்' (Note) கேட்பது குறித்து பிரதமருக்குப் புகாராகச் சொல்லப்பட்டிருக்கிறதாம். சி.பி.ஐ.யின் தாற்காலிக இயக்குனராக நியமிக்கப்பட்டிருக்கும் திரிநாத்மிஸ்ரா நியமனத்தில் கூட கடம்பூரார் கன்ஸல்ட் செய்யப்படவில்லை என்கிறார்கள்.



• கடம்பூர் ஜனார்த் தனம்

●● காங்கிரஸிலிருந்து விலகி, மயிலாடுதுறையில் காங்கிரஸ் வேட்பாளரை எதிர்த்துப் போட்டியிட்டுத் தோற்ற மணிசங்கர் அய்யர், மீண்டும் காங்கிரஸில் சேர்ந்தவுடன், அவருக்கு சோனியா செயலாளர் பதவியை வழங்கி விட்டார். சோனியாவின் இந்தச் செய்கை குறித்து தமிழக காங்கிரஸில் வெளிப்படையாக விமர்சிக்கத் தயங்கினாலும் உள்ளுக்குள் புலம்புகிறார்கள். "இப்படிப்பட்ட கட்சி மாறி ஆட்களுக்கெல்லாம் பதவி கொடுத்தால் காங்கிரஸ் எப்படி உருப்படும்? ஏற்கெனவே தமிழக காங்கிரஸில் உள்ள குழப்பம் போதாதா, இப்போது அய்யரைச் சுற்றி மற்றொரு கோஷ்டி உருவாகிவிடும்; அவ்வளவுதான்!" என்று நம்மிடம் வருத்தப்பட்டுச் சொன்னார், ஒரு முன்னாள் எம்.பி. இதற்கிடையில், அகில இந்திய அளவில் செய்ய வேண்டிய மாற்றங்கள் முடிந்து விட்ட நிலையில், மாநில விவகாரங்களில் கவனம் செலுத்தத் துவங்கி விட்டாராம் சோனியா. தங்கபாலுவின் தலைவிதி சில நாட்களுக்குள் தெரியும் என்கிறார்கள் பிரபு கோஷ்டியினர்.

●● அமைச்சரவையில் பங்கு பெறாமல் ஒரு கமிட்மென்டோடு பா.ஜ.க.வை ஆதரித்து வரும் வை.கோவை, மிகவும் மதித்துப் பாசமழை பொழிகிறார்கள் பா.ஜ.க. தலைவர்கள். சமீபத்தில் தெற்குப் பக்கத்திலிருந்து, தீப்பெட்டித் தயாரிக்கும் சிறு தொழில் அதிபர்களை தில்லிக்கு அழைத்துச் சென்று பிரதமர் உட்பட பல முக்கிய அமைச்சர்களைப் பார்க்க ஏற்பாடு செய்தார் வை.கோ. பிரதமருடன் சந்திப்பு நடந்த போது, "வை.கோ, my old friend!" என்று கட்டிப் பிடித்துக் கொண்டாராம் பிரதமர். தீப்பெட்டித் தயாரிப்பில் உள்ள பெரிய நிறுவனமான 'விம்கோ' பற்றிப் பேச்சு வந்த போது 'விம்கோ'வை விடுங்கள்; வைகோவைப் பற்றிச் சொல்லுங்கள்!' என்று அந்த சிறு தொழில் அதிபர்களிடம் உற்சாகமாகச் சொன்னாராம் பிரதமர். இதற்கிடை



• வைகோ.

யில், எந்தக் காரணம் கொண்டும் பா.ஜ.க. அரசுக்குத் தலைவலி வர தமது கட்சி காரணமாக இருக்காது என்று பிரதமரிடம் உறுதி கொடுத்திருக்கிறார் வை.கோ. 'பம்பரம்' சின்னம் கிடைத்து கட்சி அங்கீகரிக்கப்பட்டதில் கட்சி வட்டாரத்தில் உற்சாகம் பீறிட்டுக் கொண்டிருக்கிறது. பா.ஜ.க.வை அ.தி.மு.க. கைவிட்டாலும் வை.கோ. கைவிட மாட்டார் என்றும் சொல்கிறார்கள்.

●● அல்-உம்மா தலைவர் பாஷா உட்பட முக்கியஸ்தர்கள் பலர் போலீஸ் நடவடிக்கையில் சிக்கிக் கொண்டாலும், அல்-உம்மா துணைத் தலைவர் அன்சாரி இன்னமும் பிடிபடாமல் இருக்கிறார். கோவை குண்டு வெடிப்பின் முழுப் பரிமாணங்களும் அன்சாரி பிடிபட்டால்தான் தெரியும் என்று சொல்கிறார்கள். அன்சாரி தமக்குத் தெரியாமல் பல காரியங்களில் இறங்கி விட்டதாக பாஷா சொல்கிறாராம். தீவிர வாதிகளைப் பிடிக்கும் விஷயத்தில் 'கேரள போலீஸ் இன்னமும் நல்ல முறையில் ஒத்துழைப்புத் தரலாமே' என்று நினைக்கிறார்கள் தமிழக போலீஸ் அதிகாரிகள்.

●● தில்லியில் ஜஸ்வந்த் சிங்கைப் பற்றிக் குறிப்பிடும் போது, "Minister for Jayalalitha Affairs" என்று கிண்டலாகச் சொல்கிறார்கள். சமீபத்தில் பையனூர் தோட்டத்தில் ஜெ.வுடன் பேசும் போது மிகத் தெளிவாகவே "தி.மு.க. ஆட்சிக் கலைப்பைப் பற்றி இப்போது கவனிக்க முடியாது. பாராளுமன்ற பட்ஜெட் கூட்டம் முடிந்த பிறகுதான் கவனிக்க முடியும்" என்று சொல்லி விட்டதில் ஜெ.வுக்கு வருத்தமாம். ஒருங்கிணைப்புக் குழுவில் விவாதிக்கப்பட வேண்டிய விஷயங்களை (Agenda) தமக்கு முன்கூட்டியே அனுப்பி வைக்க வேண்டும் என்றும், அந்தக் கூட்டத்தில் தம்மை யாரும் விமர்சித்துப் பேசக் கூடாது என்றும் ஜெ. சொல்லியிருக்கிறாராம். 'மாநிலங்களில் ஆட்சிக் கலைப்பு பற்றியெல்லாம் யாரும் பேசக் கூடாது' என்று பிரதமரின் வலது கரமான பிரமோத் மகாஜன் கூட்டணிக் கட்சித் தலைவர்களிடம் சொல்லி வருகிறாராம். ஜனாதிபதி வெளி நாட்டுச் சுற்றுலாவில் இருப்பதால் ஆட்சிக் கலைப்புப் பேச்சும் இப்போது சற்று அடங்கியிருக்கிறது.



●● தமிழ்நாடு முழுக்க, பெட்ரோல் பங்க், மண்ணெண்ணெய் டிப்போ, காஸ் ஏஜென்ஸி ஆகியவற்றுக்கு இந்தியன் ஆயில் விண்ணப்பங்களை வரவேற்றாலும் வரவேற்றது, வாழப்பாடியாருக்குத் தலைவலி வந்து சேர்ந்து விட்டது. மாவட்டங்களில் இருந்து தில்லிக்கும் சென்னைக்கும் படையெடுத்துக் கொண்டிருக்கிறார்கள், ராஜீவ் காங்கிரஸ்காரர்கள். வாழப்பாடியாரோடு நல்லுறவு கொண்டிருக்கும் காங்கிரஸ், த.மா.கா.வினரும் விதிவிலக்கல்ல. போதாததற்கு அ.தி.மு.க.வினரும், பா.ம.க.வினரும் 'அழுத்தத்தை'ச் சற்று அதிகமாகவே கொடுக்கின்றனர். இதுபோன்ற ஒதுக்கீடுகள் செய்வதற்கு சுப்ரீம் கோர்ட் வழிகாட்டு முறைகளைச் சொல்லியிருக்கிறது. அதுமட்டுமல்லாமல், முறையற்ற ஒதுக்கீடுகள் கோர்ட்டில் சேலஞ் செய்யப்படும். வாழப்பாடியார் எப்படிச் சமாளிக்கப் போகிறாரோ?

●● எஸ்.எஸ்.எல்.ஸி. மற்றும் மெட்ரிகுலேஷன் கேள்வித்தாள்கள் அவுட் ஆனதற்கு, கல்வி இலாகாவில் உள்ள இரண்டு அலுவலக அதிகாரிகளின் மோதலே காரணம் என்கிறார்கள். ஒருவர் காலை ஒருவர் வாரி விடும் வேலைகளில் ஒன்றுதான் இது என்கிறார்கள். ஆனால் அமைச்சர் அல்லவா சிக்கலில் மாட்டிக் கொண்டார்!

- தில்லப்பா

## வாழப்பாடிக்கு வந்த தலைவலி!

**GTT** - க்ளுகோஸ் டாலரன்ஸ் டெஸ்ட் - இதுதான் ஒருவருக்கு டயாபடிஸ் இருக்கிறதா, இல்லையா என்பதை உறுதியாக அறிவிக்கக்கூடிய பரிசோதனை. பலப்பல வருடங்களாகவே நடைமுறையில் இருந்துவரும் சோதனைதான் இது. குறைந்தது இரண்டு மணி நேரமாவது இதற்காகச் செலவழிக்க வேண்டியிருக்கும்.

எழுபத்தைந்து கிராம் க்ளுகோஸை தண்ணீரில் கரைத்து, குடிக்கச் சொல்லுவார்கள். அதற்கு ஓரிரு நிமிடங்களுக்கு முன் உங்கள் ரத்தத்திலிருந்து கொஞ்சம் எடுத்துக் கொள்வார்கள். காலையில் எதுவும் சாப்பிட்டிருக்காத நிலையில்தான் இந்தச் சோதனை செய்யப்படும்.

க்ளுகோஸ் நீரைக் குடித்த பிறகு ஒவ்வொரு அரைமணிக்கும் சிறிது ரத்தம் பரிசோதனைக்கு எடுத்துக் கொள்ளப் படும். இப்படி மொத்தம் ஐந்து முறை ரத்தத்தை கலெக்ட் செய்து கொள் வார்கள். அதாவது மொத்தம் இரண்டு மணி நேரம் தேவைப்படும் இதற்கு.









இப்படி வெவ்வேறு காலகட்டங்களில் எடுக்கப்படும் ரத்தத்தில் உள்ள சர்க்கரை (க்ளுகோஸ்) அளவைக் கண்டு பிடிப்பார்கள். வெறும் வயிற்றோடு இருக்கும்போது எடுக்கப்பட்ட ரத்தத்தில் சர்க்கரையின் அளவு 70லிருந்து 100 வரை (மில்லி கிராம் சதவீதம் என்கிற அளவில், இருக்கலாம் என்று குறிப்பிட்டிருந்தோம். நடைமுறையில் அறுபதிலிருந்து நூற்றி இருபது வரை உள்ள அளவையும் நார்மல் என்று ஒத்துக் கொள்கிறார்கள்.

க்ளுகோஸ் உட்கொண்ட பிறகு கொஞ்சம் கொஞ்சமாய் ரத்தத்தில் அதிகமாகும் சர்க்கரை அளவு,ஒரு மணி நேரமானவுடன் உச்சத்தை அடைகிறது. அப்போது 120யிலிருந்து 180 வரை சர்க்கரை அளவு காணப்படலாம். 180 ஐத் தாண்டினால் அவருக்கு சர்க்கரை வியாதி உண்டு என்று அர்த்தம்.

ரத்தத்தில் சர்க்கரை அளவு மிக உச்சமாக எவ்வளவு இருக்கிறது என்பதைத் தெரிந்து கொண்டால் மட்டும் போதாது. அந்த அதிக பட்ச அளவு, பிறகு எந்த லெவலுக்குக் குறைகிறது, எவ்வளவு நேரத்தில் குறைகிறது என்பதும் மிக முக்கியமானதுதான். அதனால்தான் க்ளுகோஸ் சாப்பிட்ட ஒரு மணி நேரத்துக் குப் பிறகும் இரண்டுமுறை ரத்த சாம்பிள்கள் எடுக்கப்படுகின்றன.

**அட இதுல இவ்ளோ விஷயமிருக்கா?**

இந்தச் சோதனையில் கடைசி தடவையாக எடுக்கப்படும் ரத்தத்தில் சர்க்கரையின் அளவு சுமார் 120 வரை இருப்பதில் தவறில்லை.

இப்படி அரை மணிக்கு ஒருமுறை என்று ஐந்து தடவைகள் கணக்கிடப்படும் ரத்த சர்க்கரை அளவை கிராஃப் வடிவில் வரைந்து பார்க்கும்போது டாக்டருக்கு மேலும்

தெளிவு பிறக்கும்.

இன்னொரு முக்கியமான நடைமுறையும் இந்தப் பரிசோதனையில் உண்டு. ஒவ்வொரு முறை ரத்தத்தை எடுத்த பின்னும், உங்கள் யூரின் சாம்பிளையும் கொண்டு வரச் சொல்வார்கள். இப்படி அரைமணிக்கு ஒருமுறை என்று உங்கள் சிறுநீரும் கலெக்ட் செய்யப்பட்டு சோதனைக்கு உள்ளாகும். டயாபடிஸ் எனப்படும் நீரிழிவு நோய் சோதனைக்கு உள்ளாகும். ரத்தத்தில் சர்க்கரை மிக அதிகமாகி நீரிழிவு நோய்க்கு வழி விடும் போது, சிறுநீர் சோதனையில் குளுகோஸ் தென்பட்டுக் காண்பித்துக் கொடுக்கும்.

இப்படி ரத்தம், சிறுநீர் இரண்டையும் சோதனை செய்து உறுதி செய்து கொள்வதற்குக் காரணம் உண்டு. சில சமயம் சிறுநீரகம் பாதிக்கப்பட்டிருந்தால், டயாபடிஸ் இருந்தால் கூட அது சிறுநீர் பரிசோதனையில் தெரியவராமல் போகலாம். இந்த நிலையில் ரத்தப் பரிசோதனை உதவும்.

அதே மாதிரி ஜீரண உறுப்புகளில் சில வகை பாதிப்புகள் ஏற்பட்டிருந்தால் ரத்தப் பரிசோதனை முழுவதும் நம்பத்தகுந்ததாக இல்லாமல் போகலாம். அந்த சமயத்தில் சிறுநீர்ப் பரிசோதனை கைகொடுக்கும்.

டயாபடிஸைப் பொறுத்தவரை "HPA 1C" என்ற பரிசோதனை ஒன்று சமீபகாலமாக அறிமுகமாகியிருக்கிறது. நம் ரத்தத்தில் உள்ள ஹீமோக்ளோபினில் உருவாகும் ஒரு வகைப் பொருள்தான் இந்த HPA 1C. இது ஹீமோக்ளோபினில் 7 - 9 சதவீதம் அளவு இருந்தால் அது நார்மல். அதிகம் என்றால் டயாபடிஸ். இந்தச் சோதனை ஒருவருக்கு டயாபடிஸ் உண்டா என்று கண்டுபிடிப்பதற்கு அல்ல. ஏற்கனவே நீரிழிவு நோயால் பாதிக்கப் பட்ட ஒருவர் அதற்கான மருந்துகளை தவறாமல் கடந்த ஒன்றரை மாதங்களாக உட்கொண்டாரா என்பதை இந்தச் சோதனை காட்டிக் கொடுத்துவிடும்! HPA 1C என்பது புரதமும் க்ளுகோஸும் இணைந்த ஒரு பொருள். இது உருவா னால் சுமார் ஒன்றரை மாதத்திற்கு அது அப்படியே ரத்தத்தில் இருக்கும். குறிப் பிட்ட மருந்தை தவறாமல் உட்கொண் டால் இது ஓர் அளவுக்கு மேல் உருவா வதைத் தடுக்க முடியும். அந்த விதத்தில் தான் இந்தப் பரிசோதனை உதவுகிறது.

— ஜி.எஸ்.எஸ்.

# சோதனை மேல் சோதனை!

"எங்க தலைவர் வருமானத்துக்கு அதிகமாக சொத்து சேர்த்திருக்கிறார்!"

"இது என்னங்க பிரமாதம்? எங்க தலைவர் வருமானம் இல்லாமலே சொத்து சேர்த்திருக்கிறாரே!"

— நாஞ்சில் சு. நாகராஜன்



Cow – காகம், Horse – கண்டெலி, Child – இளவர், LIC Contribution – தகவ்நுபர் வருமானவரி, Retirement – ஓய்வூதியம், Sugar Industry – கரும்பு தொழிற்சாலை.

ஆங்கில வார்த்தைக்கு இப்படி அபத்தத் தவறுதலாக எந்தப் புத்தகத்தில் அர்த்தம் இருக்கின்றது என்கிறீர்களா? மதுரை காமராஜர் பல்கலைக் கழகம் 'பொது அறிவு' என்ற புத்தகத்தை மாணவர்களுக்காக தயாரித்து வெளியிட்டுள்ளது. 25,000 பிரதிகள் அச்சிட்டுள்ளார்கள். இப்படிப்பட்ட தவறுகளோடு வெளிவந்தால் மாணவர்களின் அறிவு எப்படி வளரும்?

— கதிஜா ஹனிபா; ஆதாரம் : தினமணி

வர்த்தமானன் வழங்கும் மற்றொரு மாபெரும் முன் வெளியீட்டுத் திட்டம்..

வியாசபாரதம், வால்மீகி இராமாயணம் , ஸ்ரீமத் பாகவதம்,
பன்னிரு திருமுறைகள், திருவிளையாடற் புராணம்
நூல்களின் முன் வெளியீட்டுத் திட்டத்தின் மாபெரும்
வெற்றியினைத் தொடர்ந்து தற்போது மற்றொரு
மாபெரும் முன் வெளியீட்டுத் திட்டம்.
பல பதிப்புகளைக் கண்ட எமது
"கம்பராமாயணம் - மூலமும் தெளிவுரையும்"
மீண்டும் வெளிவருகிறது.

வழக்கம் போல் சலுகை சலுகைமேல் சலுகை இலவச நூல் தவணை முறை ஆகிய அனைத்தும் உண்டு.

# கம்பராமாயணம்

| | |
|---|---|
| மூலமும் தெளிவுரையும் - 5000 பக்கங்களில் 9 தொகுதிகள் விலை | 1000.00 |
| முன்வெளியீட்டுச் சலுகை | 250.00 |
| | 750.00 |
| வர்த்தமானன் டிரஸ்ட் தரும் உதவித் தொகை | 250.00 |
| **சலுகை விலை.....** | **500.00** |

பாலகாண்டம்(1)
அயோத்தியாகாண்டம்(1)
ஆரணியகாண்டம்(1)
கிஷ்கிந்தா காண்டம்(1)
சுந்தர காண்டம்(1)
யுத்த காண்டம்(4)
ஆக 9 தொகுதிகள்.

## இலவச நூல் : உத்தர காண்டம்

மூலமும் தெளிவுரையும் - 800 பக்கங்களில்-2 தொகுதிகள்.. ரூ. 200.00

**முன்பதிவு செய்யக் கடைசி தேதி : 30.5.98. முந்திக் கொண்டு 16.5.98 க்குள் பதிவு செய்வோர்க்கு மட்டுமே சலுகையுடன் இலவச நூல்கிடைக்கும்.**

**30.9.98 லிருந்து பணம் வந்த வரிசைப்படி நூல்கள் அனுப்பப்படும்**

சலுகை விலையான ரூ.500-யினை இரு தவணையாகவும் செலுத்தலாம். அதாவது ரூ.200 மட்டும் அனுப்பிப் பெயரினைப் பதிவு செய்து கொள்க. மீதித் தொகை ரூ.300 + தபால், பேக்கிங் செலவு ரூ.40 சேர்த்துத் தபால்காரரிடம் செலுத்தி நூல்களைப் பெற்றுக் கொள்ளலாம். செப்டம்பர் மாதம் 30ம் தேதியிலிருந்து பணம் வந்த வரிசைப்படி நூல்கள் அனைத்தும் VPP யில் அனுப்பப்படும்.

**நேரில் பணம் செலுத்துவோர் கவனிக்க:** ரூ.200 (ரொக்கமாக மட்டும், Cheque ஏற்கப்படமாட்டது) எமது அலுவலகத்தில் செலுத்தி ரசீது பெறலாம். ரசீதினில் நூல்கள் தயாராக இருக்கும் நாள் குறிப்பிட்டுத் தரப்படும். அந்த நாளில் நேரில் வந்து மீதித் தொகை ரூ.300 மட்டும் செலுத்தி நூல்களைப் பெற்றுச் செல்லலாம். *எமது அலுவலக வேலை நேரம் 9 a.m. - 7 p.m உணவு இடைவேளையின்றி. ஞாயிறு வார விடுமுறை.*

**மேலும் சில தகவல்கள்:** D.D அனுப்புவோர் " Varthamanan Pathippagam" என்ற பெயரில் எடுத்து. Self Addressed Card ஒன்றும் இணைத்து அனுப்புக. MO/DD அனுப்புவோர்க்கு தபாலில் தான் நூல்கள் அனுப்பப்படும். நேரில் தரப்படமாட்டாது. Cheque ஏற்கப்படமாட்டது.

MO/DD அனுப்ப வேண்டிய முகவரி : VARTHAMANAN PATHIPPAGAM
ARR Complex, 141, Usman Road, T. Nagar, Chennai - 17. Near Panagal Park, ☎ : 8257995

# கம்பர் அருளிய இராமாயணம்
# ஒட்டக் கூத்தர் அருளிய உத்தரகாண்டம்

**நூல்களைப் பற்றி ஒரு குறிப்பு**

இந்தியாவில் எத்தனை மொழிகள் உண்டோ அத்தனை மொழிகளிலும் இராமாயணம் உண்டு. இது தவிர, ஒரே மொழியிலேயும் பல இராமாயண நூல்கள் தோன்றியிருக்கின்றன. இதிலிருந்தே இந்திய மக்கள் மீது இராம கதைக்கு உள்ள செல்வாக்கைப் புரிந்து கொள்ளலாம். எத்தனை இராமாயண நூல்கள் இருந்தாலும் அவை அத்தனைக்கும் ஊற்றாக இருப்பது வால்மீகி முனிவர் இயற்றிய இராமாயணம் தான்!

அந்த மாமுனிவரின் கதையை அடிப்படையாகக் கொண்டே பிற்காலப் புலவர்கள் தங்கள் தங்கள் மொழி மரபுக்கேற்ப, பண்புக்கேற்ப நிகழ்ச்சிகளைக் கூட்டியும், குறைத்தும், மாற்றியும் இராம கதையை வகுத்தனர். இந்த வகையில் அற்புதமான ஒரு கலைப்படைப்பைத் தோற்றுவித்தார், கம்பர்! அவரது காப்பியத்தில் கவிதைப் பிரவாகத்தையே காணலாம்! பார காவியம் பாடிய அம் மாபெரும் புலவர் ஓர் எல்லையில் இராமபிரானின் கதையை நிறுத்திக் கொண்டார். இராவணனை வீழ்த்தி அயோத்தி சென்று ஆட்சிப் பொறுப்பை ஏற்ற இராம பிரான், அனுமன் முதலானோர்க்கு விடை கொடுத்தனுப்புவதோடு கம்பராமாயணம் முடிகிறது. இராகவனின் பிற்கால நிகழ்ச்சி களைப் பற்றிக் கம்பராமாயணம் எதுவும் கூறவில்லை.

கவிச்சக்கரவர்த்தி ஒட்டக்கூத்தர் அந்தப் பணியைச் செய்து முடிக்கிறார். அவர் இயற்றிய உத்தர காண்டம் என்னும் நூல் தனித்தன்மை வாய்ந்தது. மகாகவி கம்பர் குறிப்பாகச் சொல்லிவிட்டுப் போகும் பல நிகழ்ச்சிகளை உத்தர காண்டம் விரிவாகப் பேசுகிறது. சில நிகழ்ச்சிகளை இங்குச் சுட்டிக் காட்ட விரும்புகிறோம்.

இராமபிரானின் ஆட்சியின் மாட்சி (இராம ராஜ்யம்) உத்தரகாண்டத்தில்தான் கூறப் படுகிறது.

இராவணனின் பிறப்பு, தவம், அவன் பெற்ற வரங்கள், சாபங்கள் ஆகியவை இவ்வுத்தர காண்டத்தில் விரிவாக இடம் பெற்றுள்ளன. இராவணன் தவம் உடையவன்; மூன்று கோடி ஆண்டு வாழ்நாளையுடையவன்; சில சாபங்களும் அவனுக்கு உண்டு என்ற செய்திகள் கம்பராமாயணத்திலும் கூறப்படு கின்றன என்றாலும் இவை பற்றிப் படலம் படலமாகப் பாடுவது உத்தர காண்டம் தான் ! பல கன்னியரை, திருமணமான மகளிரைக் கற்பழித்த கொடியவன் இராவணன். இந்தக் கொடுமையில் அவன் பெற்ற பயிற்சிதான் சீதையைக் கவர்ந்து செல்லும் அளவுக்கு அவனைக் கொண்டு போய் நிறுத்தியது. வேதவதியும், அரம்பையும், பல கன்னியரின் தாயாரும் இட்ட சாபக் கணைகள் அவன் மீது எந்த நேரத்திலும் பாயக் காத்திருந்த செய்தியை உத்தரகாண்டம் தெரிவிக்கிறது.

மேகநாதன் இந்திரனை வென்று இந்திரசித்து என்ற பட்டம் பெறும் மேன்மையும் இவ்வுத்தரகாண்டம் உணர்த்தும் செய்தியாகும்.

பரதன், இலக்குவன், சத்துருக்கன் ஆகியோர் தனித் தனிநாடு பெறும் செய்தியையும் இதில் காணலாம். குசலவர் பிறப்பும், மேன்மையும், வான்மீக முனிவரின் காப்பியப் பிரவேசமும் உத்தரகாண்டத்தின் தனிச் சிறப்புகளாம்.

இராமாவதார நோக்கம் ஈடேறுகிறது. இராமபிரான் தன் மூல பலத்துடன் கலப் பதற்கேற்ற காலம் வருகிறது. அப் பெருமான் வைகுண்டம் அடைவதுடன் உத்தர காண்டம் நிறைவு பெறுகிறது.



# பணக்காரப் பெண் -










**வ**ளர்ப்பு மகன் கல்யாணம் மாதிரி எல்லாம் ரகளை பண்ணி பிரமிக்க வைக்காமல், ரொம்ப அமைதியாக ஒரு பிரம்மாண்ட திருமணம் நிச்சயமாகி இருக்கிறது :

மணப்பெண் : பாண்ட்ஸ் இந்தியா லிமிடெட்.

மாப்பிள்ளை : இந்துஸ்தான் லீவர் லிமிடெட்.

'சீர்' லிஸ்ட்டைப் பார்த்தால் அசத்தலாக இருக்கிறது. பாண்ட்ஸ் ட்ரீம் ஃப்ளவர் டால்க், பாண்ட்ஸ் க்ரீம், அமெரிக்காவில் எல்லாம் பேசப்படுகிற சமாசாரமான 'ஏஜ் டிஃபையிங் காம்ப்ளெக்ஸ்' (முகத்துல, கை கால்ல எல்லாம் சுருக்கமே விழாதாம்!) ரெக்சோனா டியோடரன்ட், வெடிப்புத் தடுப்பு வாஸ்லைன் (குண்டு வெடிப்பு இல்லே. கை கால்ல வர்ற வெடிப்பு!), வாஸ்லைன் ஹேர் டானிக், பாண்ட்ஸ் சோப், பாண்ட்ஸ் ஃபேஸ் வாஷ் லோஷன் என்று பட்டியல் நீள்கிறது!

பாண்ட்ஸ் அதிபர் வி. பலராமனை நாம் கேட்ட முதல் கேள்வி :

"நூறு பர்சென்ட்டுக்கு மேல டிவிடென்ட் கொடுக்கிற உங்க கம்பெனியைப் போய், எதுக்குங்க அத்தனாம் பெரிய இந்துஸ்தான் லீவர் கம்பெனியோட இணைக்கணும்?"

"மன்மோகன் சிங் நிதியமைச்சரா இருந்தப்போ, தாராளமயமாக்கல் கொள்கையைக் கொண்டு வந்தார் இல்லையா? அதனால, உலகம் பூரா வியாபார விஷயத்துல போட்டா போட்டி அதிகமாச்சு. ஒவ்வொரு கம்பெனியும் தங்களோட தயாரிப்பு அதிகமா விற்பனையாகி, முதல் இடத்தைப் பிடிக்கணும்னு முனைஞ்சுது. காம்படிஷன்னு வந்திட்டா பொருளோட தரம், அதோட பயன் எல்லாத்தப் பத்தியும் எடுத்துச் சொன்னாத்தானே மக்கள் வாங்குவாங்க? வியாபாரமும் அதிகமாகும்! அதுக்கு நிறைய விளம்பரம் பண்ணியாகணும். நிறைய விளம்பரம் பண்ணணும்னா இன்னும் செலவாகும்; லாபத் தொகைலதான் கைவைக்கணும். இந்த ஆறு வருஷத்துல நாங்களும் மார்க்கெட் ரிசர்ச், சேல்ஸ் ப்ரமோஷன், அட்வர்டைசிங்னு நிறைய செலவழிச்சோம். ஏன்னா வருஷா வருஷம் ஏதாவது ஒரு புது ப்ராடக்ட்டை அறிமுகப்படுத்திக்கிட்டே இருந்தோம். முன்னே விளம்பரங்களுக்கு 7 கோடி ரூபாய்தான் செலவழிச்சோம். இப்போ 20 கோடி ரூபாய் செலவழிக்கிறோம்!"

"ஆனா, அதுல பெரும்பாலும் டீவி விளம்பரம்தானே?"

"ஆமா. ஆனா இனி பிரின்ட் மீடியாவுக்கும் அதிகமா செலவழிச்சாகணும்... இப்ப 'பாண்ட்ஸை'யே எடுத்துக்குங்க. இன்னும் ஒரு இருபது கோடி கூடச் செலவழிச்சிருக்கலாம். அந்தச் செலவை நியாயப்படுத்தவும் முடியும். ஆனா லாபம் அந்த அளவுக்குக் குறைஞ்சுடும்! இதையெல்லாம் பார்த்துத்தான் இந்துஸ்தான் லீவர் கம்பெனியோட பாண்ட்ஸை இணைக்க சம்மதிச்சேன். அவங்களோட விளம்பரச் செலவு பல மடங்கு! அதுவுமில்லாம, உலகத்துல எல்லா நாடுகளையும் பாண்ட்ஸ் கம்பெனியை லீவர் கம்பெனி பத்து வருஷத்துக்கு முன்னாலேயே வாங்கியாச்சு. இதுல பெருமைப்படற இன்னொரு விஷயம், அந்த வெளிநாட்டு லீவர் கம்பெனிகள் அங்க - ஆறுல இந்தியர்கள்தான் சேர்மனா இருக்காங்க!"

"அப்போ உங்களுக்குன்னு இருக்கற ஒரு தனித்தன்மை, ஐடென்டிடி - அது போயிடும். ஒரு தனி நிறுவனம்கிற அந்தஸ்து - இதுவரை இருந்துதே, அதுவும் போயிடுமே?"

"கரெக்ட்... ஒப்புக்கறேன். ஆனா இந்துஸ்தான் லீவர் பேரும் பாண்ட்ஸ் மாதிரி புகழ்பெற்றது தானே?.... கல்யாணத்துக்கு முன்



• பலராமன்

# பெரிய இடத்து மாப்பிள்ளை!

னால ப்ரியங்கா காந்தின்னு இருந்தாலும், கல்யாணம் ஆனப்புறம் ப்ரியங்கா வதேரா ஆயிடறதில்லையா? அது மட்டுமில்லே. எங்களால ரீச் பண்ண முடியாத ரூரல் ஏரியாவுல எல்லாம் அவங்க வியாபாரம் எட்டியிருக்கு. அதுலயும் கிராமப் பகுதில டாய்லெட் சோப்பும், டிடர்ஜென்ட் சோப்பும், சர்ஃப் பவுடரும், லிப்டன் டீயும், ஷாம்புவும் விற்பனை ஆகுதுன்னா அதுக்கு இந்துஸ்தான் லீவர்தான் காரணம்."

"ஆனா இந்த விலை கொடுத்து அழகு சாதனம்லாம் வாங்குவாங்களா?"

"அவங்களுக்கு ஏத்த மாதிரி மூணு – நாலு ரூபால கூட சின்ன பாக்கிங் போட்டிருக்கமே! ரூரல் பர்சேஸிங் பவர் பத்தி உங்களுக்குத் தெரியாது. இப்ப ப்ரொக்யூர்மென்ட் பிரைஸ் (கொள்முதல் விலை) எல்லாம் ஏத்திட்டதுனால அவங்ககிட்டயும் பணம் புழங்குது!" (கடவுளே! மாநில முதலமைச்சர்கள் காதுலயும், மத்திய நிதியமைச்சர் காதுலயும் இது விழுந்துடக் கூடாது!)

"சரி. அப்படீன்னா பாண்ட்ஸ் ஷேர் ஹோல்டருங்க எல்லாம் இதுக்கு சம்மதிக்க வேணாமா? நீங்க முடிவு எடுத்திட்டாப் போதுமா?"

"அவங்க நல்ல முடிவுதான் எடுப்பாங்க. ஒரு பாண்ட்ஸ் கம்பெனி பங்குக்கு 12 ரூபா லாபம் கிடைச்சா, ஒரு இ.லீவர் ஷேருக்கு 17 ரூபா லாபம் கிடைக்குது. அதுனால இந்த 'இணைப்பு' பங்குதாரர்களுக்கு லாபமானதுதான். அவங்க என் மேல நம்பிக்கை வச்சிருக்காங்க. அவங்களோட நன்மையை மனசுல வச்சுக்காம இந்த 'இணைப்பு'க்குச் சம்மதிச்சிருக்க மாட்டேன்னு நம்பறாங்க. இல்லேன்னா அஞ்சு தடவையா என்னையே பாண்ட்ஸ் சேர்மனா தேர்ந்தெடுத்திருப்பாங்களா?"

"உங்க ஷேர் ஹோல்டர்ஸ் மாதிரி இந்துஸ்தான் லீவர் ஷேர் ஹோல்டர்சும் சம்மதிக்க வேணாமா?"

"எங்க ஷேர் ஹோல்டர்ஸ் 41,000 பேர். அவங்க ஷேர் ஹோல்டர்ஸ் நாலரை லட்சம் பேர். மே 11-ஆம் தேதி எங்க பங்குதாரர்கள் ஓகே பண்ணிட்டா, மே 15-ஆம் தேதி லீவர் பங்குதாரர்களும் ஓகே பண்ணிடுவாங்கன்னு எதிர்பார்க்கறோம். சென்னை ஹைகோர்ட்டும், மும்பை ஹைகோர்ட்டும் அதை அப்ரூவ் பண்ணிடுவாங்க."

"ஆனா ஜனவரி 1, 98லேயே இணைஞ்ச மாதிரி போட்டுட்டீங்களே?"

"முகூர்த்தத்துக்கு முன்னால ரிசப்ஷன் இல்லியா? அது மாதிரி 'கல்யாணம்' மே மாசம். ரிசப்ஷன் ஜனவரி 1 -ஆம் தேதி!"

இந்த இந்துஸ்தான் லீவர் – பாண்ட்ஸ் கூட்டணிக்கு, பாண்ட்ஸ் ஊழியர்களும் சம்மதித்து விட்டார்களாம். ⭘

சந்திப்பு :
**சாருகேசி**






**கல்கி :** நீங்களும் சரி, லியாண்டரும் சரி, இரட்டையர் ஆட்டத்தில் பிரகாசிப்பது போல ஒற்றையர் ஆட்டத்தில் சிறப்பாக ஆட முடிவதில்லையே, என்ன காரணம்?

**மகேஷ் பூபதி :** ஒற்றையர் ஆட்டத்தில் வெல்வதற்கு சர்வீஸ் போடுவதில் அசாத்திய வேகமும் டைமிங் சென்ஸ்ும் முக்கியம். மின்னல் வேகத்தில் 'Ace' போடுவதுதான் வெற்றிக்கு இட்டுச் செல்லும். அதற்கு நல்ல தோள் வலிவு வேண்டும். வெளிப்படையாகச் சொல்வதென்றால் எங்கள் இருவருக்குமே தற்சமயம் அத்தனை வலிவு போதாது. அதற்காக நல்ல 'கோச்'சிடம் பயற்சி பெற்று வருகிறோம். இன்னும் இரண்டு வருடத்தில் நாங்கள் ஒற்றையர் ஆட்டத்திலும் வெற்றிகள் பெறப் போவது உறுதி. ஆனால், இரட்டையர் ஆட்டத்தில் தொடர்ந்து நாங்கள் வெற்றி பெறுவது போல மற்றவர்களால் ஏன் முடிவதில்லை என்று எண்ணிப் பார்த்தீர்களா? நல்ல அண்டர்ஸ்டாண்டிங், விட்டுக் கொடுத்தல் இந்த இரண்டும்தான் காரணம். உண்மையில் நாங்கள், Made for each other ஜோடி என்றால் மிகையில்லை. நான் நினைப்பதை கிரவுண்டில் அவன் செய்வான். அவன் என்ன நினைப்பான் என்று ஒவ்வொரு விநாடியிலும் எனக்குத் தெரியும்! அடிப்படையில் நான் கோபக்காரன். லியாண்டரோ, படு அமைதியான சுபாவம் உள்ளவன். என் விழியாக அவன் இருப்பான். அவன் உருவத்தில் நான் இருப்பேன். இரட்டையர் ஆட்டத்தில் எங்கள் வெற்றியின் ரகசியம் இதுதான்.

**கல்கி :** இருவரும் எப்படி இணைந்தீர்கள்?

**மகேஷ் :** நாங்கள் இருவரும் ஒரே இடத்தில்தான் டென்னிஸ் கற்றோம். தற்செயலாக ஒரு டேவிஸ் போட்டியில் இருவரும் இணைந்து விளையாடி வெற்றி பெற்றது தான் ஆரம்பம். 'மற்ற டோர்னமென்ட்களிலும் நாமே இணைந்து ஆடலாமே' என்று அவன்தான் முதலில் கேட்டான். ஒப்புக் கொண்டேன். ஓரிரு மேட்சுகள் முதலில் தோற்றாலும் அவன் தட்டிக் கொடுத்து உற்சாகப்படுத்தினான். என்னை விட வயதில் அவன் பெரியவன் ஆனாலும் நான் இப்படித்தான் ஒருமையில் அவனைப் பேசுவேன். மேட்சில் நான் கண்டபடி பேசுவேன். என் வசவு எனக்கே சகிக்காது. வேறு யாராவதாக இருந்தால் ஓடியே போய் விடுவார்கள். ஆனால் லியாண்டர் மிகப் பொறுமையானவன். நாங்கள் சகோதரர்கள் அல்ல! அதற்கும் ஓரிரு படி மேலே என்று சொல்ல வேண்டும்.

# காதலிக்க நேரமில்லை!

**கல்கி :** உங்கள் இருவரைச் சுற்றியும் எப்போதும் இளம் பெண்கள் அலைமோதுகிறார்களே, எப்படிச் சமாளிக்கிறீர்கள்?

**மகேஷ் :** எல்லாம் வெற்றி வந்து சேரும்போதுதான்! இதுவே நாங்கள் தோற்றுப் போய் விளையாடிக் கொண்டிருந்தால் யார் வருவார்கள்? அந்தத் தெளிவு எங்களுக்கு உண்டு. ஆனால் ஒன்றை ஒப்புக் கொள்ள வேண்டும். நூற்றுக்கணக்கான பெண்கள் நம்மைச் சுற்றி வரும்போது ஒரு 'கிக்' ஏற்படத்தான் செய்கிறது! அதுவே ஜெயிக்க வேண்டும் என்கிற வேகத்தையும் தருகிறது!

**கல்கி :** சரி. நீங்கள் யாரையாவது காதலிக்கிறீர்களா?

**மகேஷ் :** நிறையப் பேர் என்னைக் காதலிக்கிறார்கள். லியாண்டரையும்தான். ஆனால் நானோ அவனோ இன்னும் அதில் சிக்கவில்லை. (சிரிக்கிறார்) லியாண்டர் கூடத் தமாஷாக ஒருமுறை கேட்டான், "ஏண்டா, இது சரியான வயது. நாம் யாரை

யாவது காதலிக்கலாமா?" என்று. நான் சொன்னேன் : "இப்போது வேண்டாம். ஒற்றையர் ஆட்டத்திலும் நாம் வெற்றி அடைய ஆரம்பிப்போம். அதன்பின் இப்போது இருப்பது போல இன்னும் நூறு மடங்கு பெண்கள் நம்மைச் சுற்றுவார்கள். அப்போது ஆளுக்கு ஒருத்தராக தேர்ந்தெடுப்போம். உனக்கொரு பெண்ணை நான் தேர்ந்தெடுத்துத் தருகிறேன். என் லைஃப் பார்ட்னரை நீ தேர்ந்தெடுத்துத் தா. காதலித்து மணக்கலாம்!" என்றேன். (சிரிக்கிறார்)

**கல்கி** : அப்போ, இப்போதைக்குக் கல்யாணம் இல்லை?

**மகேஷ்** : நோ சான்ஸ்! இன்னும் நாலு வருஷம் போக வேண்டும். விம்பிள்டனில் ஏதாவது சாதனை புரியவேண்டும். அதுதான் எங்களின் தற்போதைய கனவு. காதல், கல்யாண மெல்லாம் அதன் பிறகுதான்!

பேட்டி : **சிம்மம்**

படம் - நன்றி: **ஸ்போர்ட்ஸ் ஸ்டார்**

**இந்தியாவின் இன்னொரு டென்னிஸ் புயல் மகேஷ் பூபதியை சமீபத்தில் பெங்களூரில் சந்தித்துப் பேசினோம். தமக்குத் தமிழ் நன்றாகத் தெரியும் என்று தமிழிலேயே பேட்டியளித்தார் மகேஷ்.**



# அவுட்டோர் ஹா! ஹா!

— குல்ஹா





"டூப்புக்கு உடம்பு சரியில்லை. அந்த மலையிலிருந்து ஜஸ்ட் ஒரே ஒரு தடவை நீங்க குதிக்கணும். அவ்வளோதான்."



"அருவி குளியலெல்லாம் வேண்டாம். வெந்நீரிலே செயற்கை மழை ஸ்ப்ரே செய்து ஷூட் பண்ணுங்க. எனக்கு ஜலதோஷம்."

"வட இந்தியாவில ஷூட்டிங்னதும் சிம்லா, டார்ஜிலிங்னு நினைச்சேன்."

"உன்னை மாதிரி எவ்வளோ
ஹீரோங்களைப் பாத்திருக்கேன்.
குடிச்ச சிங்கிள் டீக்கு காசு வெச்
சிட்டுப் போ. ப்ரொட்யூசர் கொடுப்
பார்ற கதையெல்லாம் வேணாம்."

"இந்த இடத்துல தோட்டா
தாணியை வைத்து ஒரு கொடோன்
செட் போட்டு சண்டைக் காட்சி
படமெடுத்தா ஜோரா இருக்குமில்ல?"

"முதல்ல இந்த பொன்னாச்
சிலருந்து வேற எங்கனா போயிட
ணும். யார் படமெடுத்தாலும் நம்மை
க்ளிக் பண்ணி டூயட்டுக்கு நடுவே
காட்டிடுறாங்க. பிரைவஸியே
இல்லை."

"திடீர்னு பேசின தொகைக்கு
மேல பணம் கேட்டா இது நிஜமா
கவே அவுட்டோர் 'ஷூட்டிங்' ஆயி
டும், சொல்லிட்டேன்."

# நாய்க்காக ஒரு யுத்தம்



மேனகா காந்தியைத் தலைவியாகக் கொண்ட "பீப்பிள் ஃபார் அனிமல்ஸ்" என்ற டெல்லியைச் சார்ந்த மிருக நல அமைப்பு, இந்தியாவின் தலை சிறந்த மருந்துத் தயாரிப்பு நிறுவனங்களில் ஒன்று என்று கருதப்படும் ரான்பக்ஸி லாபரட்டரீஸ் மீது வழக்கு தொடுத்திருக்கிறது. சுற்றுப்புற சூழல் அமைச்சகக் குழுவின் தலைவி என்ற முறையில் மேனகா காந்தியிடமிருந்து அனுமதியைப் பெற வில்லை இந்த மருந்து தயாரிப்பு நிறுவனம் என்பதுதான் குற்றச்சாட்டு.

எதற்கு அனுமதி?

பீகிள்ஸ் எனப்படும் வகையைச் சேர்ந்த ஐம்பது நாய்களை இந்தியாவுக்கு இறக்குமதி செய்துள்ளது இந்த நிறுவனம். இதற்குத்தான் அனுமதியில்லை என்கிறது மேனகா காந்தியின் அமைப்பு.

ஆனால் டெல்லி அரசின் வனத்துறை வார்டனைத் தங்கள் நிறுவனம் தொடர்பு கொண்டதாகவும், சட்டத்தின்படி 'பாதுகாக்கப்பட்டுள்ள' உயிரினங்களில் பீகிள்ஸ் கிடையாது என்பதால் அவற்றை இறக்குமதி செய்ய அனுமதி தேவையில்லை என்று எழுத்து மூலமாகவே அறிவித்து விட்டதாகவும் மருந்துத் தயாரிப்பு நிறுவனம் கூறுகிறது!

''யாருக்கு இப்படிப்பட்ட அனுமதி வழங்க அதிகாரமே இல்லையோ அவர்களை இந்த நிறுவனம் அனுமதிக்காக அணுகியதே தவறு' என்பது மேனகா காந்தியின் வாதம்.

எதற்காக இந்த நாய்கள் இறக்குமதி என்பதை அறிந்து கொண்டால் இந்த மோதலின் வேர் பிடிபட்டுவிடும்.

மனிதர்களுக்கான எந்த மருந்தையும் முதலில் மிருகங்களின் உடலின் மீது பரிசோதனை செய்து பார்ப்பது வழக்கம். பொதுவாகக் குரங்குகளை இதற்காகப் பயன்படுத்துவார்கள். ஆனால் சில வகை மருந்துகளுக்குக் குரங்குகள் சரியான வகையில் ரியாக்ஷன் கொடுப்பதில்லை. அப்படிப்பட்ட மருந்துகளை பரிசோதனை செய்ய பீகிள்ஸ் நாயைப் பயன்படுத்துவது வழக்கம். இதற்குக் காரணம், உலகம் முழுவதும் பீகிள்ஸ் வகை நாய் குறித்த பரிசோதனை விவரங்கள் நிறைய இருப்பதால், இங்கே அவற்றின் மீது செய்யப்படும் பரிசோதனை விவரங்களை ஒப்பிட்டுப் பார்ப்பது எளிது.

ஆக வியாபார தர்மத்துக்கும், மனித (மிருக?) தர்மத்திற்கும் இடையே நடந்து வரும் போராட்டத்தின் இன்னொரு வடிவம்தான் இது. ◉

— குல்லூ

"சீ.எஸ்.ஐ. ஒண்ணு கொடுங்க சார்'' என்றவாறே பத்து ரூபாயை நீட்டினான், நாகராஜ்.

''சில்லறை ஒண்ணு அம்பது கொடுங்க சார்'' - கண்டக்டர் பத்து ரூபாய்த் தாளைப் புறக்கணித்தார்.

''ப்ச், ஒண்ணு நாப்பதுதான் இருக்கு. அதான்...''

''பரவாயில்லை, கொடுங்க சார். இப்ப எல்லாம் அஞ்சு பைசா, பத்துப் பைசாவை யார் பார்க்கறாங்க. பிச்சைக்காரன் கூடத் திட்டறான்.''

''கரெக்டா இருந்திருக்கலாம். ஆனா, காலைல வரப்போ...''

பேசி முடிப்பதன் முன், கண்டக்டர் டிக்கெட்டைக் கிழித்துக் கொடுத்து விட்டுப் படிக்கட்டுப் பக்கமாய்ப் பாய்ந்து விட்டார்.

மீதியை மனசுக்குள்ளேயே சொல்லிக் கொண்டு, வெளியே வேடிக்கை பார்க்க ஆரம்பித்தான் நாகராஜ். டீக்கடை வாசலில் இளநீர்க் கடை. டீக்கடை ஆள் இளநீர் வாங்கிக் குடிக்க, இளநீர்க் கடைக்காரர் டீயை உறிஞ்சிக் கொண்டிருந்தார்.

ஸ்கூட்டரில் வந்து கொண்டிருக்கும் அக்கவுண்ட்ஸ் நிர்மலா கண்ணில் பட்டாள். அவளுக்கு எப்போதும் பாந்தமாக இருக்கும், அந்த ரோஸ் கலர் புடைவையில் பட்டு ரோஜாவாய்த் தெரிந்தாள். 'இந்த வெயிலில் எங்கே போகிறாள்?'

சட்டென்று, சப்தமான ஒரு குரல் அவன் சிந்தனையைக் கலைத்தது.

''என்னய்யா இது, அநியாயமா இருக்கு. அஞ்சு ரூபாய்க்குச் சில்லறை இல்லையா?''

நாகராஜ் திரும்பிப் பார்த்தான். அந்த ஆள் குள்ளமாக, கருப்பாக இருந்தான். தண்ணி அடித்திருப்பானோ என்று வேண்டாத சந்தேகம் வந்தது.

''சில்லறை, ஒண்ணு அம்பது கொடுங்க.''



''ஏன், உங்கிட்ட சில்லறை இல்லையா?''

கண்டக்டர் சில்லறையோடு நீண்ட கைகளுக்கு முதல் மரியாதை கொடுத்து, டிக்கெட் கிழித்தார். ''இப்பத்தாம்பா, ஷிப்ட் மாறி வரேன். சில்லறை இருந்தால் கொடு. இல்லேன்னா, இறங்கிக்க'' என்றவாறே ஒற்றை பெல் அடித்தார், கண்டக்டர்.

அது தன்னை இறக்கி விடுவதற்காக அடிக்கப்பட்ட பெல் என்று புரிந்ததும், குள்ளமான ஆசாமி, மூர்க்கமானான். ''ஏன், ஏன் இறங்கணும்? இறங்க முடியாது.''

ஒரு வினாடி நேரம்தான். எதையும் கண்டுகொள்ளாமல் ''போலாம் ரைட்'' என்றவாறே கண்டக்டர் இரட்டை பெல் அடித்தார்.

''டிக்கெட் கொடு.''

''சில்லறை வேணும்.''

''என்னய்யா, அநியாயம் பண்றீங்க? அஞ்சு ரூபாய்க்குச் சில்லறை இல்லையா?''

''இல்லை'' கண்டக்டர் அசரவில்லை.

நாகராஜ் ஜன்னல் வழியே எட்டிப் பார்த்தான். மீண்டும் ஒருமுறை நிர்மலா தெரிந்தாள். பஸ் அவளைத் தாண்டிப் பாய்ந்தது.

**என். ஆர். மலர்வண்ணன்**

"எப்படி இருக்கும்? நூத்துக்குப் பத்து லாபத்துக்குக் கடைக்காரங்களுக்கு வித்துடறீங்க இல்லே?"

கடுமையான சொல் இல்லையோ அது? நாகராஜ் கண்டக்டரையே பார்த்தான். மனுஷன் என்ட்ரி போடுவதில் கவனமாக இருந்தார்.

இது நிஜம்தானா என்று நாகராஜ் ஆச்சரியப்பட்டான். அ ன் வேறு சில கண்டக்டர்களையும் பார்த்திருக்கிறான். இந்த நேரம், இந்த இடத்தில் அவர்கள் இருந்திருந்தால்?

சண்டைக்கு என்றே வந்தவன் மாதிரி அவனும், 'உன்னை மாதிரி ஆளை நிறையப் பார்த்திருக்கிறேன் போய்யா' என்ற மாதிரி கண்டக்டரும் நடந்து கொண்டார்கள்.

பீளமேட்டில் பஸ் நின்றது. "சில்லறை வேணும். எல்லாரும் பத்து ரூபாய் நோட்டை நீட்டாதீங்க!"

குள்ளமான ஆசாமி முணுமுணுத்தான். 'அஞ்சு ரூபாய்க்குக் கூடச் சில்லறை இல்லையாம். அயோக்கியத்தனம் பண்றானுங்க.'

கண்டக்டர் காதில் அது விழுந்திருக்க வேண்டும். அவர் அதைப் பொருட்படுத்தவில்லை. அந்த உதாசீனமே குள்ளமான ஆசாமியைப் போட்டுக் குடைய ஆரம்பித்து விட்டது என்று நாகராஜ் புரிந்து கொண்டான்.

ஒருகணம் தலையிடலாமா என்று தோன்றியது. எந்த நிமிஷமும், தான் வாயைத் திறக்கலாம் என்ற எண்ணத்தில் இருந்த போது, வெளியே மீண்டும் நிர்மலா தெரிந்தாள். 'என்ன ஸ்டைலாக ஓட்டுகிறாள்!'

"டிக்கெட் கொடு. பாக்கியை இறங்கற போது குடு. அப்ப ஆயிடும் இல்லே?"

"நான் வாக்குறுதியெல்லாம் தர முடியாது" - கண்டக்டர் முன் பக்கமாகச் செல்ல, குள்ளமான ஆசாமி அவர் பின்னாலேயே ஓடினான்.

ஹோப் காலேஜ் பஸ் நிறுத்தத்தில் நின்று, புறப்பட்ட பஸ், வலது பக்கச் சாலையில் இறங்கி ஓட ஆரம்பித்தது. நாகராஜ் ஜன்னல் வழியாக நிர்மலாவைத் தேடினான். தென்படவில்லை.

குள்ளமான ஆசாமிக்கு இன்னும் டிக்கெட் கிடைக்கவில்லை. ஐந்து ரூபாயை நீட்டிக் கொண்டு, கண்டக்டர் பின்னாலேயே அலைந்து கொண்டிருந்தான். எதையோ முணுமுணுப்பது புரிந்தாலும், ஹோப் காலேஜில் ஏறிய பெருங்கூட்டத்தின் சலசலப்பில் எதுவும் புரியவில்லை.

லைன் நிறுத்தம் தாண்டியதும், "இ.எஸ்.ஐ. எல்லாம் வந்திடுங்க" என்றார் கண்டக்டர்.

படிக்கட்டுப் பக்கமாய் மெல்ல நகர்ந்த நாகராஜ், மனிதர்களின் இடைவெளியில் ஊடுருவி ஜன்னலுக்கு அப்பால் மீண்டும் ஒருமுறை நிர்மலாவைத் தேடினான். 'அவள் ஸ்ட்ரெயிட்டாகப் போயிருக்க வேண்டும்.'

குள்ளமான ஆசாமி படிக்கட்டில் நின்று கொண்டு, "டிக்கெட் குடுங்க சார்" என்றான். அவனுக்கும் இறங்கும் இடம் வந்து விட்டது.

"படிக்கட்டில் நிற்காதீங்க. இறங்கறவங்களுக்கு வழி விடுங்க."

நாகராஜ் சுவாரசியமானான். கீழே இறங்கி நின்று கொண்டு அவர்களையே பார்த்தான். குள்ளமான ஆசாமி கெஞ்சுகிற நிலைக்கு வந்திருந்தான். "சார், சார்."

என்ட்ரியை முடித்துக் கொண்ட கண்டக்டர் முன் பக்கக் கதவுப் பக்கம் பார்த்தபடியே, "முன்னால் ஏறியாச்சா, ரைட்" என்றார். பஸ் கிளம்பியது.

"சார் சார்" - சரேலென்று கையை வெளியே இழுத்துக் கொண்ட குள்ளமான ஆசாமி, சற்று தூரம் பஸ்ஸோடு ஓடி நின்றான். கையைத் தலைக்கு மேல் உயர்த்தி, மெதுவாகக் கீழே கொண்டு வந்தான். விரல் நுனியில் ஐந்து ரூபாய்.

நாகராஜ் பஸ்ஸையும், அந்த ஆசாமியையும் மாறி மாறிப் பார்த்தான். பஸ் வேகமெடுத்துப் போய்க் கொண்டிருந்தது. ●

திருவேங்கட மலையானது நம்மை எப்படி ஆகர்ஷிக்கிறது என்று சொன்னேன்... முக்தி அடைந்து எம்பெருமான் திருவடி சேர்ந்தவர்களைக் கூட ஆகர்ஷிக்க வல்லது அது.

பரமாத்மாவே கூட வைகுண்டத்தை விட்டு பூலோகத்திலே வந்து பிறக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறான் பாருங்கள்....

அயோத்தி மாநகரம் உயர்ந்ததா? வைகுண்டம் உயர்ந்ததா? என்று தராசில் எடைபோட்டுப் பார்த்தார்களாம் அந்தக் காலத்திலே! பார்த்தால், அயோத்திதான் உயர்ந்து நின்றதாம். தராசுத் தட்டு தாழ்ந்தாலும் எடையிலே - பளுவிலே அதுதானே உயர்த்தி!

நூற்றியெட்டு திவ்ய தேசங்கள் இருக்கிறது பாருங்கள்... அவற்றுள் பூலோகத்திலே இருப்பவை 106 - இவையல்லவோ உயர்ந்தவை? மீதி இரண்டும் - வைகுண்டம், திருப்பாற்கடல் மேலே இருப்பவை.... அங்குள்ளவன்தானே அர்ச்சாவதாரத்திலே எல்லா இடத்திலும் இருக்கிறான். ஓரிடத்திலே நின்று கொண்டிருக்கிறான்; ஓரிடத்திலே அமர்ந்து கொண்டிருக்கிறான்; ஓரிடத்திலே சயனித்துக் கொண்டிருக்கிறான்....

திருநீர்மலையிலே பாருங்கள் - நடந்தான், கிடந்தான், நின்றான், அமர்ந்தான்... என்று நான்கு கதியிலே இருக்கிறான் பகவான்.

திருமங்கையாழ்வார் போய் பகவானைக் கூப்பிடுகிறார். அப்போது பகவான் உள்ளே போய் 'பத்னியிடம் கேட்டுவிட்டு வருகிறேன்...' என்று போகிறான்! அதாவது லக்ஷ்மியிடம்!

அந்த மஹாலக்ஷ்மியுடைய திருமுகக் குறிப்பைக் கொண்டுதான் பகவான் வேலை செய்கிறான்! அவள் புருவத்தை நெரித்தால் போச்சு! நமக்கு எதுவும் கிடைக்காது! அவள் புருவத்தை அசைத்தாளானால் எல்லாவற்றையும் கொடுப்பான்.

எம்பெருமானிடத்திலே வாலப்யம் - செல்வாக்கு - அதிகம் அவளுக்கு... அந்த வாலப்யத்தினாலே தான் நமக்கு அவனுடைய வாத்ஸல்யம் கிட்டும்.

திருமங்கையாழ்வார் போய்க் கூப்பிட்டாரே... போனவர் நின்று கொண்டேயிருக்கிறார்! உள்ளே, லக்ஷ்மியைப் பார்க்கப் போனவன் வரவே காணோம்! இவரும் நின்றுகொண்டேயிருக்கிறார்.

சிறிது நேரம் ஆயிற்று.... உள்ளே எட்டிப் பார்த்தால் பரமாத்மா உட்கார்ந்து கொண்டிருக்கிறார்! நின்ற கோலத்தைக் காட்டிலும் உட்கார்ந்திருக்கிற கோலம் ரொம்ப அழகாக இருக்கிறது! அதை சேவித்து சேவித்து அனுபவிக்கிறார்!

"அடடா! என்ன அழகாக இருக்கிறது! அந்த முன் சேவையும் பின் சேவையும்... அமர்ந்த திருக்கோலம்தான் எத்தனை அழகு! நரசிம்ஹர் அமர்ந்த திருக்கோலம் - எல்லா இடத்திலும் அவன் அமர்ந்த திருக்கோலத்தில்தான் காட்சி தருகிறான்...

இன்னும் காத்திருக்கிற திருமங்கையாழ்வாருக்கு அடுத்தபடியாக பெருமானின் கிடந்த திருக்கோலம் தென்படுகிறது. கிடக்கை இருக்

# குறையொன்றுமில்லை



# அருள்வாக்கு



நான் ஒன்று நினைத்துக் கொள்வதுண்டு :- மில் துணி பஹிஷ்காரம் பண்ணிக் கதரை அபிவிருத்தி பண்ண வேண்டுமென்று காந்தி தீவிரமாக இருந்த காலம். சீமையிலிருந்துதான் அப்போது மில் துணி வரும். ஆகையினால் மில் துணி பஹிஷ்காரம் என்பதில், 'ஒரு கல்லில் இரண்டு மாங்காய்' என்கிற மாதிரி இரண்டு லக்ஷ்யங்கள் பூர்த்தி ஆயின : ஸ்வதேசியத்தை ஆதரித்து விதேசியத்தை பஹிஷ்கரிப்பது என்பது ஒன்று; Man-power-ஐ (மனித சக்தியை) ஆதரித்து மெஷின் பவரை எதிர்ப்பது என்பது இன்னொன்று.

இந்தக் கொள்கைகளில் எனக்கும் அபிமானம் உண்டு. 1922ல் ராமேச்வர யாத்ரை போயிருந்தோம். இந்த நல்ல ஸமயத்தில் மடத்துச் சிப்பந்திகளையெல்லாம் ஆலைத் துணியை விட்டு விட்டுக் கதர் உடுத்தும் பழக்கத்தை மேற்கொள்ளச் செய்ய வேண்டும் என்று தோன்றிற்று. அக் காலத்திலே அங்கங்கே மில் துணிகளைச் சொக்கப் பானை மாதிரி கொளுத்தி ஸ்வதேசி அபிமானிகள் விழா நடத்துவது வழக்கம். எனக்கென்னவோ, அசேதனமான துணிதான் என்றாலும் அதைக் கூட நெருப்பில் போட்டுக் கொளுத்துவது என்றால் ஹிம்ஸை மாதிரி தோன்றிற்று. இப்படியில்லாமல், ஸாத்விகமாக, குளிர்ச்சியாக, 'ஜலஸமாதி' என்று சொல்கிறார்களே,-அப்படி ஆலையில் உற்பத்தி

---

கிறதே, படுத்திருக்கிற திருக்கோலம்... திருவடி முதல் திருமுடிவரை அணு அணுவாக அனுபவிப்பதற்கு அந்தக் கிடக்கைதான் ரொம்ப அழகு. அதைப் பார்த்து ரசிக்கிறார் அவர்.

அப்புறம் பரமாத்மா எழுந்து நடந்து வந்தானாம். இப்போது திருமங்கையாழ்வார், அந்த ஊரிலே நடையழகையும் கண்டார்; நின்றதையும் கண்டார், கிடக்கையையும் கண்டார், அமர்ந்த திருக்கோலத்தையும் கண்டார். இந்த நான்கு கோலத்திலும் காட்சி தருகிறான் பரமாத்மா திருநீர்மலையிலே..!

வேறு பல திவ்ய தேசங்களில் விதவிதமாகக் காட்சியளிக்கிறான். அப்படி திவ்ய தேசங்களிலெல்லாம் காட்சியளித்து நம்மை ஆட்கொள்கிறான். வைகுண்டத்திலேயும் இருக்கிறான்... திவ்ய தேசங்களிலேயும் இருக்கிறான்... ராம, கிருஷ்ண அவதாரங்களெல்லாமும் பண்ணுகிறான். அதற்கு மேலே திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கிறான். இதற்கும் மேலே, அந்தர்யாமியாக அவன் எல்லாவற்றிலும் இருப்பதையும் உபநிஷத் சொல்கிறது!

அந்தப் பஞ்சலோகத்தில் தயாரிக்கப்பட்ட விக்ரஹத்திலும் பரமாத்மா காட்சியளிக்கிறான்; துக்கமே கலப்பில்லாத வைகுண்டத்திலும் விராஜமானனாய் இருக்கிறான்.

திருப்பாற்கடலிலே சயனித்துக் கொண்டிருக்கிறான்... நமக்குள்ளே விராஜமானனாகவும் இருக்கிறான்; பூலோகத்தில் அவதரித்துப் பல காரியங்கள் பண்ணி அருள்கிறான்!

இத்தனை வடிவிலே அவன் வந்தாலும், எத்தனை உருவங்கள் கொண்டாலும்... அத்தனையிலும் அமலனாகவே இருக்கிறான்; அவியாத சுடராய் இருக்கிறான்; ஆரமுதனாய் விளங்குகிறான் என்கிற உயர்ந்த விஷயம் நமக்குக் காட்டப்படுகிறது.

இதிலே ஒரு சின்ன விஷயம் கவனிக்க வேண்டும்...

வைகுண்டத்திலே பரமாத்மா இருக்கிறான். எல்லோரும் அங்கே போய் அவனை அனுபவிக்க முடியுமா?... எத்தனையோ புஷ்ப வனங்கள், கானகங்கள், காடுகள்... அங்கே வண்டுகளெல்லாம் ரீங்கரிப்பது கூட 'ஹரி ஹரி...' என்றுதான் கேட்கிறதாம். 'ஹா ஹா....' என்கிற ஒலி அதிர சாமகானம் பண்ணுகிறார்கள் அங்கே...

தெலுங்கில் ஒரு பதப் பிரயோகம் உண்டு... 'ஹாயிகா உன்னாரு...' என்று. 'ஒரு கஷ்டமும் இல்லாமல், ரொம்ப சௌக்யமாக இருக்கிறேன்' என்று பொருள்!

'ஹாயி' என்ற சப்தம் எங்கேயிருந்து வந்தது என்றால், உபநிஷத் வாக்கியத்திலேயிருந்து வந்ததோ என்று எனக்குத் தோன்றுகிறது.

ஒருவிதமான விசாரமில்லை... அங்கே போன பிறகு விசாரம் ஏது...? அங்கே போன பிறகும் விசாரம் என்றால் கங்கைக்கும் இங்கைக்கும் வித்தியாசம் இல்லாமல் போய் விடுமல்லவா! ஆகையினாலே, வைகுண்டமானது, ஒரு விசாரமுமில்லாமல் பரிபூரணமாக அவனை அனுபவிக்கும்படியான உயர்ந்த நிலை. அனுபவ போக்யம்.

சாயுஜ்ய பதவியை வேதம் விளக்குகிறது; 'எம்பெருமானை இவன் அனுபவிக்கிறான்... இவனை அந்த எம்பெருமான் அனுபவிக்கிறான்...' என்கிறது. இங்கேயிருந்து போன

யான வஸ்திரங்களை ஸமுத்திரத்தில் போட்டு விட்டு, (மடத்துச் சிப்பந்திகள்) எல்லாரையும் கதர் கட்டிக் கொள்ளும்படிப் பண்ணலாமென்று நினைத்தேன். அப்படியே தநுஷ்கோடியில் எல்லாரும் ஸ்நானம் செய்தவுடன், மில் துணி உடுத்திக் கொண்டிருந்தவர்கள் அதை ஸமுத்ரத்திலே போட்டுவிட்டுக் கதர் கட்டிக் கொள்ள ஆரம்பித்தார்கள். மதுரையிலிருந்து இதற்காக நிறையக் கதர் வஸ்த்ரங்கள் தருவித்திருந்தோம். தலா இரண்டு ஜோடி கதர் சோமனும் (வேஷ்டியும்) மேல்வேஷ்டியும் கொடுத்தது.

கைத்தொழிலை ஆதரிப்பது, manual labour (உடலுழைப்பு) என்றால் மட்டமாக நினைக்காமல் யாராயிருந்தாலும் ராட்டினத்தைச் சுற்றி நூற்பது, அதனாலேயே வீண்பேச்சு முதலியவற்றில் போகாமல் ஒரு டிஸிப்ளினில் வருவது, நம் தேசத்துக்கு என்று என்ன உண்டோ அதோடு த்ருப்தியாயிருந்து, விதேசச் சரக்குகளில் மோஹத்தை விட்டு நம்முடைய பண்பாட்டைக் காப்பாற்றுவது, நம் நாட்டுப் பணம் அநியாயமாக வெளி தேசத்துக்குப் போகாமல் தடுப்பது, பல ஏழைகளுக்கு ஜீவனோபாயம் கிடைக்கப் பண்ணுவது - என்று இத்தனை அம்சங்கள் மில் துணியை பஹிஷ்கரித்துக் கதரை ஆதரிப்பதில் இருக்கிறதல்லவா?

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

---

முக்த புருஷனை அவன் அனுபவிக்கிறானாம்!

இது எப்படி இருக்கிறது என்று கேட்டால், பகவானுக்கு சமானமான போகம் எல்லாம் இவனுக்குக் கிடைக்கிறது என்று சொல்கிறாற்போல் இருக்கிறது! பகவான் மாதிரியே இவனும் ஆகிவிடுகிறான்!

அது எப்படி...? என்று ஒரு கேள்வி வருகிறது இங்கே! பகவான் மாதிரி இவன் ஆகிவிடுகிறான் என்றால் இவன் லக்ஷ்மிபதியாகி விட முடியுமா? இவன் சிருஷ்டிகர்த்தாவாக முடியுமா....?

இந்த இரண்டைத் தவிர மீதியெல்லாம் ஆகிவிடுவான் அவன்! இந்த இரண்டைத் தவிர என்பதை நாம் எப்படித் தெரிந்து கொள்வதாம்...?

லோகத்திலே நாம் கண்கூடாகப் பார்க்கிற ஒரு விஷயத்தைச் சொன்னால்தான் தெரியாத விஷயத்தைப் புரிந்து கொள்ள முடியும்!

வைகுண்டத்துக்குப் போகிற முக்த புருஷனையும் சுவாமி, அங்கேயுள்ள பகவானையும் சுவாமி என்று சரிசமமாக்கினால் அவனுக்கு என்ன ஏற்றம்! ஒன்றும் தெரியாதவனை சுவாமி என்று சொல்லி விட்டு, சதுர்சாஸ்திர பண்டிதரையும் சுவாமி என்றால் அது பொருந்துமா?

சுவாமி தேசிகன் இதை அழகாக எடுத்துச் சொல்கிறார் :

இங்கேயிருந்து ஒரு நகைக் கடைக்குப் போகிறார் ஒருத்தர். போய், மூவாயிரமோ நாலாயிரமோ கொடுத்துவிட்டு அதற்கு உண்டான தங்கத்தைக் கேட்கிறார். திருமாங்கல்யம் பண்ண வேண்டும் என்கிறார்.

கடைக்காரர் என்ன பண்ணினார்...? திரவியத்தை வாங்கி உள்ளே வைத்துக் கொண்டார். தராசை எடுத்தார்... ஒரு தட்டிலே தங்கத்தை வைத்தார்... இன்னொரு தட்டிலே நாலு குந்துமணியைப் போட்டார்...

"சமமா? சரியாக உள்ளதா?" என்று கேட்டார்.

இவரும் "சமம்தான்" என்று சொல்ல, அவர் தங்கத்தை எடுத்து உள்ளே போட்டு விட்டார்!

தங்கத்தையும் எடுத்துப் போட்டுவிட்டு, அவர் கொடுத்த திரவியத்தையும் உள்ளே போட்டுவிட்டு நாலு குந்துமணியைப் பொட்டலம் கட்டிக் கொடுக்கிறார்!

வந்தவர் நடுநடுங்கிப் போய்விட்டார்!

''என்ன! குந்துமணியைக் கொடுக்கிறீரே?"

"நீர்தானே இரண்டும் சமம் என்றீர்.... பேசாமல் வாங்கிக் கொண்டு போக வேண்டியதுதானே!"

"நான் சமம் என்று எதிலே சொன்னேன்...? எடையிலே சொன்னேன்... அதனால் குந்துமணி தங்கமாகி விட முடியுமா!"

இது கதை! பகவானுக்குத் துல்யமாக ஒருவன் இருக்கிறான் என்றால் என்ன அர்த்தம்...? லக்ஷ்மிபதியாக, சிருஷ்டி கர்தாவாக அவன் ஆகிவிட முடியமா என்ன...! பகவானைப் போல் எல்லாம் தெரிந்தவனாக இருக்கிறான் என்பது மட்டுமே பொருள்.

அப்படிப்பட்ட நிலை முக்த புருஷர்களுக்கு மட்டுமே ஏற்படுகிறது. வைகுண்டத்துக்குப் போனால்தானே அது கிடைக்கும்.... இப்போது நாம் என்ன பண்ணுவதாம் - இங்கே உட்கார்ந்திருக்கிறவர்கள் என்ன செய்வதாம்...?

சொல்கிறேன், அடுத்த வாரம்!

(தொடரும்)

# நரிகள்

"திருமணத்துக்கு வெளியே என்னோடு ஓர் உறவு வைத்துக் கொள்ள உனக்கு விருப்பமா?"

பதற்றமேயில்லாமல் சிரித்த முகத்துடன் மேலதிகாரி அஜய் குப்தா கேட்டவுடன் வித்யா பதறிப் போனாள். அவனோடு அவள் அத்தனை நேரம் விவாதித்துக் கொண்டிருந்த எம்ஐஎஸ் எனப்படும் தகவல்கள் அடங்கிய பேப்பர் அவள் கையில் நடுங்கியது. என்ன செய்வது இப்போது? தமிழ் சினிமா கதாநாயகி மாதிரி பளாரென்று கன்னத்தில் அடிப்பதா? கண்ணாடிச் சுவர்களுக்கு வெளியே மௌனப்படம் மாதிரி இயங்கிக் கொண்டிருக்கும் அலுவலகம் அப்படியே ஸ்தம்பிக்காதா? 'செருப்பு பிஞ்சிரும்டா ராஸ்கல்' என்று ஆங்கிலத்தில் எப்படிச் சொல்வது? அவளுடைய இன்னொரு மேலதிகாரியான தீபிகா கன்னா மாதிரி, செல்லமாக முகவாயைத் தட்டி 'டோன்ட் பீ நாட்டி அஜய்' என்று சொல்ல வேண்டுமா? அந்தச் செய்கைக்கு சரி என்று அர்த்தமா, வேண்டாம் என்று அர்த்தமா?

வித்யா பதறிப்போகையில் அஜய் குப்தா நிதானமாக அவளுக்கு ஒரு தம்ளர் தண்ணீர் எடுத்துக் கொடுத்துவிட்டு,

''பதறாதே பிளீஸ்... நீ திருமணமானவள் என்று எனக்குத் தெரியும். நானும்தான். உன் கணவர் நரசிம்மனை நீயும் என் மனைவி பூஜாவை நானும் எவ்வளவு நேசிக்கிறோம் என்பதும் நமக்குத் தெரியும். கடந்த இரண்டு மாதங்களாகத்தான் நாம் இந்த பிராஜெக்ட் தொடர்பாக ஒன்றாக வேலை செய்கிறோம். உன்னால் நான் ஈர்க்கப்படுகிறேன். அதை மனத்திலே வைத்துக் கொண்டு அவஸ்தைப்படுவதை விட, வெளியே சொல்வது நேர்மையானது என்று எனக்குத் தோன்றுகிறது. தவறு, சரி, பாவம், புண்ணியம், குடும்ப உறவின் புனிதம் எல்லாம் நேரத்திற்கு ஏற்பப் பொருள் மாறும் வார்த்தைகள். அதையெல்லாம் நினைத்துக் குழப்பிக் கொள்ளாதே. உனக்கு என்னால் புதிய உலகங்களைக் காட்ட முடியும். அலுவலக வேலையாய் இருவரும் வெளிநாடு செல்லும் ஏற்பாடுகள் செய்ய முடியும். நம் குடும்ப உறவுகளை நான் மதிக்கும் நேரத்தில், நம் அன்பைப் பகிர்வதில் என்ன தவறு வித்யா?"

தெருவில் போகிறவளை 'வாடி' என்று கையைப் பிடித்து இழுக்கும் செயல்தான் இது. ஆனால் மேலே தூவப்பட்ட ஜிகினா, பவிசு, பாலிஷ். எந்த ரசக்குறைவான நேரங்களிலும் பேச வேண்டிய நேர்த்தியைத்தான் ஐ.ஐ.எம்களில் சொல்லித் தருகிறார்களோ என்னவோ.

வித்யா பேப்பர்களோடு பனிச்சென்று வெளியேறினாள்.

அடுத்த நாள் சேல்ஸ் டாக்ஸ் மீட்டிங்கில் பதினைந்து பேர்களுக்கு நடுவே அஜய் பிரமாதமான பிராசண்டேஷன் ஒன்றைச் செய்தான். ஒரு ஸ்லைடிலிருந்து இன்னொன்றுக்கு மாறும் இடைப்பட்ட அவகாசத்தில் குறிப்புகள் எடுத்துக் கொண்டிருந்த வித்யாவின் காதில் 'உன் பதில் என்ன தேனே' என்று சொல்லிவிட்டு மேலே தொடர்ந்தான். மூன்றாம் நாள் மதியம் "லஞ்சுக்கு ட்ரைடெண்ட் போகலாமா. அங்கே டேட் பான் கேக் நன்றாக இருக்கிறது. உன் கைகளை மாத்திரம் நான் பிடித்துக் கொள்வேன்" என்றான். வித்யா சங்கடத்தில் தவித்தாள்.

அன்று சனிக்கிழமை. நரசிம்மன் துபாயிலிருந்து தொலைபேசியில் பேசும் நாள். 'வித்யா சௌக்யமா? சுஜிக்குட்டி எப்படி இருக்கு? நான் மார்ச்சில் மூன்று வாரம் வரேன்' என்றான். வித்யாவிற்கு தொண்டை அடைத்தது. பிரச்னையைச் சொல்வதா வேண்டாமா என்று தவித்து, 'வைச்சிடறேன்' என்றாள்.

ஞாயிறு காலை தலைவலியுடன் விடிந்தது. சுஜிக்குட்டியோடு விளையாடிவிட்டு சமைக்க ஆரம்பித்தாள். ஒன்றாவது மாடி ஃபிளாட் அது. நரசிம்மனின் துபாய் பணத்தில் வாங்கியது. மூன்றே வருஷம்

என்று போனவன். மூன்று வருஷம் முடிந்தும் வர யோசிக்கிறான். வேலை பார்த்தால் கல்யாணம் ஆவது சுலபம் என்று வித்யா வேலையில் சேர்ந்தாள். அழுக்குச் சேர்கள், பத்திலிருந்து ஐந்து, மஹாளய அமாவாசைக்கு லீவு என்று இருந்த ஆபீஸை ஒரு பன்னாட்டு நிறுவனம் இரண்டு வருஷங்கள் முன்னால் விழுங்கியது. அலுவலகத்தின் முகம் மெல்ல மெல்ல மாறியது. தென்னிந்தியக் கிழவர்கள் நிர்வகித்த இடங்களை வட இந்திய எம்பிஏக்கள் பிடித்துக் கொண்டனர். லட்சக்கணக்கான ரூபாய்கள் செலவில் இன்டீரியர் செய்யப்பட்டது. நேரமே பார்க்காமல் மனிதர்கள் உழைத்தனர். சம்பளங்கள் அதிகமாயின. பார்ட்டிகளில் இந்தி சினிமா போல் நடனங்கள் நடந்தன. வித்யாவிற்கு கிளரிகல் ஸ்தானத்திலிருந்து எக்ஸிக்யூடிவாகப் பதவி உயர்வு கிடைத்தது. நல்ல ஆக்சென்டில் பேசவும், முடியை வெட்டவும் வித்யா பழகினாள். நரசிம்மன் வெளிநாட்டில் இருக்கும் வெறுமையை விரட்ட அலுவலகத்தில் அதிக நேரம் செலவு செய்தாள். குட் பெர்ஃபார்மர் என்று பெயர் எடுத்தாள். அவள் அதிகம் மதித்த அஜய் குப்தா நிர்வாகத்தின் நம்பிக்கை நட்சத்திரம். மிக உன்னதமான டைகள் அணிபவன். அடிக்கடி பறப்பவன். இது அவனுடைய இன்னொரு முகமா? அல்லது நிஜமாகவே என்னிடம் ஈர்க்கப்படுகிறானா?



வித்யா எழுந்து போய் கண்ணாடியில் பார்த்தாள். அவளுடைய நிறத்துக்கும், பச்சைக் கண்களுக்கும் கல்லூரி நாட்களில் பலர் வழிந்ததுண்டு. ஆனால் கல்யாணம் ஆன பின்பு, குழந்தை பிறந்த பின்பு இன்னுமா அவள் அஜய் குப்தா போன்றவர்களைக் கவருகிறாள்?

மண்டை குழம்ப, கையில் கிடைத்த புத்தகத்தைப் புரட்டினாள். அலுவலக பார்ட்டியில் தன் பின் பக்கத்தில் விளையாட்டாகத் தட்டிய மேலதிகாரி கே.பி.எஸ். கில்லை எதிர்த்து வழக்குத் தொடர்ந்து வெற்றி பெற்ற ரூபன் பஜாஜ் - ஐஏஎஸ் ஒரு புகைப்படத்தில் தெரிய, வித்யா உடனே புத்தகத்தை மூடினாள்.

அடுத்த நாள் வித்யா, அஜய் குப்தாவின் அறைக்குப் போனாள். 'உங்களோடு பேச வேண்டும்' என்றாள். 'இந்த ஆரஞ்சுக் கலர் சேலையில் நீ மிகக் கச்சிதமாய் இருக்கிறாய்' என்றவன் ஃபோனில் தன் காரியதரிசியை அழைத்து, 'நோ கால்ஸ் - டில் ஃபார் மை பாஸ்' என்றான்.

பாரதி பாஸ்கர்

"வித்யா, யாராவது திடீரென்று கதவைத் திறந்து கொண்டு வந்தால் நீயும் நானும் ரிபோர்ட் பற்றி விவாதிக்கிறோம்... ம்... சொல் என் சின்னப் பறவையே!"

"அஜய், நான் சாதாரணக் குடும்பத்தி லிருந்து வந்தவள். என் கணவரை நான் மிக நேசிக்கிறேன். நீங்கள் சொல்வதற்கு நான் உடன்படவே முடியாது."

அஜய் கொஞ்சமும் அசராமல், "நீ சரி என்று சொல்லும் வரை நான் கேட்பேன்" என்றான்.

"உங்களுக்கு பல பெண்களோடு தொடர்பு இருக்கலாம், நான் அப்படிப்பட்ட வளல்ல."

அஜய் உடனே முகம் சிவக்க "நீ அப்படி நினைப்பதானால் உடனே வெளியே போக லாம். உன் மேலதிகாரி தீபிகா முதல் எத் தனை பெண்கள் என்னை வளைக்கப் பார்க் கிறார்கள் தெரியுமா? எனக்கு அவர்கள் உடனே கிடைப்பார்கள். ஆனால் எனக்கு நீ தான் தேவை. உன் மடியில் சிறு குழந்தை போல் கிடக்கவே என் ஆசை. என் வாழ்க்கை வெளியேதான் பளபளப்பு. உள்ளே நான் உன் போன்ற ஒரு பெண் ணைத் தேடும் மனிதன். என் மனைவி பூஜா வோடு நான் ஒன்றும் அத்தனை சந்தோஷ மாயில்லை. ஒரே ஒரு முறை நீ எனக்குத் தேவை. அந்த ஞாபகங்களோடு நான் இருப் பேன் வித்யா. உனக்குத் தெரியுமா, தலைமை அலுவலகத்தில் பதவி ஏற்றுக் கொள்ள என்னை மும்பைக்கு விரட்டுகிறான் என் பாஸ். அவள் பெற்றோர் அங்கே இருப்பதால் பூஜாவும் நிர்பந்திக்கிறாள். நான் பிடிவாத மாகச் சென்னையில் இருக்கிறேன். உனக் காகத்தான். நீ இதற்கு உடன் படுகிறாயோ இல்லையோ, நாம் நண்பர்களாகவாவது இருப்போம். எனக்கு உன்மேல் இருப்பது விருப்பம் இல்லை. தீவிர ஈடுபாடு, வழிபாடு, பைத்தியம்" என்றான்.

திரும்பவும் பதிலே சொல்ல முடியாது வித்யா வெளியேறினாள்.

காலை வீடு பரபரத்தது. சுஜிக் குட்டியை அம்மா வீட்டில் விட்டுவிட்டு இவள் அலுவலகத்திற்கு ஓட வேண்டும். சனியன் பிடித்த நாகம்மா இன்றும் லேட் - இவளாலேயே ஒவ்வொரு நாளும் பிரச்னை. வித்யா கோபத்தில் கொதித்த போது நாகம்மா நிதானமாக வந்தாள். கன்னம் அப்பம் மாதிரி வீங்கியிருந்தது.

"என்ன நாகம்மா, என்ன ஆச்சு..." என்றாள் வித்யா.

விஷயம் ரொம்பப் பெரிசுதான். இவள் வீட்டில் வேலை செய்துவிட்டு கட்டட வேலை செய்யப் போவாள் அவள். அதில் தான் அவளுக்கு வருமானம். இவள் வீட் டுக்கு வருவது இவளின் நல்ல மனசுக்காகவும், சாப்பிக்காகவும் தான். அந்தக் கட்டட வேலை வருமானம் இல்லாவிட்டால் அவளும் அவள் குழந்தையும் நடுவீதியில்தான் நிற்க வேண்டும். இதைப் புரிந்து கொண்டு மேஸ்திரி கொஞ்ச நாளாகவே வாலாட்டியிருக் கிறான். தன் பெண்டாட்டி சரியில்லை என்று புலம்பி யிருக்கிறான். ஜாக்கெட் வாங்கி வந்திருக்கிறான். நேற்று மேலே கைவைக்கத் துணிந்தான். இவள் போட்ட சத்தத்தில் ஐம்பது பேருக்கு மேல் கூடி ^விட்^ ^ார்கள். அவன் யார்? கண்ணகி வம்சத்தில் வந்தவள். அவள் புருஷன் கேடுகெட்டவன் தான். அதற்காக அவளை சீப்பாக நினைக்க முடியாது.



மேஸ்திரி வெறும் நாய். எந்தெந்த பெண் மசிவாள் என்று மோப்பம் பிடிக்கும் நாய். நைச்சியமாகப் பேசும் நாய். பேச்சுக்கும், ஆசை காட்டலுக்கும் மசிகிற அளவுக்கு அவள் கதி யற்றுப் போகவில்லை. அவள் பட்டினி கூடக் கிடப்பாள். அல்லது நாலு இடத்தில் வேலை செய்வாள். ஆனால் அவன் இச்சைக்கு உடன்படமாட்டாள். ரொம்ப நிர்ப்பந்தித்தால் முடியே போயிற்று என்று போய்விடுவாள். நாகம்மா உரத்த குரலில் பேசப்பேச, மேஸ்திரி வெறி கொண்டு அவளை கன்னத்தில் அடித்து விட்டான். அவள் யார் கூப்பிட்டாலும் போகிறவள் என்றும் இப்போது பத்தினி வேஷம் போடுவதாயும் குற்றம் சாட்டினான். நாகம்மா நிஜமாகவே கண்ணகியாகி விட்டாள். கையில் கிடைத்த விளக்குமாற்றை எடுத்து கை சளைக்கும் வரை மேஸ்திரியை அடித்தாள். அவன் ஓடியே போனான். ராத்திரி வந்து வம்பு செய்வானோ என்று குடிசை வாசலில் அவள் அரிவாளோடு காத்திருந்தாள். அதுதான் காலையில் தூங்கி விட்டாள்.



சுதந்தரத்திற்கு முன் இந்து-முஸ்லிம் நல்லுறவை பல இஸ்லாமியர்கள் கண்ணும் கருத்துமாக வளர்த்திருக்கிறார்கள். காஷ்மீர் முஸ்லிம்களின் ஒரு திருமணப் பாடலில், "இளைஞனே! நீ இப்பெண்ணை மணந்து கோகுல கிருஷ்ணன் போன்ற ஒரு அழகிய குழந்தையைப் பெற்று குர்ஆன் காட்டும் நெறிப்படி இல்லறத்தை நடத்துவீர்களாக" என்று வருகிறது.

— அ. சண்முகசுந்தரம்

**நா**கம்மா வேலை முடிந்து போய் ரொம்ப நேரம் ஆகியும் வித்யா எழுந்திருக்க வில்லை.

உயர் ஜாதி, பணம், உயர் படிப்பு, பெரிய வேலை என்ற ஐஏஎஸ் ரூபன் பஜாஜ் ஆகட்டும், தாழ்த்தப்பட்ட ஜாதி, வறுமை, படிப்பில்லாத நாகம்மா ஆகட்டும் - ஒரே கோட்டில் சந்திக்கிறார்கள். தங்களுக்கு வரும் அவமானங்களைப் பொருட்படுத்தாது தங்கள் பெண்மைக்கு மேலதிகாரிகளே இழுக்கு செய்ய முழ்பட்டாலும் எதிர்த்துப் போராடுகிறார்கள். இடையில் இருக்கும் அவள் போன்றவர்களுக்கு என்ன வந்து விட்டது. எது அவர்களைத் தடுக்கிறது?

ஐ.பி.எஸ் அதிகாரி ஒரு புலி, மேஸ்திரி ஒரு நாய் என்றால் அஜய் குப்தா ஒரு நரி. ஆகமொத்தம் ஆண் விலங்கு. கீழே வேலை செய்கிறவளை அடைவதும் அவர்களுக்கு ஒரு வெற்றி. நரி நேரம் பார்த்து வேலை செய்திருக்கிறது. புருஷன் வெளிநாட்டில் என்று அவள் வெளிப்படுத்திய வெறுமை தான் அவனுக்குக் கிடைத்த பச்சை சிக்னல்.

நல்லது. அவள் வழக்குப் போடும் ரூபன் பஜாஜூம் இல்லை. துடைப்பத்தால் அடிக்கும் நாகம்மாவும் இல்லை. ஆனாலும் அவள் விட்டுக் கொடுக்க மாட்டாள். அவளை மட்டுமல்ல; அவளது முகவரியான வேலையையும். 'எந்த ஃபோன் காலும் எனக்குக் கொடுக்காதே. என் பாஸ் தவிர'வை அவள் ஞாபகப்படுத்திக் கொண்டாள்.

இது நரிதான். ஆனால் சலசலப்புக்கு அஞ்சும் நரி. 'அஜய், அடுத்த முறை நீ எல்லை மீறிப் பேசினால் உன் பாஸிடம் நான் பேச வேண்டி வரலாம்' என்று சொன்னால் அஜயின் முகம் எப்படி மாறும் என்று கற்பனை செய்து பார்த்தாள். அவன் பிராஜெக்டிலிருந்து நீக்கப்படலாம். ப்ரமோஷன் போகலாம். ஆனால் 'சுதந்திரம் வேண்டும் போது அதிகப் பொறுப்புகளையும் அதிக வலிகளையும் சுமக்க வேண்டியிருக்கும்' என்பதை நினைவுபடுத்திக் கொண்டால் போராட சக்தி கிடைக்கும். வித்யா நிம்மதியுடன் சுஜியை அணைத்துக் கொண்டாள். ●

# சத்தமில்லாமல் ஒரு சமூகப் பணி...!

**1954-ல் தொடங்கி, சுமார் நாற்பது வருடங்களுக்கும் மேலாக கோவைவாசிகளுக்கு வெறும் பிரசவ ஆஸ்பத்திரியாக மட்டுமே செயல்பட்டு வந்த கஸ்தூரிபா காந்தி நினைவு மகப்பேறு மையம், இப்போது சமீபகாலமாக 'கஸ்தூர்பா காந்தி குடிநோய் போதை நீக்கும் சிகிச்சை மற்றும் அவர்தம் மறுவாழ்வு ஆராய்ச்சி மையமாய், 'காது கேளாதோர் வாய் மொழிப் பயிற்சிப் பள்ளி'யாய், பார்வையிழந்த பெண்களுக்குத் தொழில் கொடுக்கும் 'சக்தி திறனாலயமாய்' காந்தியக் கொள்கைகளை வலியுறுத்தும் 'காந்தி அருங்காட்சியகமாய்...' பல அவதாரம் எடுத்திருக்கிறது.**

கோவை அவினாசி சாலையிலிருந்து சிங்கநல்லூர் செல்லும் குறுக்குச் சாலையில் சுமார் 1 கி.மீ தூரத்தில் உள்ளது இந்த கஸ்தூரிபா காந்தி நினைவு மையம். மரங்களடர்ந்த சூழலில் இயற்கைக் காற்றை சுவாசிக்கும்போது, ஒருவித மூலிகை மணத்தையும் இதற்குள்ளே நுகர முடிகிறது. காரணம், இதற்குள் சித்த வைத்தியசாலையும், ஆயுர்வேத மருந்து தயாரிப்பும் நடைபெறுகிறது.

நாம் சென்றபோது 'குடிநோய், போதை நீக்கும் மறுவாழ்வு மையத்'தில் - குழு சிகிச்சை முறை நடந்து கொண்டிருந்தது.

"ஐயா... நான் ... நாலு பேர் மதிக்கிற... காலைத் தொட்டுக் கும்பிடற கோயில் பூசாரி. ஆனா, மொடாக் குடியன். இந்தக் குடிப் பழக்கத்துக்கு அடிமையாகி நான் பட்ட துன்பம் கொஞ்ச நஞ்சமல்ல. கட்டின பொண்டாட்டி புள்ளைகிட்டவே அடி உதைபட்டு... சொந்தங்க விலக்கி வச்சும் என்னால அந்தக் 'குடிய' விட முடியல... இப்ப நா நல்லாயிருக்கேன்னா இந்த மையம்தான் காரணம்...!"

"நான் பட்டங்கள் வாங்கினேன்... விளையாட்டுக்களில் பதக்கங்களும் வாங்கினேன்... அதன் மூலமா அரசாங்க வேலையும் வாங்கினேன்... ஆனா ஜாலியா பழகின இந்தப 'பழக்கத்தால...' படிப்பு, பெருமை, வேலை எல்லாமே தொலைச்சேன். ஆனாலும் இத்



• காது கேளாத சிறுவர்களுக்குப் பயிற்சி

ஒருங்கே ட்ரீட்மெண்ட் எடுக்கும் கொடுமையை நாம் இங்கு காண முடிந்தது!

இங்கு வரும் 'குடி' மகன்களுக்கு முதலில் அவர்களைப் பிடித்துள்ளது வெறும் பழக்கம் அல்ல... குடிப்பது நோய் என வலி

தக் குடிய வுட முடியல. இங்கே டாக்டர்கிட்டே வந்தபோது பாதிதான் எங்க ட்ரீட்மெண்ட்... மீதி உங்க மனக் கட்டுப்பாடுதான் வேணும்ன்னாங்க.... இப்ப நா மனக் கட்டுப்பாட்டோட புது வாழ்க்கைக்கு மீண்டுட்டேன்... இது எனக்கு வெறும் ஆராய்ச்சி மையமா தெரியல! ஒரு கோயிலா தெரியுது...!"

''நான்... நல்ல பிஸினஸ் மேன்னு பேரெடுத்தவன்... காசு வர வர, போதை வஸ்து பழக்கமும் அதிகமாச்சு... நாளாக ஆக இன்ன நாள், இன்ன கிழமைன்னு கூடத் தெரியாம குடிச்சிருக்கேன். விளைவு தொழில்ல ரெண்டு கோடி நஷ்டம்... குடும்பத்துல நிம்மதியில்ல... இப்ப இந்த புண்ணியஸ்தலம் என்னைக் காப்பாத்திடுச்சு..."

– 50, 60 பேருக்கு மேல் இருந்த அந்தக் குழு கூட்டத்தில் பெரும்பாலும் படித்தவர்கள்... பிஸினஸ் மேன்கள்... பொறுப்பு மிக்க அதிகாரிகள். (போலீஸ், ராணுவம் உட்பட). வங்கி, மின்சார வாரியத்தில் பணிபுரியும் அலுவலர்கள். இதில் பெண்களும் அடக்கம் என்பதுதான் மனதை என்னவோ செய்தது.

ஒரே வங்கியில் பணிபுரியும் கணவன்-மனைவி, ஜாலிக்காக 'வெளிநாட்டுச் சரக்கை' உபயோகித்து வந்தவர்கள், காலப் போக்கில் அதற்கு அடிமையாகி, தூக்கத்தில் எழுந்து பிதற்றும் தன் குழந்தைக்கும் அருந்தக் கொடுத்து (ஒரே மகன்) அதுவும் குடிக்கு அடிமையாகி, மூவரும்



• பார்வையற்ற பெண்களுக்குத் தொழிற்பயிற்சி

• சக்திக்கனல்

யுறுத்தப்படுகிறது. சாதாரணமாக மது அருந்த ஆரம்பித்த பத்துப் பேரில் இரண்டு பேர் குடி நோயாளிகளாகி விடுகின்றனர் எனப் புள்ளி விவரம் சொல்லுகின்றன. ஆனால் குடி நோயாளிகளைப் பொறுத்த வரை அவர்களுடைய குடும்பத்தவர்

களுக்கும், ட்ரீட்மெண்ட் கொடுக்க வேண்டியுள்ளது" என்கின்றனர் இங்குள்ள மனோதத்துவ டாக்டர்கள்!

"முதலில் 'குடிகாரன்' என்று உதாசினப் படுத்துவதும், அவமானப்படுத்துவமே ஒருவனை மிகக் கொடுமையான குடி நோய்க்கு ஆளாக்குகிறது...!" என்கின்றனர் அவர்கள்.

பதினைந்து படுக்கைகள் கொண்ட இந்த குடிநோய் மறுவாழ்வு மருத்துவமனையில் பத்து நாட்கள் கட்டாயம் தங்கி சிகிச்சை பெற வேண்டும். நோயின் தீவிரத் தன்மைக்கு ஏற்ற மாதிரி மேற்கொண்டு ஐந்து நாட்களும் தேவைப்படலாம். அத்தோடு மாதம் இருமுறை/ஒருமுறை தொடர்ந்து இங்கு வந்து சிகிச்சை பெற்றவர் குழு சிகிச்சை முறை (கலந்துரையாடல், ஒருவருக்கொருவர் மனம் விட்டுப் பேசுதல்) அனுசரிக்கச் செய்யப்படுகிறது.

**"இங்கு 'ஷாக்' ட்ரீட்மெண்ட் ஏதாவது...?" - என மனோதத்துவ ஆலோசகர் ஆனந்தனிடம் கேட்டோம்.**

"அப்படியெல்லாம் இல்லை. யாரோ சிலர் இங்கிலீஷ் வைத்தியத்தில் அப்படிச் செய்கிறார்கள். இது பெரிதாகப் பலன் தந்து விடுவதுமில்லை. முதலில், வருகிற நோயாளிகளுக்கு சுய கட்டுபாடு இருக்கிறதா எனப் பேசிப் பார்ப்போம். பொதுவாய் எல்லா குடிநோயாளிகளுக்கும் தனது குடிப் பழக்கத்தை நிறுத்த வேண்டும் என்கிற வலுவான எண்ணம் இருக்கும். அந்த எண்ணத்தையே இங்கு மருந்தாக்கி சிகிச்சை கொடுக்கிறோம். திடீரென மதுவை நிறுத்தும்போது உடல் பாதிப்பு, மன பாதிப்பு ஏற்படும். அதற்காகவே முதலில் மருந்துகள் கொடுக்கிறோம். இது ஆரம்பித்த கடந்த ஐந்து வருடங்களில் 820 பேர் சிகிச்சை பெற்றுள்ளனர். அவர்களில் குறைந்தது எண்பது சதவீதத்தினர் பரிபூரண குணமும் அடைந்துள்ளனர்."

டாக்டர் ஸ்ரீனிவாசன் (கோவை மெடிக்கல் சென்டர்) தலைமையில் இயங்கும் மருத்துவர் குழுவில் மொத்தம் நான்கு பேர்.

**"சரி... இதில் குணம் அடைந்தவர்கள் திரும்பவும் மது அருந்த நேரிட்டால்... மருந்துகளின் பாதிப்பு எதிர்வினை காட்டி விடுமே...?"**

"மருந்து உட்கொள்ளும் கால கட்டங்களில் குடித்தால் - குடித்துப் பார்ப்போமே என 'டெஸ்ட்' செய்தாலும், அப்படியே வாந்தி ஆகி விடும். அந்த நேரங்களில் உடனடியாக இங்கே கொண்டு வருவது அவசியம். அதேபோல் ஒரு வருடம் குழு சிகிச்சை முறை முடித்த பின்னாலும்கூட (மருந்து உட்கொள்ளாத கால கட்டத்தில்) இந்தப் பழக்கத்திற்கு ஆளாகி விடுவோரும் உண்டு. இச் சிகிச்சைக்குக் கட்டுப்பாடுதான் அவசியம்.

**"குழு சிகிச்சை முறை என்கிறீர்களே... அது சாதிப்பதென்ன...?"**

"இதில் நிறைய சாதிப்பது, போதிப்பது எல்லாம் குழு சிகிச்சை முறைதான்... ஒருவருக்கொருவர் மனம் விட்டுப் பேசுவது... குடியை விட்டதனால் ஏற்பட்ட அனுபவங்கள் பரஸ்பர பரிமாற்றம்... குடும்பத்தாரின் அணுகுமுறைகள்... எல்லாமே இந்த மாதாந்திரக் கூட்டம் மூலம்தான் நிவர்த்திக்கப் படுகிறது...!"

இந்த சிகிச்சைக்குக் கட்டணமாக (உணவு, தங்கும் வசதி, சிகிச்சை உட்பட) ரூ 1000 வசூலிக்கப்பட்டு வந்ததாம். இப்போது 2500 வசூலிக்கப்பட்டு வருகிறது.

**"சரி... இது சேவை ஸ்தாபனம்தானே... இலவசமாக அளித்திடலாமே...!" எனக் கேட்டோம்.**

"மற்ற நோய் போல அல்ல இது... குடிப்பதற்கு ஆயிரக்கணக்கில் செலவு செய்தவர்கள் மனம் திருந்தி வாழத்தான் இங்கு வருகிறார்கள்... அதற்கு இந்த 1000 ரூபாய் என்பது ஒரு பெரும் பிரச்னை அல்ல... அத்தோடு இலவசம் என்றாலே அதற்கு அங்கீகாரம் வேறு மாதிரியாக இருக்கும். மேலும் இங்கு சிகிச்சை பெறுபவர்க்கு சிகிச்சை, படுக்கை வசதியோடு உணவு முறைகளும், நாங்களே தயாரித்து தருகிறோம். பதினைந்து நாட்களுக்கு இந்த செலவு குறைந்தபட்சமேயொழியக் கூடுதல் அல்ல...! அதே நேரத்தில் இங்கு செயல்படும் 'தற்கொலை தடுப்பு

### பட்டுப் புடைவை போட்டி –2 –முடிவு

கின்னஸில் இடம் பெற்ற அந்த தம்பதியின் பெயர்கள்:

**சுஷ்மா, கௌஷல்**

சரியான விடை எழுதியவர்களுள் குலுக்கலில் தேர்வாகி, பரிசு பெறுபவர்:

**இலஞ்சி. ஆர்,**
**அவ்வையாப்பட்டி,**
**நீர்பழனி போஸ்ட்,**
**மாத்தூர் வழி,**
**புதுகை மாவட்டம்**

**வாழ்த்துக்கள்!**



ஆலோசனை மையத்தில் உதவி பெறுபவர்களுக்கு அனைத்தும் இலவசமாகவே செய்து தரப்படுகிறது...!''

**''தற்கொலை தடுப்பு ஆலோசனை என்றால்...?''**

''மனச் சோர்வு, மனத் தளர்ச்சி, மனக் குழப்பம் இவற்றின் பின் விளைவுகளே மனிதனுக்கு ஏற்படும் தற்கொலை எண்ணங்கள். இவை இருப்பவர்கள், அல்லது இவருக்கு இருப்பதாகக் கருதுபவர்கள் அவர்களை அழைத்து வந்தாலோ, ஃபோனில் தொடர்பு கொள்ள வைத்தாலோ அவர்களுடன் மனோதத்துவ ரீதியில் பேசி மனமாற்றம் செய்கிறோம். இது ஆரம்பித்த கடந்த ஒரே வருடத்தில் நூற்றுக்கணக்கிலானவர்களைத் தற்கொலை எண்ணங்களிலிருந்து தடுத்து வந்திருக்கிறோம்...!''

இது தவிர, காதுகேளாத சிறுவர்களுக்கான பயிற்சிப் பள்ளி, பார்வையிழந்த பெண்களுக்கான தொழிற் பயிற்சி நிலையமும் இங்கே இயங்கி வருகின்றன.

இந்த யோசனை - இது மாதிரியான அமைப்பை உருவாக்கும் எண்ணம் எப்படி வந்தது?

இதனை நடத்தும் மகாலிங்கம் மாரியம்மான் மணி விழா அறக்கட்டளையில் அங்கம் வகிப்பவரும், கஸ்தூரிபா நினைவு ட்ரஸ்ட் செயலாளருமான K.P பழனிச்சாமி (கவிஞர் சக்திக்கனல்) அவர்களை வினவினோம்.

''40 ஆண்டுகளுக்கும் மேலாக பிரசவ ஆஸ்பத்திரியாகச் செயல்பட்டு வந்த இந்த மையம் பக்கத்திலேயே ESI (Employees state insurance Hospital) வந்ததனால் இங்கு பேஷண்டுகளின் வருகை குறைந்தது. எல்லோரும் இதை விற்று விடலாம் (அறக்கட்டளை அங்கத்தினர்கள்) என யோசனை தெரிவித்தபோது ஐயா அவர்கள் (நா. மகாலிங்கம் - இதன் நிறுவனர்) இதை ஒரு சேவா ஸ்தலமாக மாற்றலாம் எனக் கருத்துத் தெரிவித்தார். அதன்படி முதலில் காந்தியின் வாழ்க்கையைச் சித்தரிக்கக் கூடிய 'காந்தி மியூசியம்' ஏற்பாடு செய்யப்பட்டது. அதில் காந்திய நெறிகளைப் பரப்பக்கூடிய அம்சங்கள் பிணைக்கப்பட்டன. 1991-ல் சித்தா ஹாஸ்பிடல் முதலிலேயே இருந்தது. பிறகு 1994-ல் இந்த மது அருந்துவோர் மறுவாழ்வு மையம். இதற்கு முக்கியமாக ஐயாவிற்கு யோசனை கொடுத்தவர்கள் இருவர். டாக்டர் ஏ. சீனிவாசன் (மனோதத்துவ மருத்துவர்) டாக்டர் தர்மலிங்கம் (சித்த மருத்துவர்) இது வளர வளர, மனிதனுக்கு வாழ்க்கையில் இருமுறை தற்கொலை எண்ணம் வரும் என அறிந்து அதற்கான முன் முயற்சிகள் எடுத்தோம். தொலைபேசித் துறை உதவியோடு (மூன்றிலக்க எண்) இதைத் துவங்கி ஒரு வருடம் ஆகிறது. காது கேளாதோர் பள்ளி கொண்டு வர ஏற்பாடு செய்தார் ஐயா. அதை மிகப் பெரிய பள்ளியாக மாற்றும் திட்டமும் உள்ளது...!'' என்றார்.

— கட்டுரை, படங்கள்:
**கா.சு. வேலாயுதன்**



# நினைத்தேன் வந்தாய்

நினைப்பவர் விஜய். வருவது தேவயானியும் ரம்பாவும். ஸோ, முக்கோணம். முக்கோணக் காதலில் யாராவது தியாகியானால்தானே சரி? தியாகத்தின் திருவுருவம் தேவயானி.

வெறுமனே பெண் பார்க்க வருபவரைப் புருஷனாகவே எண்ணிக் கொண்டு, படபடவெனப் பேசி, நாணிக் கோணி, அழுது, சிரித்து ஆர்ப்பாட்டம் பண்ணியிருக்கும் தேவயானி, இதற்கு முன் இத்தனை சிரத்தையாக நடித்ததாக ஞாபகமில்லை. சில இடங்கள் ஓவர் ஆக்டிங் என்று தோன்றினாலும் படம் முடிந்து வெளியே வந்தபின்பும் மனத்தில் நிற்பது அவரே.

தான் கணவராகவே எண்ணிக் கொண்டிருக்கும் விஜய், தன் தங்கையைக் காதலிக்கிறவர் என்று கிளைமாக்ஸில் தெரிகிறபோது சடாரென்று பல்டியடிக்கச் சரியான காரணம் படத்தில் இல்லை.

அக்காவுக்காக ரம்பா விட்டுக் கொடுக்க முன்வந்த தியாகத்தை அவர் புரிந்து கொண்டார் என்று டைரக்டர் சொல்வாராயிருக்கும். காட்சிகள் அங்கே அழுத்தமாக இல்லாததால் அது ஒட்டவில்லை.

அது எப்படி பந்து பைசா மிட்டாய், பலப்பத்தை தியாகம் செய்வது போலக் காதலை, காதலரைத் தியாகம் செய்ய சினிமாவில் வரிந்து கட்டிக் கொண்டு, முன்வருகிறார்களோ?

ஆனால், சும்மா சொல்லக் கூடாது! ரம்பா செய்கிற தியாகத்தை சிரித்துக் கொண்டே ரசிக்க முடிகிறது!

மகாமகா உயரத்திலிருந்து தொங்கும் கயிற்றைப் பற்றிக் கொண்டு ஊஞ்சலாடி அறிமுகமாகிற ரம்பா, திடீரென்று புடைவைக்குத் தாவி, சென்டிமென்ட் ததும்பப் பேசுவதெல்லாம் படத்தின் உச்சபட்ச நகைச்சுவை. (பாப்பாவை ஏம்ப்பா படுத்தறீங்க?)

படத்துக்குப் படம் மெச்சூரிடி கூடி வருகிறது, விஜய் நடிப்பில். சமீபத்திய வெற்றிகளால் அவரது முகமும் உடலும் ஒரு வார்னிஷ் கோட்டிங் பெற்றிருக்க, அடக்கமான நடிப்பில் ரசிகர்களை அள்ளிக் கொண்டு போகிறார்.

டைரக்டர் செல்வபாரதி, சுந்தர் சியிடம் இருந்தவர். அதே ரக, ரசித்ததும் மறந்துவிடக் கூடிய காமெடி வசனங்களால் படத்தை நிரப்பியிருப்பதும் நிறைய நபர்களைப் படத்தில் உலவ விடுவதுமாக குருவை அடியொற்றியிருக்கிறார்.

பழசானாலும் கேட்க முடிகிற ட்யூன்களுக்கு தேவா. புதுசு ஒன்றுமில்லாவிட்டாலும் பளிச்சென்று காட்சிகளை (முக்யமாக ரம்பா) விரிக்கிற ஒளிப்பதிவுக்கு இளவரசு.

புராதனமான கதை. விறுவிறுப்புக்காக மட்டும் ஒருதரம் பார்க்கலாம்!

— ஆர்.பி.ஆர்.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)
Half Yearly Subscription ; India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)

